நெஃப்சுவாஹியின்

# நறுமணத் தோட்டம்

## அரேபிய காமசூத்திரம்

ஆங்கிலம் : சர் ரிச்சர்ட் பர்ட்டன்
தமிழில் : பெரு. முருகன்



# குறிப்பு

1850ம் வருடத்திற்குமுன்பே, அல்ஜீரியாவிலிருந்த ஃப்ரெஞ்சு இராணுவ அலுவலர் ஒருவரால் ‘நறுமணத் தோட்டம்’ ஃப்ரெஞ்சு மொழியில் மொழிபெயர்க்கப்பட்டது. 1876ல் இந்நூல் பதிப்பானது, சாய்ந்த எழுத்துகள் கொண்டு அச்சிடப்பட்டது. ஆனால் மொத்தத்தில் இருபது பிரதிகளே அச்சிடப்பட்டதாகச் சொல்லப்பட்டதாலும், அது கிடைப்பதற்கு அரிதாகவும் விலை அதிகமாகவும் இருக்க, அதன் நூதனமான பாணியினால், படிப்பதற்கு கடினமாகவும் அயர்ச்சியை உண்டுபண்ணக் கூடியதாகவும் இருந்தது. இருப்பினும், அண்மையில் ஒரு போற்றத்தக்க பதிப்பு பாரிஸ் நகரில் விநியோகிக்கப்பட, அதில் மொழிபெயர்ப்பாளரின் குறிப்புகளும் விமசர்னங்களும் உள்ளடக்கப்பெற்றது. அந்த மொழிபெயர்ப்பு ஆக்கப்பட்டதிலிருந்து, அல்ஜீரிய மொழியை நன்கு அறிந்துகொண்டதனால், அதன் ஒளியில் திருத்தப்பட்டு மறுபதிப்பு செய்யப்பட்டது. கடைசிப் பதிப்பும் நிகழ்கால மொழிபெயர்ப்பும் (தீர்க்கமானதும் மூலமொழியிலிருந்து சற்றும் பிறழாததும்) மற்றும் பதிப்புமானது இப்போது முதன்முறையாக ஆங்கிலத்தில் வெளியிடப்படுகிறது.

உள்ளடக்கம்

ஆங்கில மொழிபெயர்ப்பாளரின் குறிப்புரை

சேக் நெஃப்சுவாஹிக்கு மரியாதை செலுத்துதல். (1876ம் பதிப்பில் கண்டிருந்தபடி, வாசகர்கள் இந்நூலைப் படிக்கும்போது ஒரு விஷயத்தை நினைவில் இருத்தவேண்டும். அதாவது, 1850க்கு முன்பே, அல்ஜீரிய மொழியை நன்கு அறியாத, குறிப்பாக கபலியாவை தெரியாதபோதிலும், நூலின் குறிப்புகள் எழுதப்பட்டன. எனவே முற்றும் அறிந்தவர், இந்நூலின் எளிமையான தவறுகள் கண்டு ஆச்சர்யப்படுவதில்லை.)

ஷேக் என்ற பெயர் மரபுத்தொடர்ச்சியாக வருவது, நூலாசிரியரின் பெயருக்கு முன்பாக வருவது.

இந்நூலின் உள்ளடக்க விஷயங்கள், அதிலுள்ள பல தவறுகளைக் கண்டபோது, அவை பிரதியெடுத்தவரின் அலட்சியத்தையும் அறியாமையையும் காட்டுகிறது. அதேநேரம், இந்த ஆய்வு நூல், மகாவல்லமை பொருந்திய, புலமைவாய்ந்த நபரின் கைகளிலிருந்து புறப்பட்டது எனவும், துனிஸை ஆண்டுகொண்டிருந்த பே அவர்களின் பெயரை தவறுதலாகப் பயன்படுத்தினாலும், ஆறாவது நூற்றாண்டின் தொடக்கத்திலேயே அதாவது, ஹிஜிரா 925 வாக்கில் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவு.

ஆசிரியரின் பிறப்பிடம் பற்றி கேள்வியெழும்போதில், அராபிகள் தம் பெயர்களுக்கு முன்னால் தம் பிறப்பிடங்களின் பெயர்களைப் போடுவது வழக்கம் என்பதினால், அவர் நெஃப்சாவூவா என்ற டவுனில் பிறந்திருக்க வேண்டும். அது ஸெப்பகா மெல்ரிர் என்ற ஏரிக்கரையின் மாகாணத்தில் அதாவது, துனிஸ் அரசின் மேற்குப் பிரதேசத்தில் இருந்திருக்க வேண்டும்.

ஷேக் அவர்களே, தான் துனிஸில் வாழ்ந்ததாகக் குறிப்பு எழுத ஒருவேளை, இந்த நூல் அங்கே எழுதப்பட்டிருக்கலாம். பாரம்பரிய வழக்கப்படி, குறிப்பிட்ட ஒரு விஷயம், தன் அந்திமப்பொழுதில் எளிமையான சுவையில் இந்நூலை எழுத வைத்திருக்கலாம்.

சட்டம், இலக்கியம் மற்றும் மருந்துகளில் அவருக்கிருந்த அறிவு, துனிஸின் பேவுக்கு சொல்லப்பட்டிருக்க வேண்டும். அப்பகுதியை ஆட்சி செய்தவன், அவருக்கு ஒரு காதியின் அந்தஸ்தை வழங்கியிருக்கலாம். அதேசமயம், அவர் பொதுவிழாக்களில் தம்மை ஈடுபடுத்திக்கொள்ள முடியாது இருந்திருக்கலாம். எனினும் பே அரசுக்கு எதிர்ப்புத் தெரிவித்து அதனால் பாதகமான போக்கு உண்டாகிவிடுமோ என்ற அச்சத்தில், இருக்கும் பணியை முடித்துக்கொடுக்க கொஞ்ச காலம் வேண்டும் எனக் கேட்டிருக்கலாம்.

இந்த அனுமதி வழங்கப்பட்டவுடன், தன் மனதை ஆக்கிரமிப்பு செய்த இந்நூல் செய்த காலதாமதத்தினால் அவருக்கு காதியின் பணியை செய்யமுடியாமைக்கு காரணமாக இருந்திருக்கலாம். நெஃப்சுவா மாவட்டமானது, தரைமட்டத்தில் பல கிராமங்களைக் கொண்டிருந்தது. தவிர, அதிக பப்பாளி மரங்கள் மற்றும் மத்திய பகுதியில் பல நீர்த்தேக்கங்களையும் கொண்டிருந்தது. யாத்ரீகர்கள் அந்த நிலத்தை நெஃப்சுவா என்று அழைத்தனர். காரணம், அங்கு ஆயிரக்கணக்கான 'சுவா'க்கள் அதாவது, ஆயிரக்கணக்கான இஸ்லாமிய துறவிகள் இங்கே புதைக்கப்பட்டிருப்பதாலும், முதன்முதலில் இதன் பெயர் எல் அஃபௌன் சௌயியா என்றிருக்கலாம் என்றும் பிற்பாடு அது நெஃப்சுவா என்று ஆகியிருக்கலாம் என்று கூறப்படுகிறது. அராபிய வரலாற்று ஆசிரியர்கள், இஸ்லாமின் தோற்றத்தைக் காட்டிலும், உள்ளூர்வாசிகளின் பெயர்கள் பழமையானவை என்றும், அராபிய சொற்பிறப்பியல் இதற்கு ஒத்துப்போகவில்லை என்றும் கூறுகிறார்கள். நெஃப்சுவா நகரம், கற்களாலும் செங்கற்களாலும் கட்டப்பட்ட சுவரால் சூழப்பட்டிருந்தது. அதற்கு ஆறு வாயில்களும் ஒரு மசூதியும் குளியலறைகளும் ஒரு அங்காடியும் அமைந்திருந்தன.

இந்தச் சூழ்நிலையில் எழுதப்பெற்ற இந்நூலானது, இப்போதிருக்கும் நூலின் சுருக்கமாகும். அவர் அந்த நூலை 'பிரபஞ்சத்தின் விளக்கு' என்று அழைத்தார்.

இந்தப் பதிப்பானது, எந்தவிதத்திலும் ஆதாரபூர்வமான கருத்தால் ஆதரிக்கப்படவில்லை. தவிர, ஷேக் நெஃப்சுவாஹி சாதாரண ஒழுக்கசீலரே என்பதை ஏற்றுக்கொள்ள முடியாது. ஒருமுறை, இந்நூலைப் பார்த்தாலே போதும் - இதன் ஆசிரியர் பன்முறை புகழப்பட்டிருக்கிறார் என்பது விளங்கும். அராபியர்களின் வாழ்வுமுறைக்கு எதிராக, இந்நூலில் விளக்கவுரை ஏதுமில்லை. ஒருவேளை, இந்நூலில் எழுதப்பெற்ற பாடமாக இருக்கலாம் அல்லது அது தன்னுள் இருக்கும் கருத்துகளால் அச்சமூட்டியிருக்கலாம். எனினும் மற்றெல்லா நூல்களைக் காட்டிலும் இந்த நூலுக்கு விளக்கவுரை தேவைப்படும் என தேவையற்று நான் கூறுகிறேன். ஆழ்ந்து சிந்திக்கவும் பணிபுரியவும் இதில் மாபெரும் கேள்விகள் எல்லாம் கேட்கப்பட்டுள்ளன.

தங்களின் சொந்த விருப்பத்தின்பேரில் ஒரு ஆணும் ஒரு பெண்ணும் கூடிக்களித்திடும் அந்த இன்பத்தை ஆராய்வதைக் காட்டிலும் வேறென்ன இருக்கமுடியும். அந்த சொந்த விருப்பமென்பது அவர்களின் குணாதிசயம் ,உடல் நலம், உளப்பாங்கு, மற்றும் அக்காலத்தில்,

அவ்விடத்தில் இருக்கக்கூடிய சட்டம் ஆகியனவற்றை உள்ளடக்கி, இவற்றையெல்லாம் தத்துவவாதிகள் ஆராய்வது அவர்களின் கடமை. (புலன்களின் இன்பங்களை அறிவார்ந்த இன்பத்தோடு ஒப்பிட்டுப் பார்க்க நாம் பயங்கொள்ளலாகாது. இயற்கையில் விளையும் இன்பங்களில் இரண்டு வகை உள்ளதென்றும், அதிலொன்று விலக்கப்படக்கூடியதென்ற மாயையில் நாம் விழலாகாது. உயர்ந்த இன்பமே மகா சிறப்பு வாய்ந்தது. Essai de Philosophie Morale, par M.de Maupertius, Berlin,1749.) நான் இந்த விடுபடுதலை என் குறிப்புகள் கொண்டு நிரப்ப முயற்சித்திருக்கிறேன். மற்றும் பல்வேறு துறை அறிஞர்களோடு, இதுபற்றி கலந்தாலோசிக்கவும் நான் தயங்கவில்லை. நான் இவ்விடத்தில் என் நன்றியை அவர்களுக்கு தெரிவித்துக்கொள்கிறேன்.

காமம் சார்ந்த விஷயங்களைப் பற்றி, இதர ஆசிரியர்கள் எழுதிய நூல்களோடு ஷேக்கின் நூலை ஒப்பிடக்கூடாது. அதே நேரத்தில், ஏரிடினின் ‘இல்லறக் காதல்’ மற்றும் பிரெஞ்சு எழுத்தாளரான இரேபேலைஸ் முதலானவற்றை இந்த நூலானது நினைவுப்படுத்தும். இந்த நூலைப் படிக்கும்போது பிரெஞ்சு எழுத்தாளரின் ஞாபகம் அடிக்கடி வந்ததால், அவரின் எழுத்துகளைக் குறிப்புகளாக எழுதியிருக்கிறேன்.

எனினும் இவ்வாராய்ச்சி நூலானது ஒப்பிடமுடியாத அளவிற்கு புகழப்படுவதன் காரணம், கரைபுரளும் காமமும், ஆபாசமான விஷயங்களும் இதில் இருப்பதுதான். மேலும் இந்நூலின் கருத்துகளுக்கு ஆசிரியர் மிகமுக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்.

ஆசிரியர் இந்நூலின் பல இடங்களில், இஸ்லாமியர்களின் புனிதநூலான திருக்குரானை உதவிக்கு அழைத்திருக்கிறார்.

இந்நூல், ஷேக் நெஃப்சுவாஹியின் தனி முயற்சியல்ல என்பதையும் நான் சொல்லிக்கொள்கிறேன். அதில் சில பகுதிகள் அராபிய மற்றும் இந்திய எழுத்தாளர்களிடமிருந்து பெறப்பட்டவை. உதாரணத்திற்கு, இந்நூலில் வரும் மோக்கைலமா, சேதா பற்றிய குறிப்புகள் முகமது பின் தெஜாரி எல் தாபெரி அவர்களிடமிருந்து கடன் பெறப்பட்டவை. மற்றும் கலவியின் பல்வேறு நிலைகள் யாவும் இந்திய அறிவாளிகளிடமிருந்து கடன் பெற்றவை. எனவே, தனக்கு முன்பிருந்த ஆசிரியர்கள் பலபேரின் ஆற்றலை இவர் இந்த நூலில் பயன்படுத்தியிருக்கிறார். இருப்பினும் அவருடைய நூல்கள், அவருக்கு முன்பிருந்தவர்கள் இவ்விஷயத்தில் குழந்தையாக இருந்ததைக் கூறுகிறது.

பல விஷயங்களைக் கூறும் அவரின் இந்நூல், அராபியர்களின்

பொதுவான வழக்கத்தைப் பற்றி ஒன்றும் சொல்லாதது வருத்தத்தை அளிக்கிறது. நான் பழைய ரோமானியர்கள் மற்றும் கிரேக்கர்கள் ஆகியோரின் உலகளாவிய தேர்ந்தெடுப்பைச் சொல்கிறேன். அதாவது, பெண்ணைக் காட்டிலும் பையனையே தேர்ந்தெடுப்பர். தவிர பெண்களை, பையனாகவே பார்ப்பர்.

இந்நூலில் சொல்லப்பட்டுள்ள மற்றொரு விஷயம், பெண்கள் தமக்குள் அனுபவித்து மகிழும் ஓரினச்சேர்க்கையே. இதைப்பற்றி ஒன்றும் சொல்லாத ஆசிரியர், மிருகங்களைப் புணருவது பற்றியும் மௌனம் சாதிக்கிறார். பரவாயில்லை. அவர் நூலில் விளக்கும் இரண்டு கதைகளில், இரண்டு பெண்களின் மோகத்தழுவலையும், மற்றொரு பெண்ணானவள் கழுதையைப் பிடித்து கசக்குவதைப் பற்றியும் கூறுகிறார். ஆக, இவைபோன்ற விஷயங்களை அவர் அறிந்துள்ளார். எனவே, இவைபோன்ற விஷயங்களை குறிப்பிட்டுப் பேசாதது மன்னிக்கமுடியாதது. எவ்வகையான விலங்குகள் ஆணோ அல்லது பெண்ணோ புணருவதற்கு ஏற்றவை. அவை தரும் இன்பங்கள் யாவை, புணருவதால் எவ்வகையான விளைவுகள் நேரிடும் என்பதைச் சொல்லியிருக்கலாம்.

கடைசியாக, ஷேக் அவர்கள், அழகான பெண்ணின் வாயையோ அல்லது கையையோ அதேசமயம் பெண்ணுறுப்பைச் சுவைப்பதனால் உண்டாகும் இன்பத்தைப் பற்றியும் கூறவில்லை. (பிருஷ்டத்தின் வாசல், பிணநாற்றம் எனக்கூறும் ஃபேபூலஸ், அது உண்மையெனில், அல்குலைச் சுவைப்பதை நீ எவ்விதம் உரைப்பாய்?

MARTIALIS BOOK XII]

# முன்னுரை

அடிவயிற்றுப் பகுதிகள் ஒன்றிணைவதில் (அராபிய வார்த்தையான ‘அனா’வானது வயிற்றின் கீழ்ப்பகுதியை, மயிர்கள் முளைக்கும் இடத்தை, அந்தரங்க உறுப்பு இருக்குமிடத்தைக் குறிக்கிறது) ஏற்படும் இன்பமானது கூடியவிரைவில் முடிவுக்கு வரப்போகிறது. உலக்கையை இயக்கும் ஆணும், காம அசைவுகளை மேற்கொள்ளும் பெண்ணும் இறுதியில் உச்சகட்டத்தை அடைகின்றனர்.

வாயில், இரு கன்னங்களில், கழுத்தில் முத்தமிடுவதும், சுத்தமான

இதழ்களைச் சுவைப்பதும், தகுந்த சமயங்களில் எழுச்சி உண்டாக்கச்செய்யும் விதி கடவுளின் பரிசாகும். கடவுளானவர் பெண்களின் மார்பில் முலைகளை வைத்தும், முகவாயை செழுமையாகச் செய்தும், அவள் கன்னங்களுக்கு அற்புதமான வண்ணங்களையும் தந்திருக்கிறார். (கலவியில் நிகழும் அசைவுகளில் ஆசிரியர், ஆணுக்கு ‘DOK’ என்ற வார்த்தையினையும், பெண்ணுக்கு ‘HEZ’ என்ற வார்த்தையினையும் உபயோகம் செய்திருக்கிறார். இந்த இரு வார்த்தைகளில் முதல் வார்த்தையின் பொருளானது, நுழைத்தல், அடித்தல் மற்றும் துவைத்தல் என்பதாகும். இது உரலில் இயங்கும் உலக்கைக்கு ஒத்ததாகும். இரண்டாவது வார்த்தையானது, உணர்ச்சிவசப்பட்டு களிப்பை, காமத்தை எதிர்பார்த்து ஆட்டுதல் என்பதாகும்.

செழுமைவாய்ந்த முகவாய்க்குப் பெயர் GHEBA என்பதாகும். அராபியர்கள் குண்டான பெண்களையே விரும்புவர். அவர்கள் கலவியை உணர்த்துவது எதுவாயினும் அது அவர்களுக்கு அழகே. அதனால் பெண்கள் தம் பருமனால் வயிற்றில் உண்டாகும் மடிப்புகள் அதீதமான காமக்கிளர்ச்சியை உண்டுபண்ணும்.)

மேலும் அவர் அவளுக்கு, அளவில்லா காதலைச் சொல்லும் கண்களும், தீட்டப்பெற்ற கத்தியெனும் கண் இமைகளையும் தந்திருக்கிறார்.

மேற்கொண்டு அவர் அவளுக்கு, வட்டமான வயிற்றையும் அழகான உந்திச்சுழியினையும் கம்பீரமான முக்கோணத்தையும் கொடுத்திருக்கிறார். கடவுளானவர் இவ்விடத்தில்தான் போர்புரியும் அரங்கைப் படைத்திருக்கிறார். இந்த சதைத்திரள் அரங்கு, பிடரியுடைய சிங்கத்தின் தலையை ஒத்திருக்கிறது. அதுவே அரவணை (அரவம் என்றால் பாம்பு. அணை எனில் அணையிட்டுத் தடுத்தல் அல்லது அணைத்துக்கொள்ளுதல்) ஐய்யோ!அவளின் கதவுக்கு அருகே எத்தனையோ ஆண்களின் மரணம் நிகழ்ந்துள்ளது. அவர்களில் எத்தனைபேர் கதாநாயகர்கள்! (உறுப்புகள் இணைந்திருக்கும் அவ்வேளையில், ஆசிரியர் ‘டோக்’ என்ற வார்த்தையை ஆண்களுக்கும், ’ஹெஷ்’ என்ற வார்த்தையை பெண்களுக்கும் பயன்படுத்தியிருக்கிறார். இவற்றில் முதல் வார்த்தையானது இடித்தல், தாக்குதல், குத்துதல் போன்ற அர்த்தங்களைத் தருகிறது. இதுவே உச்சகட்ட போரின்போது உலக்கையின் இயக்கம். இரண்டாவது வார்த்தையானது காமம் மிகுந்த, உணர்ச்சிவசப்பட்ட, செழுமைமிகுந்த பெண்ணால் இடுப்பை அசைப்பது.)

(கெபா என்ற சொல் செழுமைவாய்ந்த இரட்டை முகவாயைக்

குறிக்கிறது. அராபியர்கள் குண்டான பெண்களையே விரும்புவர். குறிப்பாக, யோனியை சுட்டிக்காட்டும் எதையும் அவர்கள் அழகு என ஆராதிக்கின்றனர். இவ்வாறு வயிற்றின் மேல் விழும் மடிப்புகளே அவர்களை குண்டாகச் செய்து, அராபியரின் கண்களில் கிளர்ச்சியை உண்டுபண்ணுகிறது.)

கடவுளானவர் இதை ஒரு வாய், ஒரு நாக்கு, இரண்டு உதடுகளுடன் [பெண்ணுறுப்பு உதடுகள்] அலங்கரித்தார். இது மணல்வெளி பாலைவனத்தில் இருக்கும் கஜெல்லி என்கிற அழகிய மானின் குளம்புகளை ஒத்திருக்கும்.

இது பிரமாதமான தூண்களால் தாங்கப்பட்டு, கடவுளின் வல்லமையை, ஞானத்தை பரிசோதிக்கும். அவை முழு நீளமானது அல்ல, குட்டையானதும் அல்ல. அவை முட்டிகள், ஆடுசதைகள், கணுக்கால்கள், பாதங்கள் என அழகுபடுத்தப்பட்டு, அவைகளில் விலைமதிப்பற்ற வளையங்கள் அணியாக சூட்டப்படும்.

பின் சர்வவல்லமை படைத்த அவர் பெண்ணை, பிரகாசம், செழுமை மற்றும் சந்தோஷக் கடலில் மூழ்கடித்து, அவளுக்கு உயர்வகை ஆடைகளை அணிவித்து, அற்புதமான கச்சைகளையும் ஆசையைத் தூண்டும் சிரிப்பையும் தந்தார்.

ஆக, பெண்ணையும் அவள் அழகையும், அவளின் பசிகொண்ட தேகத்தையும், படைத்த அவரை நாம் உயர்த்தி புகழுவோம். அவளுக்கு கூந்தலையும், அழகான உருவையும், வீங்கும் முலைகளையும் பல்வேறு வழிகளில் ஆசைகளைத் தூண்டுவதை அவளுக்குத் தந்தார்.

பிரபஞ்சத்தின் அதிமேதாவியான அவர், அவர்களுக்கு வசீகரித்து மயக்கும் பேரரசை அருளியுள்ளார். எல்லா ஆண்களும் பலவீனமானவரோ, பலம்வாய்ந்தவரோ. பெண்களின் காதலுக்கு பலவீனப்பட்டு அடிமையாவதுதான் ஒரேவழி. நாம் சமுதாயமாக, சிதறிப்போக, புலம்பெயர்ந்து செல்ல பெண்களே காரணம்.

காதல்கொண்ட இதயத்தை படைத்திருப்போர், தனது காதலியிடம் இருந்து பிரிந்திருந்தால், தன் இதயத்தை காதல் தீயில் ஆழ்த்துகின்றனர். அவர்கள் சீர்கெட்டநிலையில் அடிமைத்தனத்தில் இருப்பதாக உணர்கின்றனர். அவர்கள் தம் காமவிருப்பங்களில் ஏற்றத்தாழ்வுகள் இருப்பதாக எண்ணி வருந்துகின்றனர். இதெல்லாம் பிரிந்தவரிடம் தொடர்புகொள்ள வேண்டும் என்று எரிகிற ஆசையே காரணம்.

கடவுளின் பணியாளனான நான், அழகான பெண்களிடத்து காதலில் விழாது, யாருமே தப்பிக்க இயலாது என்பதற்காக அவரிடத்தில்

நன்றியை கூறிக்கொள்கிறேன். மற்றும் ஒருவராலும் பெண்களை தம் சொந்தமாக்கிக்கொள்ளும் விருப்பத்தை, மாற்றத்தினாலோ, பிரிந்துசெல்வதினாலோ அல்லது தப்பிச்செல்வதினாலோ தடை செய்துவிட முடியாது.

நான் ஒரே ஒரு கடவுள்தான் உள்ளாரென்றும், அவருக்கு உதவியாளர் யாருமில்லை என்றும் அறுதியிட்டுக் கூறுகிறேன். நான் அவரின் இறுதி நாள் தீர்ப்புக்காகக் காத்திருக்கிறேன்.

அதேபோல், நமது மேதையும் நம்மை ஆள்பவனுமான கடவுளின் பணியாளனும் தூதுவனுமான எல்லா தீர்க்கதரிசிகளில் சிறந்தவனுமான முகமதுவுக்கு நான் பிரமாணம் செய்கிறேன். (அவருக்கும் அவரின் குடும்பத்தாருக்கும் சீடர்களுக்கும் கடவுளின் ஆசிர்வாதமும் இரக்கமும் உண்டாவதாக.) (முகமது அவர்கள், தமது நம்பிக்கையாளரிடம் அவருக்காக, கடவுளை வணங்கி அவரை பிரார்த்தித்துக்கொள்ளச் சொல்கிறார். இந்தக் கட்டளைவாயிலாக முஸல்மான்கள் யாரும் அவர்களின் நபியின் பெயரை, ‘கடவுளின் ஆசிர்வாதங்களை உடையவர்’ என்ற சொற்றொடர் அன்றி, எழுதவோ அல்லது உச்சரிக்கவோ கூடாது என கட்டளை பிறப்பிக்கப்படுகிறது] நான் அந்த பயங்கர கணத்தில், உரிய தண்டனை தரப்போகும் நாளுக்காக பிரார்த்தனை செய்துகொண்டிருக்கிறேன்.

## இந்நூலின் மூலம்

‘உலகின் ஒளிவிளக்கு’ என்ற சிறுநூலுக்குப் பிறகு, சந்ததிகளின் மர்மத்தைக் கூறும் இந்த மாபெரும் நூலை எழுதியுள்ளேன். பிற்பாடு எழுதப்பட்ட இந்நூலானது, நமது மேதையும் துனிஸை ஆள்பவருமான அப்துல் அஜிஸ் என்போரின் உசூரின் பார்வைக்கு வந்தது.

கவிஞனும் நண்பனும் அந்தரங்க காரியதரிசியுமான இந்த உசூர், ஆளுமையில் தலைசிறந்தவர், உண்மையானவர், பாண்டித்யம் மிகுந்த அறிவாளி. அவர் காலத்தே அதிகம் படித்த மனிதர், எல்லா பொருள்களிலும் விஷயம் அறிந்தவர். அவர் தன்னைத்தானே முகமது பென் ஔனானா எஸ் ஜோனாயி என்று அழைத்துக்கொண்டார். அவரின் நதிமூலம் ஜோனாயியில் உள்ளது. (ஜோனாயி என்பது ஜுர்ஜுராவின் உயர்ந்த சிகரங்களில் வாழ்ந்துவந்த சுதந்திரமான காபில் பழங்குடியைக் குறிப்பதாகும். ஸ்பானிஷ் எழுத்தாளர்களால் பேரரசு என்று அழைக்கப்பட்ட கான்கான் பிரதேசம் உண்மையில், ஜோனாயி பழங்குடியினருக்குச் சொந்தமான சிறு மாவட்டமே. அவர்கள் துனீஸ்சுக்கு முதல்முறையாக வந்திருந்த துருக்கியர்களிடம் அடிக்கடி

சச்சரவில் ஈடுப்பட்டனர்) அவர் அல்ஜீரியாவிற்கு அழைத்துவரப்பட்டு, அந்நகரத்தில் நமது மேதையான அப்துல் அஜீஸ் எல் ஹப்ஸியை தன் தோழனாக்கிக் கொண்டார். (இக்காலகட்டம் ஸ்பெயினிடம் அல்ஜீரியா சரணடைந்த காலமாகும். அப்போது ஸ்பெயினின் ஆளுமையை ஏற்றுக்கொண்ட அந்நகரம், அதன் அரசாட்சியை ஏற்றுக்கொள்வதாக ஒப்புக்கொண்டது அல்லது துருக்கியரின் ஆளுமை. (கி.பி.1515. அதாவது ஹிஜ்ரா 921) இந்த இரண்டு தோற்கடிப்பு சம்பவங்களுமே வரலாற்று ஆசிரியர்களால் முன்வைக்கப்படுவதாகும். இந்த இருவேறு காலகட்டங்களிலும் துனிஸில் அப்துல் எல் அஸீஸின் ஆட்சி நடைபெறவில்லை. எனினும் ஆசிரியர் துருக்கிய ஆளுமையைப் பற்றியே பேசுகிறார் என்று தோன்றுகிறது. பார்பராஸா அல்ஜீயராவின் அமீரால் வரவழைக்கப்பட்டு, ஸ்பானியர்களுடன் போரில் துருக்கியர்களுக்கு உதவும்படி கேட்டுக்கொள்ள, நகரத்திற்கு வந்த அவர், அமீர் அவர்களை மரணத்திற்குட்படுத்தி தன்னை அல்ஜீரியாவின் அரசனாக பிரகனப்படுத்திக் கொண்டார்.)

அப்போதைய துனிஸியாவை அபூ உமர் அனீன் முகம்மது ஆண்டுவந்தார்.

அல்ஜீரியா பிடிக்கப்பட்டபோது அரசாண்டவர் இவருடன் துனிஸியாவிற்குத் தப்பியோடினார். {உயிர்த்தெழும் நாள்வரை கடவுள் அந்நிலத்தை அவரது சக்திக்கு உட்பட்டதாக வைத்திருக்கட்டும்) பின், அவர் தலைமை உகூர் ஆக ஆக்கப்பட்டார்].

மேலே குறிப்பிட்ட இந்த நூல், அவரின் கைகளுக்குக் கிடைத்தபின், அவர் என்னை வலுக்கட்டாயமாக அழைத்து, தன்னை பார்க்கும்படி கூறினார். எனவே, அவரின் இல்லத்திற்கு நான் செல்ல, அவர் என்னை மிக்க மரியாதையுடன் அழைத்தார்.

மூன்று நாட்கள் கழித்து அவர் என்னிடத்தில் வந்து என் புத்தகத்தைக் காட்டி, 'இதோ உங்களது பணி' என்று கூறினார். இதனால் வெட்கமடைந்த என்னிடத்தில் அவர் மேலும் கூறினார். 'நீங்கள் வெட்கமடையத் தேவையில்லை, நீங்கள் சொல்லியிருப்பது அவ்வளவும் உண்மையே. உங்கள் வார்த்தைகளைக் கண்டு யாரும் அதிர்ச்சியடையத் தேவையில்லை. அதனினும் நீங்கள் மட்டுமே இந்தப் புத்தகத்து விஷயத்தை அணுகவில்லை. பட்டிக்காட்டான்களும், எல்லா அறிவியலையும் படிக்காது அவற்றுக்கு எதிரியாக இருப்பவரும், கிண்டலடிப்போருமே வெட்கங்கெட்டவர்கள். இருப்பினும் இந்நூலில் சேர்க்க வேறுவிஷயங்களும் உள்ளன.' நான் அந்த விஷயங்கள் யாவை எனக் கேட்டேன். அவரும் பதிலளித்தார். 'நான் பின்னிணைப்பாக,

சிகிச்சை வகையில் பல விஷயங்களையும் சேர்க்கவேண்டும். சந்ததியை உற்பத்திசெய்ய வழிவகை கூறும் அதேநேரத்தில், அதைத் தடுக்கவும் வழி கூறவேண்டும். நீங்கள் சிறியதாக இருக்கும் ஆணுறுப்பை பெரிதாகவும் பிரகாசத்துடன் இருக்குமாறும் செய்ய வழிவகை கூறுகின்றீர். அதேசமயம், ஆண்களிடம் உறவாடும் பெண்களின் அக்குள் மற்றும் மர்மப் பிரதேசங்கள் முதலானவற்றிலிருந்து தேவையற்ற நாற்றத்தைப்போக்கும் வழிவகைகளை கூறுவீர்களாகுக! மேலும் கர்ப்பத்தைப்பற்றி சொல்லி, உங்கள் நூலை முழுமையடையச் செய்வீர்களாகுக! இறுதியாக, உங்கள் நூலானது எல்லா விருப்பங்களையும் பூர்த்திசெய்தால், நீங்கள் முழுமையாக பணிசெய்து முடித்துவிட்டீர்கள் என்று பொருள்.'

நான் உசூருக்கு பதிலளித்தேன்: 'என் ஆசானே! நீங்கள் சொன்னதெல்லாம், அது கடவுளின் உயர் விருப்பமாக இருக்கும்பட்சத்தில் எனக்கு ஒரு பொருட்டே கிடையாது.'

இவ்வாறு சொன்ன நான், கடவுளை இறைஞ்சி (அவர் தன் தீர்க்கதரிசிமீது அருளைப் பொழியட்டும், அவருக்கு சந்தோஷத்தையும் இரக்கத்தையும் வழங்கட்டும்) இந்த நூலை ஆக்குகிறேன்.

இப்பணியை நான் 'ஆத்மாவின் மறுபிறப்பிற்கான நறுமணத் தோட்டம்' என அழைக்கிறேன்.

நான் எல்லாவற்றிலும் சிறப்பானவற்றையே சுட்டிக்காட்டும் கடவுளை வேண்டுகிறேன். (அவரைத் தவிர வேறெந்த கடவுளும் இல்லை. அவரிடம் இருந்து பெறாதது எதுவும் நன்மை பயக்காது.) நன்மை வேண்டி, நம்மை நல்வழியில் செலுத்த வேண்டி அவரை வேண்டுகிறேன். ஏனெனில் கடவுளின் சக்தியை, வல்லமையைத் தவிர்த்து வேறெந்த இன்பமும் கிடையாது.

நான் இந்தப் புத்தகத்தை இருபத்தோரு அத்தியாயங்களாகப் பிரித்துள்ளேன், இதை கற்க நினைக்கும், தம் தேவைகளை இதில் தேடுபவருக்காக சுலபமாக வகுத்துள்ளேன். ஒவ்வொரு அத்தியாயமும் குறிப்பிட்ட ஒரு விஷயத்தில், அது உடலாக ஆகட்டும், தந்திரமும் வஞ்சகமும் கொண்ட பெண்களாக ஆகட்டும், அதை மட்டுமே கூறுகிறது.

அத்தியாயம்

I] புகழத்தக்க ஆண்களைப் பற்றியது

ii] புகழத்தக்க பெண்களைப் பற்றியது

iii] வெறுக்கத்தக்க ஆண்களைப் பற்றியது

iv] வெறுக்கத்தக்க பெண்களைப் பற்றியது

v] சந்ததி உற்பத்தி பற்றியது

vi] சந்ததி உற்பத்தியில் உதவிசெய்யும் சூழ்நிலையைப் பற்றியது

vii] சந்ததி உற்பத்தியை நாசம் செய்யும் சூழ்நிலைகள்

viii] ஆணின் காம உறுப்புக்கு வழங்கப்படும் பல்வேறு பெயர்கள்

Ix] பெண்ணின் காம உறுப்புகளுக்கு வழங்கப்படும் பல்வேறு பெயர்கள்

X] பல்வேறு மிருகங்களின் சந்ததி உற்பத்தி

Xi] பெண்களின் வஞ்சகம், துரோகம் பற்றியது

Xii] ஆண்கள் மற்றும் பெண்கள் பற்றிய பல்வேறு பயனுள்ள கேள்விகள்

Xiii] சந்ததி உற்பத்தியில் பெறப்படும் இன்பக்காரணிகள்

Xiv] பெண்களின் மலட்டு கர்ப்பப்பையும் அதற்குண்டான சிகிச்சையும்

Xv] குறைப்பிரசவத்தின் காரணிகள்

Xvi] ஆண்களின் மலட்டுத்தன்மை

Xvii] இடைஞ்சல்களை விலக்குதல் பற்றியது

Xviii] ஆணுறுப்பை பெரிதாக்கும் மற்றும் விரைத்திருக்கச் செய்யும் வழிகள்

Xix] பெண்களின் அக்குள்களில், அரவணையில் ஏற்படும் நாற்றத்தைப் போக்கும் வழிகளும் அவற்றைத் தொடுதலும்

Xx] கர்ப்பத்தைப் பற்றிய குறிப்புகள் மற்றும் பிறக்கப் போவது ஆணா, பெண்ணா என்றறிதல்

Xxi] இந்நூலின் முடிவுரை மற்றும் காமரீதியான நடவடிக்கைகளுக்கு முட்டைகளை உணவாகக் கொள்ளுதல்.

படிப்போர் தம் விருப்பப்படி ஆராயவே மேற்கண்ட அத்தியாயங்களாகப் பிரித்துள்ளேன்.

(மொழிபெயர்ப்பாளரின் குறிப்பு)

அத்தியாயம்-I

# புகழத்தக்க ஆண்கள்

ஓ, உசூர் அவர்களே (கடவுளின் அருள் உங்கள்மீது பொழியட்டும்) அறிந்துகொள்வீராக!. ஆண்களில் மற்றும் பெண்களில் பல்வேறு வகையினர் உள்ளனர். அவர்களில் புகழத்தக்கவர்களும் உள்ளனர், நிந்திக்கத்தக்கவர்களும் உள்ளனர்.

மெச்சத்தகுந்த ஆண்மகன் பெண்களின் அருகில் இருக்கும்போது, அவனுடைய குறியானது வளர்ந்து, வலிமையடைந்து, தீவிரமாகவும் கடினமாகவும் மாறுகிறது. அவன் அவ்வளவு விரைவில் விந்துவை வெளியேற்றுவதில்லை. விந்து வெளியேறிய நடுக்கம் நின்றவுடன் அவன் பழையபடி விரைப்பு அடைகிறான்.

இவன்போன்ற ஆண்மகனே பெண்களால் விரும்பப்பட்டு போற்றப்படுகின்றனர். காரணம் என்னவெனில், பெண்கள் ஊடுருவுவதல்பொருட்டே ஆண்களைக் காதலிக்கின்றனர். அதனால் அவன் இலிங்கமானது, சுற்றளவிலும் நீளத்திலும் போதுமான அளவு இருத்தல் வேண்டும். இவன்போன்ற ஆண்மகன் மார்பு அகலமாக இருக்க, பிருஷ்டமோ கனமாக இருத்தல் வேண்டும். அவன் விரைக்கத் தயாராகின்றார்போல், விந்துவை எப்போது வெளியேற்றுவது என்பதை அறிந்திருக்க வேண்டும். அவன் தன் மர்ம உறுப்பானது பெண்ணின் அடியாழம் வரை சென்று, அதன் எல்லா பாகங்களையும் நிரப்ப வேண்டும். கவிஞர்கள் உரைத்தாற்போல், இவனையே எல்லாப் பெண்களும் நன்கு விரும்புவர். புலவர் சொன்னபடி,

”இளம்வாலிபர்களிடம் உள்ளதை காண முயற்சிக்கும் பெண்களைக் கண்டுள்ளேன்

நீடித்த தகுதிகளானது ஆணுக்கு முழுசக்தியையும் வழங்குகிறது

அழகு, துய்ப்பு, இருப்பு, பலம் முதலானவை,

முழுதும் வளர்ந்த இலிங்கம் நீடித்த புணர்ச்சியை வழங்கும்.

கனமான பிருஷ்டம், மெதுவாக நிகழும் விந்து பாய்ச்சல்,

அவளின்மேல் மிதப்பதாயுடைய கனமற்ற மார்பு,

பாய்ந்துவரும் விந்து மெல்ல நிரப்பும். அதாவது

நீடித்த இன்பப் புணர்ச்சியை எடுத்தியம்புவதுபோல்.

அவன், தன் உறுப்பானது மீண்டும் ஆராய விரைத்துவிடும்.

அவர்களின் அரசிலைகளில் புகுந்து மீண்டும், மீண்டும், மீண்டும் ஆராய;

இவன்போன்ற மனிதனே பெண்மைக்கு இன்பம் வழங்குபவன்,
தன் தகுதிகளில் எப்போதும் உயர்வாக நிற்பவன்.

## ஆண்களிடம் உள்ள தகுதிகளை எதிர்பார்க்கும் பெண்கள்

கதையானது இவ்வாறு செல்கிறது. குறிப்பிட்டதொரு நாளில், அப்துல் மாலிக் பின் மெரௌனி, காதல் வைப்பாட்டியான லைலாவிடம் சென்று, அவளிடம் பல்வேறு கேள்விகளை வீசுகின்றான். பல்வித விஷயங்களுக்கு மத்தியில், ஒரு பெண், ஆணிடம் என்னவித தகுதிகளை எதிர்பார்க்கிறாள் என்று கேட்டார்.

அவருக்கு லைலா பதில் கூறினாள்: ”ஓ, என் மேதையே! அவர்களுக்கு எம்மைப் போன்ற கன்னங்கள் இருக்க வேண்டும்” “மற்ற விஷயங்கள்?” என்று பென் மெரௌனி கேட்டார். ”கூந்தல்வண்ணம் எம்முடையதைப் போல்; இறுதியாக அவர்கள் உம்மைப் போல் இருக்க வேண்டும். ஓ, நம்பிக்கையாளர்களின் இளவரசரே! நிச்சயமிட்டுக் கூறுகிறேன்: ஒரு ஆண் மகன் வலிமையும் செல்வமும் பெற்றிருக்கவில்லையெனில், அவனால் பெண்களிடம் இருந்து ஒன்றும் பெறமுடியாது.”

## விரைத்த குறியின் பல்வித அளவுகள்

பெண்களை மகிழ்வுபடுத்தும் விரைத்த குறியின் நீளமானது, பனிரெண்டு விரல்கள் அகலமிருக்க வேண்டும் அல்லது மூன்று உள்ளங்கை அகலமிருக்க வேண்டும் அல்லது குறைந்தபட்சம் ஆறு விரல் அதாவது, உள்ளங்கையில் ஒன்றரைப் பங்கு அகலமிருக்க வேண்டும்.

பனிரெண்டு விரல்கள் அல்லது மூன்று உள்ளங்கை அகலம்கொண்ட ஆண்கள் உள்ளனர். வேறுசிலரோ, பத்து விரல் அல்லது இரண்டரை உள்ளங்கை அகலம் கொண்டிருக்கின்றனர். மற்றும் சிலரின் அளவுகளோ, எட்டு விரல்கள் அல்லது இரண்டு உள்ளங்கைகள். இதனினும் குறைந்த அளவுகொண்ட ஆணால் ஒரு பெண்ணை திருப்திப்படுத்தவே முடியாது.

## கலவியின் போது நறுமணங்களைப் பயன்படுத்துதல் மற்றும் மொகைலாமாவின் வரலாறு

கலவியின்போது நறுமணங்களை, ஆணும் பெண்ணும் பயன்படுத்தினால் அது அவர்களை கிளர்ச்சியடையச் செய்கிறது. ஆணால் பிரயோகம் செய்யப்படும் நறுமணத்தை பெண் மகள் முகர்ந்து

அப்படியே மயக்கம்கொள்கிறாள். நறுமணங்களை பயன்படுத்தும் ஆணுக்கு அவை பெரும்பாலும் பயன்பட்டிருக்கிறதென நிரூபிக்கப்பட்டுவிட்டன. அவனுக்கு பெண்ணை உரிமையாக்கவும் துணை செய்கிறது.

இந்தப் பாடத்தில், மொகைலாமா என்ற நபர்பற்றி சொல்லப்படுகிறது. இவன் ஏமாற்றுக்காரன், கையஸின் மகன் (அவனை கடவுள் சபிக்கட்டும்) இவன் தனக்கு தீர்க்கதரிசனம் சொல்லும் சக்தி கிடைத்திருக்கிறதெனக் கூறி, கடவுளின் தூதுவரைப் (அவருக்கு அருளும் வணக்கங்களும் உண்டாகுக) போல் நடக்க முயன்றான். இந்த காரணந்தொட்டு, அவனும் எண்ணற்ற அராபியர்களும் கடவுளின் சினத்திற்கு ஆட்பட்டனர்.

மொகைலாமா கையஸின் மகன், ஏமாற்றுக்காரன், திருக்குரானை தன் பொய்களாலும் ஏமாற்றுத்தனத்தாலும் மாற்றியமைத்தான் மற்றும் திருக்குரானின் ஒரு அத்தியாய பாடத்தில், காபிரியேல் தேவதை (அவருக்கு வீர வணக்கங்கள்) தீர்க்கத்தரிசியிடம் (அவருக்கு கடவுளின் கருணையும் வீர வணக்கங்களும்) கொணர்ந்துசேர்த்தது. கேடுகெட்ட நம்பிக்கையில் உழன்றிருந்த மக்கள், மொகைலாமாவை பார்க்கச் சென்று இருந்தனர். அவர்களிடம் அவன், “எனக்கும் அதே போன்றதொரு அத்தியாயத்தை காபிரியேல் தேவதை கொணர்ந்துசேர்த்தது” என்று பொய் சொன்னான்.

‘யானை’ என்ற அத்தியாயத்தைப் பார்த்து ஏளனம் செய்து அவன் சொல்கிறான்: “யானை என்ற இந்த அத்தியாயத்தில் யானையைப் பார்க்கிறேன். யானை என்றால் என்ன? அதன் பொருள் என்ன? இந்த நான்கு கால் விலங்கு என்பதென்ன? அது ஒரு வாலையும் நீண்ட துதிக்கையும் உடையது. பிரம்மாண்டமான இது, நிச்சயம் நமது கடவுளின் படைப்பாகும்”.

கௌதர் என்ற திருக்குரானின் அத்தியாயமும் இவரின் முரண்பாட்டிற்குத் தப்பவில்லை. அவர் கூறுகிறார்: “நாங்கள் விலைமதிப்பற்ற கற்களை உங்களுக்கே தந்தோம். ஆனால் மற்ற மனிதரிடம் காட்டும்போது, அவற்றுக்காக நீங்கள் பெருமை கொள்ளலாகாது.”

இவ்வாறு மொகைலாமா, திருக்குரானின் பல்வித அத்தியாயங்களை தன் பொய்களாலும் ஏமாற்றுத்தனத்தாலும் கீழறுப்பு வேலையைச் செய்திருக்கிறார்.

அவர் இதைபோன்ற வேலைகளை செய்துகொண்டிருக்கும்போது, தீர்க்கத்தரிசி (கடவுளின் வணக்கங்களும் கருணையும் அவரிடத்தில்

இருப்பதாகுக) அவர்களைப் பற்றிய உரையாடல்களைக் கேட்டார். அதாவது, அவர் தமது வணக்கத்திற்குரிய கைகளை ஒரு வழுக்கைத் தலையில் வைத்தால், அந்தத் தலையில் முடிகள் முளைக்கின்றன, ஒரு குழிக்குள் எச்சில் துப்பினால் நீர் நிறைய வருவதையும், அந்த அழுக்கு நீர் உடனடியாக சுத்தமாகவும் குடிப்பதற்கு ஏற்றவாறும் ஆகிறது. தெளிவற்றோ அல்லது பார்வையில்லாதோ இருக்கும் கண்களில் அவர் எச்சில் உமிழ்ந்தால், பார்வை உடனடியாகக் கிடைக்கும். மேலும் ஒரு குழந்தையின் தலையில் தம் கைகளை வைத்து, "நீ நூறாண்டு காலம் வாழவேண்டும்" என்று கூறினால், அந்தக் குழந்தை நூறாண்டு காலம் வாழும்.

மொகைலாமாவின் சீடர்கள் இவற்றையெல்லாம் பார்த்து அல்லது கேட்டுவிட்டு அவரிடம் வந்து சொன்னார்கள்: "உங்களுக்கு முகமதுவைப் பற்றியோ அல்லது அவரின் செய்கைகளைப் பற்றியோ ஏதும் தெரியாதா?'' அவர் பதில் சொன்னார்: "எனக்கு அதனினும் சிறப்பான செயல்களை செய்யத் தெரியும்".

இப்போது மொகைலாமா கடவுளின் எதிரியாகிவிட, அவர்தன் அதிர்ஷ்டமற்ற கைகளை, தலைமுடி சிறிதளவே இருக்கும் மனிதனின் தலையில் வைத்தால், உடனே வழுக்கையாகிவிடும். இனிப்பும் போதுமான அளவு நீரும்கொண்ட கிணற்றில் அவர் எச்சில் உமிழ்ந்தால், கடவுளின் விருப்பத்தால் அது அசுத்தமாகிவிடும். நோய்வாய்ப்பட்ட கண்களில் அவர் எச்சில் உமிழ்ந்தால் அக்கண்களுக்கு உடனடியாக பார்வை போய்விடும். மற்றும் அவர் தனது கரங்களை ஒரு குழந்தையின் தலையில் வைத்து, "நூறாண்டு காலம் வாழ்க" என்று உரைத்தால், ஒரு மணி நேரத்திற்குள் அந்தக் குழந்தை இறந்துவிடும்.

என் சகோதரர்களே, கிரகியுங்கள். ஒளிக்கு எதிராக கண்களை மூடிக்கொண்டிருப்பவரின் நிலைமை என்னவாகும்? சர்வ வல்லமைமிக்கவரின் ஆற்றலோடு பொருதுபவர் நிலைமை என்னவாகும் என்று!

பெனி டெமின்னின் பெண்ணொருத்தி அவள், சேஜதா எட் தெமிமியா என்றழைக்கப்படுபவள். அவளும் தீர்க்கதரிசியாக நடித்துக் கொண்டிருந்தவள். அவள் மொகைலாமாவைப் பற்றி கேள்விப்பட்டாள். அவரும் அவளைப்போலிருந்தார்.

இந்தப் பெண் சக்தி வாய்ந்தவள். ஏனெனில் பெனி டெமின் ஏராளமான இனக்குழுவை உள்ளடக்கியது. அவள் இவ்வாறு உரைத்தாள்: "தீர்க்கதரிசனம் என்பது ஒரேசமயத்தில் இரு நபர்களுக்குச் சொந்தமாக முடியாது. ஒன்று, அவர் தீர்க்கதரிசியாக இருக்க வேண்டும். பிறகு

நானும் எனது சீடர்களும் அவரது விதிகளைப் பின்பற்றுபவராக மாறிவிடுவோம் அல்லது நானே தீர்க்கதரிசியாக இருப்பேன். அப்போது அவரும் அவரது சீடர்களும் எனது விதிகளைப் பின்பற்றட்டும்".

இவை யாவும் தீர்க்கதரிசியின் (கடவுளின் வணக்கங்களும் கருணையும் அவரிடத்தில் இருப்பதாகுக) மறைவிற்குப் பின் நிகழ்ந்தவை.

சேஜதா, மொகைலாமாவிற்கு கடிதம் ஒன்றை எழுதி, அதில் பின்வருமாறு கூறினாள்: "ஒரே சமயத்தில் இருவேறு நபர்கள் தீர்க்கதரிசனத்தை உரைப்பது சரியில்லை. இதில் ஒரே ஒருவர்தான் தீர்க்கதரிசியாக இருக்க முடியும். நாமும் நமது சீடர்களும் ஒருவரை ஒருவர் சந்தித்து ஆராய்ந்துகொள்வோம். கடவுளிடம் வந்த அது (திருக்குரான்) நம்மில் யாருக்குச் சொந்தம் என விவாதிப்போம். பிறகு யாரை உண்மையான தீர்க்கத்தரிசியாக ஏற்றுக்கொள்கிறோமோ அவரின் விதிகளைப் பின்பற்றி நடப்போம்."

இவ்வாறு கடிதத்தை முடித்துவிட்டு, எடுத்துச் செல்பவனிடம் கொடுத்துவிட்டுக் கூறினாள்: "இந்தாரும், இக்கடிதத்தைக் கொண்டுபோய், யமாமாவில் இருக்கும் மொகைலாமா பென் கயாஸிடம் கொடுத்துவிடு. நான் உன்னைத் தொடர்ந்து படையுடன் வருகிறேன்."

அடுத்த நாள், அந்தப் பெண் தீர்க்கதரிசி குதிரைமீதேறி, தன் படை பின்னுக்குவர புறப்பட்டாள். செய்தியாளன் மொகைலாமாவின் இடத்தை அடைந்ததும், அவரை வாழ்த்தி கடிதத்தைக் கொடுத்தான்.

மொகைலாமா கடிதத்தைத் திறந்து அதைப் படித்து, உள்ளே இருந்ததைப் புரிந்துகொண்டார். அவர் கண்டனத்திற்கு உள்ளானதுபோல் தெரிந்து, தன் படையில் உள்ளவர்களின் அறிவுரையை, ஒருவர்பின் ஒருவராகச் சொல்லக்கேட்டு, தன் வெட்கத்தை நீக்க, அவர்களின் அறிவுரையிலோ, பார்வையிலோ எந்தவிதப் பொருளும் இல்லை என்பதைக் கண்டுகொண்டார்.

அவர் குழப்பத்தில் ஆழ்ந்திருப்பதைக் கண்டதும், அவர் படையின் மூத்த தளபதிகளில் ஒருவர் அவர்முன்னே வந்து நின்றார். "ஓ, மொகைலாமா! உங்கள் ஆத்மாவை அமைதிப்படுத்துவீராகுக. கண்களை குளிர்ச்சியடையச் செய்வீராகுக. ஒரு மகனுக்குத் தந்தையானவர் அறிவுரை தருவதுபோல் நான் உங்களுக்குத் தருவேன்"

மொகைலாமா அவரிடத்தில் உரைத்தார்: "சொல்லுங்கள் உங்கள் வார்த்தைகள் உண்மையாக இருக்கட்டும்"

தளபதி சொல்லலானார்: "நாளை காலையில் நகரத்திற்கு வெளியே வண்ணவண்ண பட்டுத்துணிகளால் ஆன கூடாரம் ஒன்றை

நிறுவுவாயாக. அதில் எல்லாவகையான மரச் சாமான்களும் இருக்கட்டும். மற்றும் அவற்றுடன் வேறுபட்ட நறுமணங்களும் இருக்கவேண்டும். அதாவது, ஆம்பர், கஸ்தூரி முதலானவை. தவிர, எல்லாவகையான வாசனைத் திரவியங்களும் அதாவது, ரோஜா, ஆரஞ்சுப் பூக்கள், தாழை, மல்லிகை, ஆகாயத்தாமரை மற்றும் இதரவகையான தாவரங்களின் வாசனைகளும் ஆங்கு இருக்க வேண்டும். இவற்றை வைத்தவுடன் வாசனைத் திரவியங்கள் கலந்த தண்ணீரை ஆங்கே வைத்திருத்தல் வேண்டும். பின், இந்த வாசனாதிகள் வெளியே போய்விடாதபடி கூடாரத்தின் திறப்புகளில் மறைப்புகள் இடப்பட வேண்டும். பின், இந்த வாசனையானது நீரையும் கருவுறச்செய்யும் என்ற நம்பிக்கை பிறந்தவுடன் அரியணையில் அமர்ந்து, அந்தப் பெண் தீர்க்கதரிசிக்கு சொல்லியனுப்பி அவளை உன் கூடாரத்திற்கு வரவழைத்து, அவளும் நீயும் தனியே இருக்கும்படி பார்த்துக்கொள். இப்படியாக, நீங்கள் இருவரும் தனியே இருக்கும்போது அவள் நறுமணத்தை முகர்ந்து, அவள் உடல் முழுவதும் இளைப்பாறும்பொழுது, அவள் மயக்கம்கொள்வாள். அவள் மயக்கமுறுவதை காணும் நீங்கள், உங்களுக்கு உதவும்படி கேட்கவேண்டும். அவள் தயங்காமல் ஒத்துழைப்பாள். இப்படியாக, அவளை ஒருமுறை அடைந்ததும் அவளாலும் அவள் படையாலும் தாங்கள்கொண்ட வெட்கம் நீங்கிவிடும்”

மொகைலாமா உணர்ச்சிவயப்பட்டு கூவினான்: நீவீர் நன்று உரைத்தீர். கடவுள் இருப்பதுபோல் உங்கள் அறிவுரை வார்த்தைகள் நிலைத்திருக்கும்.” பிறகு அவர் சொன்னபடியே யாவற்றையும் செய்து முடித்தார்.

பிறகு கூடாரத்தில் நீரும் கருவுறுமளவுக்கு வாசனாதி திரவியங்களின் மணம் உச்சத்தை தொட்டதும், அவர் அரியணையில் அமர்ந்துகொண்டு, அந்தப் பெண் தீர்க்கதரிசிக்காக ஆளனுப்பினார். அவள் வந்ததும் கூடாரத்திற்குள் அனுமதிக்கும்படி ஆணையிட்டார். அவள் உள்ளே நுழைந்து அவருடன் தனிமையில் இருக்கலானாள். அவர் அவளுடன் பேசத் துவங்கினார்.

மொகைலாமா பேசிக்கொண்டிருக்கும்போதே அவள் தன்னுணர்வை இழந்து, வெட்கமும் குழப்பமும் அடைந்தாள்.

அவர், அவளின் நிலையைக் கண்டதும், அவளுக்கு புணர்ச்சி இன்பம் வேண்டும் என்பதை அறிந்துகொண்டதும், அவர் கூறினார்: ”வா, எழுந்திருந்து என்னை உன்மீது ஆதிக்கம் செலுத்தவிடு. இந்த இடம் அதற்காகத்தான் ஏற்படுத்தப்பட்டது. நீ விரும்பினால் மல்லாந்து

படுக்கலாம் அல்லது கைகளையும் கால்முட்டிகளையும் ஊன்றிக்கொள்ளலாம் அல்லது பிரார்த்தனையின்போது மண்டியிட்டு அமர்வதைப்போல், கண்புருவங்கள் நிலத்தைத் தொட, பிருஷ்டங்கள் வான்நோக்கி உயர, நாற்காலியைப் போல் ஆவாயாக. எந்த நிலையாயினும் கூறுவாயாக. நீ அந்நிலையிலே திருப்தி அடைவாய்.”

அந்தப் பெண் தீர்க்கதரிசி பதிலளித்தாள்: ”எனக்கு எல்லா நிலைகளிலுமே வேண்டும். ஓ, சர்வவல்லமை உடையோரின் தீர்க்கதரிசியே! கடவுளின் வெளிப்பாடு என்மீது இறங்கட்டும்.”

உடனே அவர், அவள்மீது இறங்கி, தான் விரும்பியவாறெல்லாம் அனுபவித்து மகிழ்ந்தார். பிறகு அவள், அவரிடம் உரைத்தாள்: ”நான் இங்கிருந்து போனபின், என் படைகளிடம் என்னை உமக்குத் திருமணம் செய்துவைக்கும்படி கேளும்.”

அவள் கூடாரத்தை விட்டு வெளியே வந்ததும், சீடர்கள் அவளைச் சந்தித்து பின்வருமாறு கேட்டனர்: ”கடவுளின் பெண் தீர்க்கதரிசியே! தாங்கள் நிகழ்த்திய சந்திப்பின் முடிவென்ன? அவள் இவ்வாறு பதிலளித்தாள்: ”அவருள் என்ன இருந்ததோ அதை மொகைலாமா எனக்குக் காட்டினார். அவற்றில் உண்மை இருந்ததை நான் கண்டுகொண்டேன். எனவே, அவரிடம் பணியுங்கள்.”

பிறகு தன் ஆசைக்கிணங்க அவள், படையிடம் அவளை திருமணம் செய்துவைக்கும்படி கேட்டுக்கொள்ள, படையினர் அவரிடம், திருமணப்பரிசாக எதிர்கால மனையாளுக்கு என்ன தருவீர்கள் எனக் கேட்டபோது அவர் பதிலளித்தார்: ”நான் ‘அஸீயூர்’ பிரார்த்தனையை இனிமேல் செய்யக்கூடாது என ஆணையிடுகிறேன்” (மூன்றிலிருந்து நான்குமணி வரையில் சொல்லப்படும் பிரார்த்தனை) அன்றைய காலந்தொட்டு அந்த நேரத்தில் பெனி-டெமின் கடவுள் வணக்கத்தில் ஈடுபடுவதில்லை. அதற்குக் காரணமென்ன என அவர்களிடம் கேட்டால், அவர்கள் இவ்வாறு பதில் உரைப்பார்கள். ”இது எங்கள் பெண் தீர்க்கதரிசியின் விருப்பம்; அவர்கள் மட்டுமே உண்மையை அறிவார்”.அன்றைய தினத்திலிருந்து அவர்கள் வேறு தீர்க்கதரிசியை அறியவில்லை.

இந்தப் பாடத்தில் ஒரு கவிஞர் பாடுகிறார்:

எங்களிடையே ஒரு பெண் தீர்க்கதரிசி தோன்றினார். அவர் விதிகளை நாங்கள் பின்பற்றினோம். எங்களைத் தவிர்த்து மனிதகுலம் முழுமைக்கும் ஆண்குலத்திலேயே தீர்க்கதரிசிகள் தோன்றுவார்கள்.

மொகைலாமாவின் மரணம் அபு பெக்கரின் (கடவுள் அவருக்கு நல்லது

செய்யட்டும்) தீர்க்கதரிசனத்தால் முன்கூட்டியே உரைக்கப்பட்டது. உண்மையில், அவர் செய்த பென் கெத்தாப்பால் கொல்லப்பட்டார். அவரது சீடர்களில் ஒருவரான ஹவுச்சா என்பவரால் கொல்லப்பட்டதாக சிலர் தெரிவிக்கின்றனர். ஹவுச்சாதான் கொன்றாரா என்பதை கடவுள் மட்டுமே அறிவார். இச்சங்கதியில் அவர் உரைப்பதாவது: ”என் அறியாமையினால் தலைசிறந்த மனிதர்களான ஹமான் பென் அப்த் எல் மொஸலெப் முதலானவர்களைக் கொன்றிருக்கிறேன். மற்றும் தரங்கெட்ட மனிதரான மொகைலாமா போன்றோரைக் கொன்றிருக்கிறேன். இந்த ஒரு செயலானது மற்றொரு செயலை சமன் செய்வதால், கடவுள் என்னை மன்னிப்பார் என நம்பிக்கை கொள்கிறேன்.”

இந்த வார்த்தைகளின் பொருள் என்னவெனில், ”நான் தலைசிறந்த மனிதர்களைக் கொன்றிருக்கிறேன்.” அதாவது, ஹவுச்சா அவர்கள் தீர்க்கதரிசியை சந்திப்பதற்குமுன்னால், ஹம்சா அவர்களை (கடவுள் அவருக்கு நல்லது செய்யட்டும்) கொன்றிருக்கிறார். அவர் இஸ்லாமை தழுவிய பிற்பாடு, மொகைலாமாவை கொன்றிருக்கிறார்.

சேஜதா எட் தெமிமியா, கடவுள் அவள்மேல் காட்டிய கருணையினால் அஞ்சி, இஸ்லாமிய நம்பிக்கையை ஏற்றுக் கொண்டாள். அவள் தீர்க்கதரிசியின் சீடர்களில் ஒருவரை திருமணம் செய்துகொண்டாள். (அவளது கணவருக்கு கடவுள் நல்லது செய்யட்டும்.)

இவ்வாறு கதையானது இங்கே முடிகிறது.

பெண்களை இன்பப்படுத்தி மகிழ்வுபடுத்த நினைக்கும் மனிதன், அவர்களின் கண்களின் கருணையை வேண்டுகிறான். அவன் தோற்றத்தில் பொலிவாக இருக்க, தன்னைச் சுற்றி இருப்போரைவிட அழகில் விஞ்சியிருக்க, உடல் வடிவத்தில் நல்லவித கட்டழகை பெற்றிருக்க வேண்டும். பெண்களிடம் பேசும்போது உண்மையாகவும் சத்தியமாகவும் இருக்க வேண்டும். அச்சமின்றியும் திறந்த மனதுடன், தற்பெருமையில்லாமல் உரையாடும்போது மகிழ்வு அடையச்செய்ய வேண்டும். தன் வாக்குக்கு அடிமையாகவும், உண்மையே பேசிக்கொண்டு சொல்வதை அப்படியே செய்ய வேண்டும்.

பெண்களுடன் உறவு இருப்பதை தற்பெருமையாகச் சொல்பவன், ஒரு மரியாதைகெட்டவன். அவனைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்.

இவ்விடத்தில் கதை ஒன்று உண்டு. ஒரு காலத்தில், மாமூம் என்ற அரசன் வாழ்ந்திருந்தான். அவனிடம் பாஹலெவுல் என்ற விதூஷகன் இருந்தான். அவன் இளவரசர்களையும் ஊசூர்களையும்

சந்தோஷப்படுத்தி வந்தான்.

ஒரு நாள் இந்த விதூஷகன், மகிழ்ச்சியாக இருந்த மன்னன் முன்பு தோன்றினான். அரசன், அவனை அமரும்படி ஆணையிட்டு வேறெங்கோ பார்த்தபடி அவனைக் கேட்டான்: ”கேடுகெட்டவளின் மகனே, உந்தன் வருகைக்குக் காரணம் யாதோ?”

பாஹூலவுல் பதிலளித்தான்: ”கடவுளானவர் வெற்றிகரமாக வைத்திருக்கும் தங்களைக் காண வந்தேன்.”

“எனக்கு வந்தது யாதோ?'' பதிலளித்த அரசன்: ”உந்தன் முதிய மற்றும் இளைய மனைவியரோடு வாழ்வு எவ்விதம் போகிறது?'' எனக் கேட்டான். ஒரு மனைவியோடு திருப்தியடையாத பாஹூலவுல் மற்றொருத்தியை மணம் செய்து கொண்டான்.

“நான் மகிழ்ந்திருக்கவில்லை” அவன் பதிலளித்தான். ’முதியாளோடும் மற்றும் இளையாளோடும் அதனினும் வறுமை என்னை சூழ்ந்திருக்கிறது”.

மன்னன் சொன்னான்: ”இவ் விஷயத்தைப்பற்றி ஏதேனும் பாடல் புனைய முடியுமா?”

விகடகவி ஆமென்று உறுதியுடன் பதிலளித்தான். மாமூம் அவன் அறிந்தவற்றைப் பாடும்படி ஆணையிட, பாஹூலவுல் கீழ்வருமாறு பாடினான்.

“சங்கிலியால் வறுமை என்னைப் பிணைத்துள்ளது. கஷ்டகாலம் என்னை கிழித்துப்போடுகிறது.

எல்லாவித துயரங்களாலும் நான் சவுக்கால் விளாசப்படுகிறேன்.

துரதிர்ஷ்டம் என்னை எல்லா சிக்கல்களிலும் துன்பங்களிலும் மாட்டிவிட்டிருக்கிறது,

மாமூம் அவனிடம் கேட்டான்: ”எங்கே போகிறாய்?”

அவன் பதிலளித்தான்: ”நம்பிக்கையாளரின் இளவரசே, நான் கடவுளிடம் அவரின் இறைத்தூதரிடம் செல்கிறேன்.”

“அது மிகவும் நல்லது!”

அரசன் கூறினான்.

”கடவுளிடம் அவரின் இறைத்தூதரிடம் அடைக்கலம் புகுந்து, அதன்பின் நம்மிடம் வருவாராயின், அவர்கள் வரவேற்கப் படுவார்கள். உந்தன் இரு மனைவியரைப்பற்றி, அவர்களுக்கு ஆனதென்ன என்பதுபற்றி, எனக்கு கவிதை ஏதேனும் கூறமுடியுமா?”

“நிச்சயமாக’’ என்று பாஹூலவுல் சொன்னான்.

“பின், நீ சொல்வதை நாங்கள் கேட்போமாக!”

பிறகு பாஹூலவுல் கவிதை வார்த்தைகளைச் சொன்னான்.

மாமூம் இந்த வார்த்தைகளைக் கேட்டதும், உருண்டு கீழே விழுமளவுக்கு விழுந்து விழுந்து சிரித்தான். பின் தயாளகுணத்தைக் காட்டும்பொருட்டு, மிகவும் அழகான உடுப்பான தன் தங்கத்திலான அங்கியை பாஹூலவுலுக்கு அளித்தான்.

மிகுந்த மனநிறைவுடன் பாஹூலவுல் தலைமை ஊசூர் வசிப்பிடத்திற்குப் போனான். அப்போது அத்திசையிலிருந்து, தன் அரண்மனை உச்சியிலிருந்து, ஹம்தோனா என்பவள் அவனைப் பார்த்துவிட்டாள். அவள், தன் கறுப்பினத்தவளிடம் உரைத்தாவது: ”மெக்கா கோயிலின் கடவுளே! அதோ பாஹூலவுல் என்போன் அற்புதமான தங்க வேலைப்பாடமைந்த அங்கியை அணிந்திருக்கிறான்! நானும் அதைப்போல் ஒன்றை எவ்விதம் அடைவது?’’

கறுப்பினத்தவள் பதில் சொன்னாள்: ”ஓ, என் எஜமானியே! உங்களுக்கு அந்த அங்கியை எப்படிப் பெறுவதென்பது தெரியாதா?”

ஹம்தோனா பதிலளித்தாள்: ”நானொரு சூழ்ச்சியை எண்ணியிருக்கிறேன் மற்றும் அந்த அங்கியை அவனிடமிருந்து பெற்று விடுவேன்.”

“பாஹூலவுல் சூழ்ச்சித் திறமையுடைய மனிதன். ”கறுப்பினத்தவள் மறுமொழி புகன்றாள்: ’’பொதுவாக மக்கள் எல்லோரும் அவன் கேலி செய்யலாம் என்று நினைக்கின்றனர். ஆனால் கடவுளுக்கிணங்க அவன்தான் அவர்களை கேலி செய்கிறான். எனவே, என் எஜமானியே! முயற்சியை கைவிட்டு, அவனுக்காக விரித்த வலையில் நீங்கள் விழுந்துவிடாது எச்சரிக்கையாக இருக்க வேண்டுமென கேட்டுக்கொள்கிறேன்”.

ஆனால் ஹம்தோனா மறுபடியும் சொன்னாள்: ”அக்காரியம் நிச்சயம் நடக்கும்!” அவள் கறுப்பினத்தவளை பாஹூலவுலிடம் ,தன்னைப் பார்க்கவரும்படி சொல்லியனுப்பினாள். அதற்கு அவன் கூறியதாவது: கடவுளின் அருளால், யார் உன்னை அழைத்தாரோ, அவருக்கு பதில் சொல்வாய்”. பின் அவன் ஹம்தோனாவை பார்க்கச் சென்றான்.

ஹம்தோனா அவனை வரவேற்றுக் கூறினாள்: ”ஓ, பாஹூலவுல்! நான் பாடுவதைக் கேட்க நீங்கள் வந்திருப்பதாக நம்புகிறேன்.” அவன் பதிலளித்தான். ”அவன் பதில் சொன்னான்: ”ஆ, என் எஜமானியே! சர்பநிச்சயமாக! அவள் பாடுவதில் அற்புதமான திறமைபடைத்தவள்.”

அவன் தொடர்ந்து சொன்னான்: ”நான் பாடுவதைக் கேட்டபின், தாங்கள் சற்று பலகாரங்களை உண்ண வேண்டும்”.

“அப்படியே” என்று அவன் பதிலுரைத்தான்.

பிறகு, அவள் பாடலை காதலால் மயங்கிக் கேட்பவருக்காக பிரமாதமாக பாடத்தொடங்கினாள்.

அவள் பாடலை பாஹூலவுல் கேட்டபின், பலகாரங்கள் பரிமாறப்பட்டன. அவன் உணவுண்டு நீரைப் பருகினான். பிறகு அவள் அவனிடம் சொன்னாள்: ”நிவீர் உங்கள் அங்கியைக் கழற்றி எனக்குப் பரிசாக அளிக்கப்போவதாக நான் ஏன் கற்பனை செய்கிறேன் என்று தெரியவில்லை.” அதற்கு பாஹூலவுல் பதிலளித்தான்: ”எந்தன் எஜமானியே! ஒரு ஆண், ஒரு பெண்ணிடம் என்ன செய்வானோ, அதை செய்பவருக்கே இதைத் தருவதாக வாக்களித்திருக்கிறேன்.”

“என்னது! அது என்னவென்று உங்களுக்குத் தெரியுமா, பாஹூலவுல்?'' என்று அவள் கேட்டாள்.

“எனக்குத் தெரியுமாவது?” அவன் பதில் சொன்னான்: ”அந்த அறிவியலை, கடவுளின் ஜீவராசிகளுக்கு கற்றுத் தருபவன் நானேதான்! காதலாகி அவை புணரும்படி விடுபவன் நானே. அவற்றுக்கு ஒரு பெண் தரும் சுகத்தைச் சொல்பவனும், ஒரு பெண்ணை தடவும் விதத்தையும், அவள் கிளர்ச்சியடைந்து திருப்தியடையச் செய்யும் கலையை கற்பிப்பவன் நானே. ஓ, எந்தன் எஜமானியே! நான் இல்லையெனில் இப் புணர்ச்சிக்கலையை யாரறிவார்?”

ஹம்தோனா மாமூமின் புதல்வியும், தலைமை ஊசூரின் மனைவியுமாவாள். அவள் அரிதான அழகைப் பெற்றிருப்பவள். அற்புதமான ஆச்சரியமூட்டும் வடிவத்தையும் கொண்டவள். அவளுடைய காலத்தில், அவள் அழகில் மயங்காதவர் யாரும் கிடையாது. நாயகர்கள் அவளைக் கண்டதும் பணிவாகி, வாலைச் சுருட்டிக்கொண்டு, மோகத்தில் வீழ்ந்துவிடுவோமோ என்ற பயத்தில், நிலம் நோக்கிக் கவிழ்ந்து நிற்பர். அத்தளவு முழுமையையும் வசீகரத்தையும் ஏராளமாக கடவுள் அவளுக்கு அளித்திருக்கிறார். அவளை தொடர்ச்சியாகப் பார்ப்பவர், தம் மனதில் குழப்பத்தை உணர்வார். ஐயோ, எத்தனையெத்தனை கதாநாயகர்கள் அவளின் விருப்பத்திற்காக. தமக்கு ஆபத்தை தேடிக்கொண்டிருக்கிறார்கள். இந்த காரணந்தொட்டு, அவள்மேல் கொண்ட ஆசையினால் தாம் இரையாகிப்போவோம் என்ற பயத்தினால் மற்றும் மன நிம்மதி போய்விடுமோ என்ற கவலையினால் இப்போதுவரை அவள்மேல் பார்வையை வீசியதில்லை.

அவளுடன் பாஹூலவுல் பேசத் துவங்கினான். அவன் இப்போது அவளைப் பார்த்து பின், தன் விருப்பத்தைச் சொல்ல முடியாமல் போகுமோ என்ற அச்சத்தில் தரை பார்த்து நின்றான். ஹம்தோனா, அங்கியை பெறவேண்டும் என்ற ஆசையினால் எரியநின்று, அவன் விலையில்லாமல் தரமாட்டான் என நினைத்தாள்.

“அதற்கு என்ன விலை கேட்கிறீர்?” என்று அவள் கேட்டாள். அதற்கு அவன், ”புணர்ச்சி, என் கண்களின் கருவிழியே” என்றான்.

அவள் கேட்டாள்: ”அது என்னவென்று உமக்குத் தெரியுமா, பாஹூலவுல்?”

அவன் கூவினான்: ”கடவுளே, என்னைத்தவிர எந்த ஒரு ஆணும் பெண்களை சரியாக அறிந்ததில்லை. அப்பெண்களே என் வாழ்க்கையின் உயிர். அவர்களின் கவலைகளை என்னைத் தவிர்த்து வேறு யாரும் உணர்ந்ததில்லை. அவர்களின் விருப்பம் என்னவென்பதை நான் அறிந்துள்ளேன் எந்தன் சகியே! அறிந்துகொள். ஆண்கள் எல்லோரும் தமது அறிவுக்கும் திறமைக்கும் ஏற்றவாறு தோழிகளைத் தேர்ந்தெடுக்கின்றனர். ஒருவர் எடுத்துக்கொள்கிறார், மற்றவர் தருகிறார். இவர் விற்கிறார், அவர் வாங்குகிறார். ஆனால் என்னுடைய எண்ணமெல்லாம் காதலையும் அழகான பெண்களையும் உடைமையாக்கிக் கொள்ளுதல் ஆகும். காதலால் வருத்தப்படுபவர்களை நான் ஆறுதல்படுத்துகிறேன் மற்றும் தாகம்கொண்ட அரசிலைகளின் தாகம் தணிக்கிறேன்”.

அவனுடைய மொழியின் இனிமையைக் கேட்டு, வார்த்தைகளைக் கேட்டு ஹம்தோனா ஆச்சரியமுற்றாள். அவள் சொன்னாள்: ”நீவிர் இவ்விஷயம் சம்பந்தமாக ஏதேனும் கவிதையை உரைக்க முடியுமா?”

அவன் பதிலளித்தான்: ”நிச்சயமாக.”

“நல்லது. பாஹூலவுல், நீவிர் சொல்லப்போவதை நான் கேட்பேனாக!”

பாஹூலவுல் கீழ்வருமாறு கவிதையைச் சொன்னான்:

அவன் பாடிக்கொண்டிருந்த கவிதையை கேட்டுக்கொண்டிருந்த ஹம்தோனா சொக்கிப்போய், பாஹூலவுலின் தொடைகளுக்கிடையே தூணைப் போல் எழுந்து நின்ற இலிங்கத்தை பரிசோதிக்கத் தயாரானாள். அவள், தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள்: ”நான் அவனுக்கு என்னைத் தருவேன். இல்லையில்லை தரமாட்டேன்.” இந்த நிச்சயமற்ற நிலைமையின்போது, அவள், தன் தொடைகளுக்கிடையில் மோகத்தை உணர, இன்பத்தின் முன்விளையாட்டுக்கான, அமுதரசம் ஆங்கு ஊறி, அவ்விடத்தை ஈரப்படுத்தியது. அதனால் அவள், தன்

விருப்பத்திற்கு ஏதுவாக அவனுக்கு இன்பம் அளிப்பது என முடிவெடுத்து, தன்னிடம் உதித்த எண்ணத்தினால் உறுதி மேற்கொண்டாள்: ”இந்த பாஹூலவுல் என்னிடம் சுகம் கண்டபின், அதை அவன் யாரிடம் பகிங்கரப்படுத்திச் சொன்னாலும் அவர்கள் அவன் வார்த்தைகளை நம்பப்போவதில்லை”.

அவள் அங்கியை கழற்றிவிட்டு, அவனை தன் அறைக்கு வரும்படிகூற, பாஹூலவுல் பதில் கூறினான்: ”நான் என் விருப்பத்தை நிறைவேற்றும்வரையில் ஆடையை அவிழ்க்க மாட்டேன், என் கண்ணின் கருவிழியே!”

பின் ஹம்தோனா எழுந்து, நடப்பதை நினைத்து, உணர்ச்சிவசப்பட்டு மெலிதாக நடுங்கினாள். அவள், தன் இடையணி மேகலையை கழற்றி எறிந்துவிட்டு, அறையைவிட்டுச் செல்ல, அவளைப் பின்தொடர்ந்த பாஹூலவுல் சிந்தித்தான். ”நான் முழித்துக்கொண்டிருக்கிறேனா அல்லது இது கனவா?” அவள் தனியறைக்குள் நுழைந்தபின் அவனும் பின்னால் வந்தான். பிறகு அவள் பெட்டகமென குவிந்திருந்த பட்டுத்துணிகள்மேல் தன்னைக்கிடத்தி, மெலிதாக நடுங்கிக்கொண்டே, தொடைகளுக்குமேல் ஆடையை உயர்த்தி, கடவுள் அவளுக்கு அளித்திருந்த அழகையெல்லாம் பாஹூலவுலின் கரங்களில் அளித்தாள்.

பாஹூலவுல் ஹம்தோனாவின் நேர்த்தியான குவிவிதானத்தைப் போன்று வட்டமாக இருந்த வயிறை ஆராய்ந்தான். அவனுடைய விழிகள் பொற்கிண்ணத்தில் இருக்கும் முத்தைப்போன்று இருந்த உந்திச்சுழியில் நிலைத்தது. அதிலிருந்து கீழறிங்கி அங்கு, இயற்கையின் வேலைப்பாடமைந்த அழகுமிகு சதைத்திரட்சி மற்றும் வெண்மையும் வடிவமைப்பும் கொண்ட அவள் தொடைகள் அவனுக்கு ஆச்சரியத்தைத் தந்தன.

பின் அவன், ஹம்தோனாவை மோகத்துடன் கட்டியணைத்துக்கொள்ள, விரைவாக அவள் முகத்திலிருந்து அசைவுகள் நின்றுபோவதைக் கண்டான். ஏறத்தாழ அவள் மயங்கிக் கிடந்தாள். அவள், தன் மனதை தொலைத்துவிட்டாள் மற்றும் பாஹூலவுலின் ஆண்மையை கைகளில் ஏந்திக்கொண்டு மென்மேலும் அதை ஆட்டினாள்.

பாஹூலவுல் அவளிடம் சொன்னான்: நீ ஏன் ஆழ்ந்த சிக்கல்வந்தவள்போல் இருக்கிறாய்?” அவள் பதிலளித்தாள்: ”அதை விடுக. ஓ, ஒழுக்கங்கெட்டவளின் மகனே! கடவுளே, நான் தகிக்கின்ற பெண்குதிரையாக இருக்கிறேன். நீ வார்த்தைகளைக் கொண்டு என்னை உணர்ச்சிவசப்படவைக்கிறாய். என்னமாதிரியான வார்த்தைகள் அவை! அவை எந்தவொரு பெண்ணையும் மோகங்கொள்ளவைக்கும் - அவள்

உலகத்தில் மேன்மாதிரியான படைப்பாக இருந்தால். நீ உன்னுடைய பேச்சாலும் கவிதையாலும் என்னை இணங்கச் செய்துவிட்டாய்.''

பாஹூலவுல் பதிலளித்தான்: ''அப்படியெனில் நான் உன் கணவனைப்போல் இல்லையா?''

''ஆமாம்'' என்று அவள் சொன்னாள்.

''ஆனால் ஒரு பெண், பெண்குதிரை ஆண்குதிரையிடம் மோகம்கொள்வதுபோல் ஆணைக் கண்டதும் தகிக்கிறாள். அந்த ஆண் அவளது கணவனோ அல்லது வேறு எவனோ. எனினும் இதிலொரு வித்தியாசம் உள்ளது. அதாவது, ஒரு பெண்குதிரை, வருடத்தில் சிலகாலம் மட்டுமே மோகங்கொண்டு ஆண்குதிரையை சேருகிறது. ஆனால் எப்போதும் பெண் மட்டுமே வார்த்தைஜாலத்தால் மயங்குகிறாள். இவ்விரு விஷயமும் என்னுள் சேர, என் கணவனில்லா இப்பொழுதில் காரியத்தை விரைந்து முடிப்பாயாக. ஏனெனில் அவர் விரைந்துவரக்கூடும்.''

பாஹூலவுல் பதில் சொன்னான்: ''ஓ, எந்தன் காமசொரூபிணியே! என் இடுப்பு வலிக்க, உன்மேல் பரவுவதை அது தடுக்கிறது. நீ ஆணின் நிலையை மேற்கொள். பின் அங்கியை எடுத்துக்கொண்டு என்னை செல்ல விடு.''

பின், ஒரு ஆணின் கீழே பெண்ணிருப்பதைப்போன்று தன்னை கிடத்திக்கொண்டான். அப்போது அவன் குறியானது ஒரு தூணைப்போல் நிமிர்ந்து நின்றது.

ஹம்தோனா பாஹூலவுல் அருகே வந்து, அவன் உறுப்பை கைகளிலேந்திக்கொண்டு பார்க்கத் தொடங்கினாள். அவள் அதன் அளவை, உறுதியை, வலிமையைக் கண்டு வியந்தபின் கூவினாள்: ''எல்லாப் பெண்களின் அழிவுக்கும், சிக்கல்களுக்கும் காரணம் இதோ. ஐயோ பாஹூலவுல் உன்னுடையதைப் போன்று அழகான இலிங்கத்தை வேறெவரிடமும் நான் கண்டதில்லை!'' அப்போதும் அவள் அச்சின்னத்தை கைகளிலேந்தி, அதன் தலைப்பகுதியை, தன் அரசிலை இதழ்களில் வைத்து தேய்க்க, அது இவ்வாறு கூறுவதுபோலிருந்தது: ''ஐயோ ஆண் உறுப்பே, உடனே என்னுள் வா.''

பின் பாஹூலவுல், தன் இலிங்கத்தை சுல்தானின் மகளுடைய நிதம்பத்தில் செலுத்த, அவளும் அதன்மேல் அமர்ந்து தன் யோனி முழுவதிலும் ஊடுருவச்செய்து, அதன் ஒரு சிறுபாகமும் வெளியே தெரியாமல் செய்துவிட்டுக் கூறினாள்: ''கடவுள் இந்தப் பெண்களை எந்தளவு காமம் மிகுந்தவர்களாகப் படைத்து, இன்பம் கண்டபிறகும்

சளைக்காதவர்களாக ஆக்கிவிட்டிருக்கிறான்''. பின் அவள், மேலும்கீழும் நடனமாடுவதைப் போன்று தன் பிருஷ்டத்தை ஆட்டி, அதை புதிர்போல் அசைத்தாள். இடமும் வலமுமாக, முன்னும் பின்னுமாக. அதுபோன்ற ஆட்டத்தை முன்னெப்போதும் கண்டதில்லை.

சுல்தானின் மகள், பாஹூலவுலின் இலிங்கத்தின்மீது ஆட்டம்போட்டு முடிவில் உச்சத்தை அடைந்தாள். அப்போது அவள் நிதம்பம் ஆணுறுப்பை உறிஞ்சியெடுப்பதுபோன்றிருந்தது. அதாவது, ஒரு தாயிடம் அவள் மழலை மார்பகக்காம்பை சப்பியெடுப்பதுபோலிருந்தது. இருவரும் ஒரேசமயத்தில் உச்சகட்டத்தை அடைய, இருவரும் பேராவலுடன் இன்பசுகம் கண்டனர்.

பின் ஹம்தோனா, அவன் ஆணுறுப்பைப் பிடித்து மெல்லமெல்ல அதை வெளியில் எடுத்துவிட்டுச் சொன்னாள்: ''இதுதான் வேகம் நிறைந்த ஒரு ஆணின் செயல்.'' பிற்பாடு ஒரு பட்டுத்துணியால் தன் மர்மஉறுப்பை சுத்தம் செய்துகொண்டு எழுந்தாள்.

பாஹூலவுலும் எழுந்திருந்து போகத் தயாரானான். அப்போது அவள் கேட்டாள்: ''அங்கி?''

அவன் பதில் கூறினான்: ''ஓ, என் வைப்பாட்டியே! என்னைப் புணர்ந்தது நீ. அதற்கும் பரிசு கேட்பாயோ?''

அவள் கூறினாள்: ''ஆனால் நீதானே உந்தன் இடையிலும் உறுப்பிலும் வலி இருந்ததால் என்னை ஏறச் சொன்னாய்?''

"அப்போது சொன்னேன். இப்போது பரவாயில்லை" என்று பாஹூலவுல் சொன்னான்: ''முதல் தடவை உன்னுடைய முறையாயிற்று, இரண்டாவது சமயம் என்னுடையதாகட்டும், அதன் விலை அங்கியாகட்டும், பிற்பாடு நான் என் வழியே போவேன்''.

ஹம்தோனா இவ்வாறு நினைத்தாள்: ''அவன் தொடங்கினான், இப்போது போகிறான். பிற்பாடு அவன் போய்விடுவான்.''

பிறகு அவள் தன்னை கீழே கிடத்திக்கொள்ள, பாஹூலவுல் கூறினான்: ''நீ முழுவதும் நிர்வாணமாக ஆகும்வரை நான் உன்னுடன் படுக்கமாட்டேன்''.

பிறகு அவள் ஆடைகளை அவிழ்த்து, முழுநிர்வாணமாக ஆக, அவளுடைய அழகையும் உருவையும் கண்டு பாஹூலவுல் சொக்கிப்போய் நின்றான். அவன் பருத்த தொடைகளையும், மீண்டெழுந்த தொப்பளையும், வளைவைப்போலிருந்த பெட்டக வயிறையும், ஆகாயத்தாமரையை ஒத்திருந்த கொழுத்த முலைகளையும் பார்த்தான். அவள் கழுத்து பாலைவன மானைக் கூற, திறந்திருந்த

வாயானது வளையமாக இருக்க, இதழிரண்டும் இரத்தம் பூசிய பட்டாக்கத்தியென சிவந்துபோய், புதிதாக இருந்தது. அவள் கண்கள் நன்கு பிளந்து கருமையாகவும், புருவங்கள் கருங்காலி மரத்தையொத்து, மேன்மையான எழுத்தாளரின் அரபெழுத்து வளைவைப் போலிருந்தது. அவளின் நெற்றி இரவில் வரும் முழுநிலவை ஒத்திருந்தது.

பாஹூலவுல் அவளை தழுவத் தொடங்கி, இதழ்களை உறிஞ்சி, முலைகளைச் சுவைத்தான். அவளுடைய புதிதான எச்சிலை சுவைத்து தொடைகளில் கடித்தான். இப்படியாக, அவன் தொடர்ந்து அவள் மயக்கமுற்று, அரிதாகவே திக்கித்திணறி பேசி, கண்களை மூடியிருந்தாள். பின் அவன், அவளது அரவணையை முத்தமிட, அவள் கைகளையோ அல்லது கால்களையோ அசைத்தாளில்லை. அவன் ஹம்தோனாவின் இரகசிய பாகங்களை காதலுடன் நோக்கினான். அவை தம் சிவந்துபோயிருந்த மத்திய பாகத்தினால், எல்லார் கண்களையும் கவர்ந்திழுக்கும் வல்லமை பெற்றன.

பாஹூலவுல் கூவினான்: ”ஐயோ, ஆண்களின் பெரும் ஆசையே!’’ இப்படியே அவளை கடித்துக்கொண்டும் முத்தமிட்டுக்கொண்டும் இருக்க, அவனின் ஆசைகள் பரிபூர்ணமாக எழுந்தன. அவளுடைய பெருமூச்சும் உடனே எழ, அவள் அவனது ஆண்குறியைப் பற்றி தன் யோனியில் மறையச் செய்தாள்.

இம்முறை அவன் ஆக்ரோஷமாக இயங்க, அவளும் சூடாகவே பதில் கொடுத்தாள். அப்படியே நிகழ்ந்த சம உச்சகட்டம் அவர்களைத் தேற்றியது.

பின் பாஹூலுவல் எழுந்திருந்து, தன் உலக்கையையும் அவளது உரலையும் துடைத்துவிட்டு, வெளியே போகத் தயாரானான். அப்போது ஹம்தோனா சொன்னாள்: ”ஓ, பாஹூலுவல், என்னை கிண்டல்செய்கிறீரா. எங்கே அந்த அங்கி?” அவன் பதில் கூறினான்: ”எந்தன் வைப்பாட்டியே! ஒரு சிந்தனையின்பேரிலேயே அதை வைத்திருக்கிறேன். உனக்கு வேண்டியதை நீ எடுத்துக்கொண்டாய். அதேபோல் எனக்கு வேண்டியதை நான் எடுத்துக்கொண்டேன். முதல்முறை உனக்கு, இரண்டாவது தடவை எனக்கு. இப்போது மூன்றாவது முறையாக அங்கிக்கு.”

இவ்வாறு உரைத்த அவன், அங்கியை கழற்றி மடித்து ஹம்தோனாவின் கைகளிலே கொடுக்க, எழுந்துகொண்டிருந்த அவள் திரும்பவும் படுக்கையில் படுத்துக்கொண்டு சொன்னாள்: ”உன் விருப்பம்போல் செய்!”

இவ்வாறு சொன்னதும் பாஹூலுவல், அவள்மேல் பாய்ந்து,

ஒரேவீச்சில் தன் குறியை அவள் யோனிக்குள் புதைத்தான். பின் அவன் உலக்கையை வைத்து இயங்கத் தொடங்க, அவள் பிருஷ்டத்தை அசைக்கத் துவங்க, ஒரே சமயத்தில் இருவருக்கும் ஊற்றுப் பொங்கியது. பிறகு அவன், அவள் பக்கமிருந்து எழுந்து, அங்கியை விட்டுப் போய்விட்டான்.

கறுப்பினத்தவள் ஹம்தோனாவிடம் கூறினாள்: ”எந்தன் எஜமானியே, நான் உங்களிடத்துக் கூறவில்லையா? பாஹூலுவல் ஒரு கெட்டவன். அவனிடமிருந்து சிறப்பானது எதையும் பெறமுடியாது. அவர்கள் அவனை கேலிசெய்யத் தகுந்தவனாகவே நினைக்கின்றனர். ஆனால் கடவுளின் முன்பாக அவன்தான் அவர்களைக் கிண்டல் செய்கிறான். நீங்கள் ஏன் நான் கூறுவதை நம்பமாட்டேன் என்கிறீர்கள்?”

ஹம்தோனா அவள்பக்கம் திரும்பி உரைத்தாள்: ’’உன்னுடைய விமர்சனங்களால் என்னை களைப்படையச் செய்யாதே. எது நடக்கவேண்டுமோ அது நடந்தது, ஒவ்வொரு பெண்ணுறுப்பின்மேல், அதில் நுழையும் ஆணின் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. அது சரியோ, தவறோ அல்லது காதலுக்கோ, வெறுப்புக்கோ. எந்தன் அல்குலின்மீது பாஹூலுவலின் பெயர் பொறிக்கப்படாவிட்டால், அவன் இங்கே உள்நுழைந்து, ஒட்டுமொத்த பிரபஞ்சத்தையுமே தருவேன் என்றாலும், எதுவும் நடந்திருக்காது.”

இவ்வாறு அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது கதவைத் தட்டும் ஓசை கேட்டது. கறுப்பினத்தவள் யாரது எனக் கேட்க, ”நான்தான் பாஹூலுவல்’’ என பதில் வந்தது. விதூஷகன் எதை வேண்டிவந்தானோ என ஹம்தோனா அச்சம் கொண்டுவிட்டாள். கறுப்பினத்தவள் அவனுக்கு என்ன வேண்டும் என்று கேட்க, ”கொஞ்சம் நீர் கொண்டு வா” என பதிலைப் பெற்றாள். அவள் கிண்ணத்திலிருந்த தண்ணீரை வீட்டிற்கு வெளியே கொண்டுசென்றாள். பாஹூலுவல் குடித்துவிட்டு, கைகளிலிருந்து கிண்ணத்தைத் தவறவிட, அது உடைந்துபோனது. கறுப்பினத்தவள் கதவை மூடிவிட, பாஹூலவுல் மாத்திரம் வாயிலருகே அமர்ந்துகொண்டான்.

விதூஷகன் இவ்வாறு கதவின்முன் அமர்ந்திருந்தபோது, ஹம்தோனாவின் கணவரான ஊசூர் வந்து, ”ஓ, பாஹூலுவல் நீ ஏன் இங்கே அமர்ந்திருக்கிறாய்?” என வினவினார். ”ஓ, எனக்கு கட்டளையிடுபவனே! நான் இந்த வீதிவழியே நடந்துவந்து கொண்டிருந்தபோது, கடும் தாகத்தால் அவதிப்பட்டேன். ஒரு கறுப்பினத்தவள் வந்து கிண்ணம் தண்ணீரைத் தந்தாள். கிண்ணம் கைதவறி கீழே விழுந்து உடைந்துவிட்டது. பிறகு மேன்மைதாங்கிய

ஹம்தோனா இவ்விடம் வந்து, நமது மாண்புமிகு சுல்தான் அவர்கள் எனக்கு ஈட்டுறுதியாக அளித்த அங்கியை பறித்துச் சென்றுவிட்டாள்.”

பின் ஊசூர் அவர்கள் உரைத்தார்கள்: ’’அவன் அங்கியை அவனுக்குக் கொடுத்துவிடு” அந்த சமயம் ஹம்தோனா வெளியில் வர, அவளது கணவன் அவளிடம், கிண்ணத்திற்குப் பதிலாக அங்கியைப் பெற்றது உண்மைதானா? என்று கேட்டார். ஹம்தோனா உடனே அழுது, கைகளால் அறைந்துகொண்டு, ”ஐயோ, பாஹூலுவல் என்ன செய்துவிட்டாய்?” எனக் கேட்டாள். அவன் அதற்குப் பதிலளித்தான்: ”நான் உங்கள் கணவரிடம் என்னுடைய வழியில் பேசினேன். வேண்டுமானால் நீங்களும் உங்கள் அறிவுக்கூர்மையை அவரிடம் பயன்படுத்துங்கள்’’. அவனுடைய தந்திரத்தால் மாட்டிக்கொண்ட அவளும், அங்கியை திருப்பித்தர அவனும் அவ்விடத்திலிருந்து ஏகினர்.

## அத்தியாயம்-II

# போற்றத்தக்க பெண்களைப் போற்றுதல்

ஓ, ஊசூரே! (கடவுளின் கருணை உமக்கு இருக்குமாக) எல்லாவகையிலும் பெண்கள் உண்டு என்பதை அறிவீராக. அதாவது, போற்றிப் புகழத்தக்க பெண்களும் உண்டு, அவர்கள் திருப்தி தருவார்களே தவிர வேறொன்றுமில்லை.

ஆண்களால் துய்த்து மகிழப்படும் பெண்ணானவள், கட்டுக்கோப்பான இடையும் உடல்நலம் வாய்ந்தும் பருமனாகவும் இருத்தல் வேண்டும். அவளின் கூந்தல் கருமைநிறம் வாய்ந்ததாகவும் நெற்றி அகலமாகவும் புருவங்கள் எத்தோப்பிய கருமையாகவும் கருநிறத்தில் பெரிதான கண்களையும் அதன் வெண்ணிறப் பகுதி தெளிவாகவும் இருத்தல் வேண்டும். கன்னங்கள் தீர்க்கமான நீள்வட்டமாக இருக்க, அவள் நளினமான மூக்கையும் வசீகரம் பொருந்திய வாயினையும் பெற்றிருக்க வேண்டும். இதழ்களும் நாவும் மிகுந்த சிவந்த வண்ணத்தைப் பெற்றிருக்க வேண்டும். அவள் மூச்சுக்காற்று இனிமையாக, தொண்டை நீளமாக, கழுத்து வலிமையாக, மார்பும் வயிறும் பெரிதாக இருக்க வேண்டும். அவளுடைய முலைகள் நன்கு வளர்ந்தும் உறுதியுடனும் இருக்கவேண்டும். அவளின் வயிறானது நன்கு விகிதத்தில் இருக்க, உந்திச்சுழியானது ஆழமாகவும் குறியிடப்பட்டும் இருக்க வேண்டும். அடிவயிறு மிகவும் பரந்திருக்க, அல்குல் புடைத்தும் சதைத்திரட்சியும் கொண்டிருக்க, ஆங்கே மயிர்கள் வளர்ந்து, பிருஷ்டம் வரை செல்லவேண்டும். பிருஷ்ட துளை குறுகலாகவும் ஈரமற்றதாகவும் இருக்க, தொடுவதற்கு மென்மையாகவும் தகிப்பை வெளியே

விட்டுக்கொண்டும் நாற்றம் அடிக்காததுமாக இருக்கவேண்டும். அவள் பிருஷ்டமும் தொடைகளும் உறுதி நிறைந்ததாகவும் இடுப்பு முழுதாகவும், அகலமாகவும் இடை அற்புதமான வடிவமைப்புடன், கைகளும் பாதங்களும் நளினமாகவும் பருமனான கரங்களையும் தீர்க்கமான தோள்களையும் கொண்டிருத்தல் வேண்டும்.

இத்தளவு தகுதிகளோடு இருக்கும் பெண்ணை, முன்பக்கமாகப் பார்க்கும் ஆண் ஸ்தம்பித்துப் போகிறான். அவளையே பின்பக்கமிருந்து பார்த்தால் இன்பமிகுதியால் மயக்கமடைகிறான். அமர்ந்திருக்கும்போது அவள் வட்டமான குவிமாடத்தைப் போன்றிருக்கிறாள். படுத்திருக்கும்போது மென்மையான படுக்கை, நின்றிருக்கும்போது மந்திரக்கோல் ஆகிறாள். அவள் நடக்கும்போது அங்கங்கள் யாவும் ஆடையினுள்ளே ஆடவேண்டும். அவள் பேசுவதும் சிரிப்பதும் அரிதாகவே, அதையும் காரணமின்றி செய்யமாட்டாள். அவள் எப்போதும் பரிச்சயமானவர்களைக் காண வீட்டைவிட்டு வெளியேறமாட்டாள். அவளுக்கு தோழிகள் கிடையாது, யாரிடமும் நம்பிக்கை கொள்வதில்லை, அவளுக்கு தன் கணவரே எல்லாம். அவள் யாரிடமிருந்து எதுவும் பெறுவதில்லை, தன் கணவர் மற்றும் அவர் பெற்றோரைத் தவிர்த்து அவள், தனது உறவினர்களைச் சந்தித்தால் அவர்களின் விவகாரங்களில் தலையிட மாட்டாள். அவள் துரோகம் கொண்டவளாக இல்லாமல், மறைப்பதற்கு குற்றமொன்றுமில்லாமல், கேவலமான காரணங்களுக்காக வளைந்து கொடுக்கமாட்டாள். அவள் யாரையும் வசீகரிக்க முயற்சி செய்யமாட்டாள். அவளுடைய கணவன் இன்னொரு திருமணம் செய்யவேண்டியிருப்பின், அவனுடைய விருப்பத்திற்கு தடை சொல்லமாட்டாள். அவனுடைய காரியங்களில் எப்போதும் உதவுவாள். தனது புகார்களையும் கண்ணீரையும் மறைத்திருப்பாள். அவளுடைய கணவன் சோகமயமாகவோ, துக்கமயமாகவோ இருப்பின், அவள் சிரிக்காது, சந்தோஷப்படாது, அவன் தன் சிக்கல்களில் பங்கெடுத்துக்கொண்டு, அவனை திரும்பவும் சந்தோஷம் அடையச்செய்வாள். அவள் தன் கணவனைத் தவிர்த்து வேறு எவரிடமும் சரணடைய மாட்டாள். அந்நிகழ்வு அவளை கொலைசெய்தாலும் ஏற்றுக்கொள்வாள். அவள் தன் மறை உறுப்புகளை மறைத்துக்கொண்டு, அவற்றை வெளியே காண்பிக்க மாட்டாள். அவள் எப்போதுமே வசீகரம் பொருந்தி, தன் கணவனுக்கு முரணான தோற்றத்தைக் காண்பிக்க மாட்டாள். அவள் நறுமணங்களால் தன்னை வாசம் செய்துகொண்டு, தனது குளியலறையை சுத்தமாக வைத்துக்கொண்டு, வாதுமை மரக் கிளைகொண்டு பற்களைச் சுத்தம் செய்துகொள்வாள்.

இவள்போன்ற பெண்ணையே எல்லா ஆண்களும் விரும்புவர்.

கடவுள் மட்டுமே உண்மையா என்றறியும் இக்கதை, இவ்வாறு போகிறது. அந்த சமயம், ஒரு வலிமையான மன்னன் ஒருவன் பெரியதொரு அரசாங்கத்தைக் கொண்டிருந்தான். அவனின் படையும் பெரிது. அவன் பெயர் அலி பென் திரீம்.

ஒருநாள் இரவு, தூக்கம்பிடிக்காத அவன், தன்னுடைய ஊசூர், காவல் தலைமை அதிகாரி, தளபதி ஆகியோரை அழைத்தான். தாமதமின்றி அவர்கள் யாவரும் அவன்முன் வந்து நிற்க, அவர்களை வாள்தாங்கி நிற்கும்படி உத்தரவிட்டான். அவர்களும் அதைப்போல செய்துவிட்டு, ''என்ன செய்தி?'' எனக் கேட்டனர்.

அவனும் சொன்னான். ''எனக்குத் தூக்கம் வரவில்லை. அதனால் இன்றிரவு நகரத்தில் உலா வரலாம் என்றிருக்கிறேன். நீங்கள் யாவரும் எனக்கு பக்கத்துணையாக வர வேண்டும்.''

''அடிமைகள் காத்திருக்கிறோம்'' என்று அவர்கள் சொன்னார்கள்.

மன்னன் நடந்தபடியே சொன்னான்: ''கடவுளின் திருப்பெயரால்! தீர்க்கதரிசியின் அருளானது நமக்கு வாய்க்கட்டும் மற்றும் கருணையும் அருளும் எப்போதும் அவருடன் இருக்கட்டும்.''

படை பரிவாரம் சூழ்ந்து அவனைப் பின்தொடர அவன் வீதிவீதியாக போனான்.

அவர்கள் போய்க்கொண்டிருந்தபோது, தெருக்களில் ஒன்றிலிருந்து சத்தம் ஒன்றைக் கேட்டனர். அங்கே ஒரு மனிதன் ஆக்ரோஷமாக தரையை அறைந்துகொண்டு, கல்லில் தன் மார்பை முட்டிக்கொண்டு, அழுதுகொண்டிருந்தான். ''ஐயோ, இங்கே இவ்விடத்தில் எந்தவொரு நீதியும் கிடையாது, அரசனிடம் சென்று அவன் நாட்டில் என்ன நடக்கிறது என்று சொல்ல யாரேனும் இருக்கின்றார்களா?'' அவன் இதையே இடைவிடாமல் சொல்லிக்கொண்டிருந்தான். ''இங்கே இனிமேலும் தர்மம் கிடையாது. அவள் மறைந்து போய்விட்டாள். அதனால் உலகம் முழுவதுமே கண்ணீர் சிந்துகிறது''.

மன்னன், தன் படையினரிடம் சொன்னான்: ''அமைதியாக அந்த மனிதனை என்னிடம் அழைத்துவாருங்கள். அவன் பயங்கொள்ளாதவாறு மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்துகொள்ளுங்கள்.'' அவர்களும் அவனிடத்தில் சென்று, கைகளைப் பிடித்து, ''எழுந்திரு. பயம் வேண்டாம். எந்தவொரு தீங்கும் உனக்கு வராது.'' என்றுரைத்தனர்.

அதற்கு அந்த மனிதன் பதிலளித்ததாவது: ''எனக்கு எந்தவொரு தீங்கும்

வராதென்று கூறுகிறாய், நான் எதற்கும் பயமும் கொள்ளலாகாது என்றும் உரைக்கிறாய், அதேசமயம் நீ என்னை வரவேற்கவில்லை. ஒரு நம்பிக்கையாளனின் வரவேற்பு என்பது, பாதுகாப்பையும் மன்னிப்பையும் கூறுவது. பிறகு ஒரு நம்பிக்கையாளன் மற்றொரு நம்பிக்கையாளனை வரவேற்காவிடில் அங்கே நிச்சயம் அச்சம் உள்ளது.'' இவ்வாறு சொன்ன அவன் எழுந்திருந்து நேராக அரசனிடத்தில் போனான்.

மன்னன் அங்கேயே நின்றிருந்து, தன் முகத்தை திரைகொண்டு மறைத்திருக்க, அவனுடைய படையினரும் அவ்வாறு நின்றனர். பின்னவர் வாள் தாங்கி அரசனைச் சூழ்ந்து நின்றனர்.

அந்த மனிதன் மன்னன் அருகே வந்ததும், இவ்வாறு சொன்னான்: ''ஓ மனிதனே, உனக்கு என் வணக்கங்கள்!''அரசன் பதிலளித்தான்: ''ஓ மனிதனே, உன் வணக்கங்களை திருப்பியளிக்கிறேன்!'' பிறகு அந்த மனிதன் கேட்டான்: ''எதற்காக ஓ மனிதனே என்று விளித்தீர்?'' மன்னன்: ''நீ ஏன், ஓ மனிதனே! என்று சொன்னாய்?'' என்று கேட்டான். ''ஏனெனில் எனக்கு உந்தன் பெயர் தெரியாதே.'' அரசன்: ''அதேபோல் எனக்கும் உன் பெயர் தெரியாது!'' என்றான்.

பிற்பாடு அவனிடம் மன்னன் கேட்டான்: ''நான் கேட்ட அந்த வார்த்தைகளின் அர்த்தம் என்ன?''

''ஆ ஆ இவ்விடத்தில் நீதியே கிடையாது. அவன் தன் நாட்டில் நடப்பதை மன்னனிடம் யாருமே தெரிவிப்பதில்லை.''

"உனக்கு நடந்தவற்றை என்னிடம் உரைப்பாயாக"

''நான் எனக்காக யார் ஒருவர் பழிதீர்க்க நினைக்கிறாரோ, யார் என்னை அவப்பெயரிலிருந்தும் அவமானத்திலிருந்தும் காக்க நினைக்கிறாரோ, அவரிடமே சொல்வேன், இது எல்லாம்வல்ல கடவுளை மகிழ்வுபடுத்துவதாயிருந்தால்!''

அரசன் அவனிடம் சொன்னதாவது: ''நீ பழிவாங்கச்செய்யவும், உன்னை அவச்சொல்லில் இருந்து, அவமானத்தில் இருந்து காக்கவும் என்னை கடவுளானவர் வைக்கட்டும்.''

அந்த மனிதன் கூறினான்: ''நான் உன்னிடம் சொல்லப்போவது, திகைக்கவைக்கும்... ஆச்சரியமூட்டும்... நான் ஒரு பெண்ணைக் காதலித்தேன், நாங்கள் காதலால் கட்டுண்டோம். இந்த உறவுமுறை நெடுங்காலம் நீடித்தது. பின், ஒரு வயது முதிர்ந்த பெண்மணி அவளை மயக்கி, ஒழுக்கக்கேடும், அவமானமும், துரதிர்ஷ்டமும்கூடிய ஒரு வீட்டிற்கு அழைத்துச் சென்றுவிட்டாள். பின், தூக்கம் என்

பள்ளியறையிலிருந்து பறந்து சென்றுவிட்டது. நான் ஒட்டுமொத்த சந்தோஷத்தையும் இழந்து, துரதிர்ஷ்டத்தின் அடியாழத்திற்குச் சென்றுவிட்டேன்.”

மன்னன் அவனிடம் கேட்டதாவது: ”அந்த கேடுகெட்ட சகுனம்கொண்ட இல்லம் எதுவோ? மற்றும் அந்தப் பெண் யாருடன் போனாள்?”

அந்த மனிதன் பதிலளித்தான்: ”அவள் டொரெரெமி என்ற கருப்பினத்தவனோடு இருக்கிறாள். அவன் வீட்டில், அரசனும் காணாத, நிலவைப்போன்ற அழகான பெண்கள் இருக்கிறார்கள். அவனுக்கு ஒரு வைப்பாட்டி உண்டு. அவள், அவன்மீது உயிரையே வைத்திருக்கிறாள். பக்தியுடன் இருக்கிறாள். அவனுக்குத் தேவையான வெள்ளி, உடை, குடிபானங்கள் யாவற்றையும் அனுப்பிவைக்கிறாள்.’’

பின், அந்த மனிதன் பேசுவதை நிறுத்திவிட்டான். அரசன் அவன் சொன்னதைக் கேட்டு ஆச்சரியமடைந்தான். ஆனால் ஊசூர் மட்டும், அந்த உரையாடலில் இருந்து ஒரு வார்த்தையும் தவறவிடாமல், அந்த மனிதன் சொன்னதிலிருந்து கறுப்பினத்தவன் தன்னுடையவனே என்றுணர்ந்தான்.

அரசன் அவ்வீட்டைக் காட்டும்படி அந்த மனிதனை கேட்டுக்கொண்டான்.

“நான் காட்டினால் நீ என்ன செய்வாய்?’’ அந்த மனிதன் கேட்டான்.

“நான் என்ன செய்யப்போகிறேன் என்பதைப் பார்ப்பாய்” என்று மன்னன் உரைத்தான். ”உன்னால் ஏதும் செய்யமுடியாது” என்று அவன் கூறி, ”ஏனெனில் அவ்விடத்திற்கு மரியாதையும் பயமும்கொள்ள வேண்டும். நீ வலுக்கட்டாயமாக அவ்விடத்தில் நுழைந்தால் மரணத்தைச் சந்திப்பாய். எப்படியெனில் அதனுடைய உரிமையாளன் ஐயமின்றி வலுவும் தைரியமும் கொண்டவன்.”

”இடத்தைக் காட்டுவாய்” என்று அரசன் கூறி, ”பயம் வேண்டாம்” என்றான். அந்த மனிதன் கூறினான்: ”எல்லாம் கடவுள் சித்தம்.”

பின், அவன் எழுந்து அவர்களுக்கு முன்பாக நடந்தான். அவர்களும் அவனை அகலமான தெருவில் பின்தொடர, அவன் ஒரு பருமனான கதவுகளும் எப்பகுதியிலும் நுழையமுடியாத உயர்ந்த சுவர்கள்கொண்ட வீட்டை அடைந்து நிற்க, அவர்களும் நின்றனர்.

அவர்கள் சுவர்களை ஆராய்ந்து, எப்பகுதியில் புகலாம் என யோசித்தனர். ஆனால் வழிதான் இல்லை. அந்த வீடு ஒரு கவசம்போல் இருப்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தனர்.

மன்னன், அந்த மனிதன் பக்கம் திரும்பி அவனைப் பார்த்துக் கேட்டான்: ”உன் பெயர் என்ன?”

“உமர் பின் இசாத்” என்று அவன் பதிலளித்தான்.

அரசன் அவனிடம் சொன்னான்: ”உமர், நீ கலங்கி நிற்கிறாயா?”

“ஆம் சகோதரா”. பதிலளித்த அவன்: ”அது கடவுளை உச்சபட்சமாக சந்தோஷப்படுத்துமானால்!'' என்று சொன்னான். மற்றும் மன்னன் பக்கம் திரும்பி, ”இன்றிரவு இறைவன் உமக்குத் துணையாக இருக்கக் கடவது” என்றும் சொன்னான்.

பின் அரசன், தன் படையினரிடம் கூறினான்: ”நீங்கள் உறுதிகொண்டிருக்கிறீரா? உங்களில் யார் அந்த சுவர்களின்மீது ஏறப்போவது?''

“இல்லை முடியாது” என எல்லோரும் பதிலளித்தனர்.

பின்னர் மன்னன் கூறினான்: ”நானே இந்தச் சுவரின்மீது ஏறுவேன். கடவுள் எனக்கு உதவட்டும்! விரைந்து செயலாற்றும் உங்கள் உதவியைக் கேட்கும் எனக்கு, நீங்கள் சுவரில் ஏற உதவுவீர்களாகுக! அது கடவுளின் விருப்பத்திற்கு உகந்தால்.”

அவர்கள் சொன்னார்கள்: ”என்ன செய்யப் போகிறீர்?”

மன்னன் கூறினான்: ”சொல்லுங்கள். உங்களில் வலிமையானவர் யாரோ?''

அவர்கள் பதில் உரைத்தனர்: ”உங்கள் உதவியாளனான காவலர் தலைவன்”

அரசன் கேட்டான்: ”அடுத்தது யாரோ?”

“படைத்தளபதி”

“அவனுக்குப் பின் யாரோ?'' என்று அரசன் வினவினான்.

“தலைமை ஊசூர்”

உமர் இதையெல்லாம் கேட்டிருந்து கல்லாகச் சமைந்துவிட்டான். வந்திருப்பது அரசன் என விளங்கியது. அவனுடைய மகிழ்ச்சி பன்மடங்காகப் பெருகியது.

மன்னன் மறுபடி கேட்டான்: ”இன்னும் இருப்பது யாரோ?”

உமர் பதிலளித்தான்: ”என் தலைவனே, நான்தான்”

அரசன் அவனிடம் கூறியதாவது: ”உமர், நாங்கள் யாரென்பதை நீ தெரிந்துகொண்டாய். ஆனால் எங்களை வெளிப்படுத்தாமல் இருப்பாயாக. அப்போது நீ குற்றம் குறையிலிருந்து தப்பிப்பாய்”

“உங்கள் ஆணைக்கு அடிபணிகிறேன்” என்று உமர் கூறினான்.

மன்னன் காவல் தலைவனிடம் சொன்னான்: ”உன் முதுகை வளைத்து சுவரின்மீது கைகளை ஊன்றுவாயாக”

அவ்வாறே காவல் தலைவனும் செய்தான்.

பிறகு அரசன் தளபதியிடம் சொன்னான்: ”காவல் தலைவன் தோளின்மீது ஏறுவாயாக”

அவனும் அவ்வாறே செய்து, அந்த மனிதன் தோள்களில் ஏறி நின்றான். பின் அவன் ஊசூரை ஏறச்சொல்ல, அவரும் காவல் தலைவன் தோள்களில் ஏறி சுவரில் கைகளை ஊன்றி நின்றார்.

பின் மன்னன் கூறினான்: ”ஓ உமர், உயர்ந்த இடத்தில் ஏறி நிற்பாயாக!”

உமரோ, விரைந்து செயலாற்றும் மன்னனின் வல்லமையைக் கண்டு கூவினான்: ”கடவுள் உமக்கு உதவி செய்வாராக! எந்தன் தலைவனே, உமது நியாயத்திற்கும் அவன் துணை செய்வானகுக!’’

பிறகு அவன் காவல் தலைவன் தோள்களின் மீதேறி, தளபதியின் தோள்களிலேறி, பிறகு ஊசூர் மீதேறி, பின் மற்றவர்கள் நிலையிலே நின்றான். இப்போது அரசன் மட்டுமே தனித்து இருந்தான்.

பின் மன்னன் கூறினான்: ”கடவுளின் திருநாமத்தால்! மற்றும் தீர்க்கதரிசியிடம் அவர் வைத்திருக்கும் அன்பினால், அந்த கடவுளின் கருணைக்கு வணக்கங்கள்!” அவன் காவல் தலைவனின் தோள்களில் காலை வைத்தபின் சொன்னான்: ”கொஞ்சம் பொறுத்துக்கொள். நான் வெற்றிபெற்றதும் உனக்கு ஈடு செய்கிறேன்!” மற்றவர்களிடத்தும் இவ்வாறு உரைத்து, கடைசியில் உமர் பக்கம் வந்ததும், ”ஓ உமர், சற்றுப் பொறுமையாக இருப்பாய். உன்னை என் அந்தரங்க காரியதரிசியாக ஆக்குகிறேன். எல்லாவற்றுக்கும் மேலாக அசையாதே!’’ பின், உமரின் தோள்களில் காலை வைத்து, மொட்டைமாடியின் கைப்பிடிச் சுவரை கைகளால் பிடித்து கூவினான்: ”கடவுளின் திருநாமத்தால்! அவர் தனது கருணையை தீர்க்கதரிசியின்மேல் அள்ளித் தெளிக்கட்டும்! என்று சொன்னபடி, துள்ளிக்குதிக்க, அவன் மொட்டைமாடியில் வந்து சேர்ந்தான்.

பிறகு, தன் படையணிகளிடம் சொன்னான்: ”ஒவ்வொருவர் தோள்களில் இருந்தும் மற்றவர் கீழே இறங்கலாம்!”

உடனே அவர்கள் கீழே இறங்கினர். அவர்களால் தம் அரசனின் சமயோசிதபுத்தியை நினைத்து ஆச்சரியப்படாமல் இருக்கமுடியவில்லை, அதேசமயம், நால்வரையும் ஒரேசமயத்தில் தூக்கி

நின்ற காவல் தலைவனின் பலத்தை நினைத்தும் வியப்படைந்தனர்.

பிறகு மன்னன் கீழே செல்ல வழி ஏதேனுமுள்ளதா எனப் பார்த்தான். எனினும் ஏதுமில்லை. உடனே தன் தலைப்பாகையை அவிழ்த்துப் பிரித்து, தான் நின்றிருந்த இடத்திலேயே அதன் ஒரு முனையால் முடிபோட்டு, வீட்டின் தாழ்வாரத்தில் இறங்கினான். அவன் அந்த இடத்தை முழுமையாகச் சோதனையிட்டு, வீட்டின் நடுக்கதவு பெரியதொரு பூட்டால் பூட்டப்பட்டிருப்பதைக் கண்டான். அந்தப் பூட்டின் திண்மையும் அது ஏற்படுத்திய தடையையும் கண்ட அவன் மறுத்தலையும் ஆச்சரியத்தையும் ஒருங்கேயடைந்தான். அப்போது அவன் தனக்குத்தானே சொல்லிக்கொண்டான்: ”நான் இப்போது இன்னலில் உள்ளேன். ஆனால் எல்லாம் கடவுள் செயல். இவ்விடத்திற்கு வர அவரே எனக்கு பலத்தையும் யோசனையையும் அளித்தார். பிற்பாடு அவரே என்னை என் தோழர்களிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பார்.”

பிறகு தானிருந்த இடத்தை அவன் நுணுகி ஆராய்ந்தபோதில், ஒன்றன்பின் ஒன்றாக மொத்தம் ஏழு அறைகள். எல்லாமே வேறுவேறு பாணியில் அலங்கரிக்கப்பட்டு, திரைச்சீலைகளும் வெல்வெட் மறைப்புகளும் பலவித வண்ணங்களில் தொங்கவிடப்பட்டிருந்தன.

இவற்றையெல்லாம் பார்த்த அவன், ஏழு படிகள் உயரேபோன ஒரு இடத்தைக் கண்டான். அவ்விடத்திலிருந்து பலமான குரல் சப்தங்கள் ஒலித்துக்கொண்டிருந்தன. அவன் அவ்விடத்தை நோக்கி நடந்தவாறு இவ்வாறு உரைத்தான்: ”ஐயோ கடவுளே! என் திட்டத்திற்கு உதவுவாயாக. நான் பாதுகாப்பாக இவ்விடத்திலிருந்து வரும்படி செய்வாயாக!”

அவன் முதல் படியில் ஏறியபடி இவ்வாறு கூறினான்: ”மென்மையும் கருணையும் உள்ள கடவுளின் திருநாமத்தால்!” பின் அவன் படிக்கட்டுகளைக் கூர்ந்து பார்க்க, அவை பல்வேறுவண்ண மார்பிள் கற்களால் கருப்பு, சிவப்பு, வெள்ளை, பச்சை மற்றும் இன்னபிற நிறங்களால் ஆக்கப்பட்டிருந்தன.

அவன் இரண்டாவது படிகளில் ஏறியவுடன் சொன்னான்: ”அளவில்லா உதவியை கடவுள் நமக்குத் தருவார்!’’

மூன்றாவது படியில் ஏறிய அவன் சொன்னான்: ”கடவுளின் உதவியால் வெற்றி அருகில் உள்ளது.”

நான்கவதில் ஏறிய அவன், ”யார் அதிகம் உதவுகிறாரோ அப்போது கடவுள் எனக்கு வெற்றியை அருளுவான்” என்று கூறினான்.

இறுதியில், அவன் ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது படிகளில் ஏறும்போது தீர்க்கதரிசியை வேண்டிக்கொண்டான். (கடவுளின் கருணை அவருக்கு உரித்தாகுக.)

அவன் வாயிலில் திரைச்சீலை தொங்குமிடத்திற்கு வந்துவிட்டான். அது சிவப்புவண்ண பட்டுத்துணியால் ஆனது. அங்கிருந்து அவன் அறையை ஆராய்ந்தான். அது விளக்கொளியால் மின்னிக்கொண்டிருந்த, பலப்பல சரவிளக்குகள் தொங்கிக்கொண்டிருக்க, மெழுகுவர்த்திகள் தங்கத்திலான விளக்குத்தண்டுகளில் எரிந்துகொண்டிருந்தன. அறையின் மத்தியில் கஸ்தூரிநீரில் நீரூற்று பொங்கிக்கொண்டிருந்தது. தரைமீது மேஜை துணிவகை விரிக்கப்பட்டு, அதன்மேல் பலவகை இறைச்சிகளும் பழங்களும் வைக்கப்பட்டிருந்தன.

அந்த அறைமுழுக்க தங்கமுலாம் பூசப்பட்டு வைக்கப்பட்டிருந்த மரச்சாமான்கள் கண்களை கூசச் செய்தன. நிஜமாகவே அங்கே எல்லாவகையான ஆபரணங்களும் இருந்தன.

கண்களை இடுக்கிப் பார்த்த அரசன், அந்த மேஜைவிரிப்பைச் சுற்றி, நிலவைப் போன்ற பனிரெண்டு பணிப்பெண்களும் ஏழு பெண்களும் இருப்பதை உறுதிசெய்தான். அவன் அவர்களின் வசீகரத்திலும் அழகிலும் ஸ்தம்பித்துப்போனான். அதேபோல் அங்கே, ஏழு கருப்பினத்தவ ஆண்கள் இருந்தது அவனை வியப்படையச் செய்தது. இருப்பினும் அவனுடைய கவனமெல்லாம், முழுநிலவைப் போன்று முழுஅழகுடன் கருத்த கண்களுடன் நீள்வட்டக் கன்னங்களுடன் எளிதில் வளையும் மென்மையான இடையுடனிருந்த ஒரு பெண்ணின் மேலிருந்தது. அவளின்மேல் மயக்கங்கொள்வோர் இதயங்களை பணிவாக்கும் வல்லமை அவளிடத்தில் இருந்தது.

அவளின் அழகில் மயங்கிய மன்னன் ஸ்தம்பித்துப்போனான். பின், அவன் தனக்குத்தானே கூறிக்கொண்டான்: ”இந்த இடத்திலிருந்து எவ்வாறு வெளியேறுவது? ஓ, என் மனதே! இப்போது காதலுக்கு இடம் கொடாதே!’’

தொடர்ந்து அந்த அறையை ஆராய்ந்தவன், தம்ளர்களில் மதுவை நிரப்பி குடித்துக் கொண்டிருந்தோரைப் பார்த்தான். அவர்கள் குடித்துக்கொண்டும் உண்டுகொண்டும் இருக்க, அவர்களைப் பார்த்தாலே போதையில் இருப்பதைக் கூறிவிடலாம்.

இந்த பாழாய்ப்போன இடத்திலிருந்து எவ்விதம் மீள்வது என்று அரசன் சிந்தித்துக் கொண்டிருந்த வேளையில், பெண்களில் ஒருத்தி, தன் தோழியைப் பார்த்து, அவள் பெயரைச்சொல்லி கூப்பிட்டாள். ”அடி இவளே, எழுந்திருந்து விளக்கையேற்று. எனவே, நாம் படுக்கைக்குப்

போகலாம். ஏனெனில் தூக்கம் கண்களைச் சுழற்றுகிறது. விளக்கையேற்று. பிற்பாடு நாம் நமது அறைக்குச் செல்வோம்.”

அவர்கள் எழுந்திருந்து திரைச்சீலையை விலக்கி அறையைவிட்டு விலகினர். அரசன், அவர்கள் போகும்வரை மறைந்து கொண்டான். பின் அவர்கள் மனிதகுலத்திற்கு அவசியமான உபாதையை தீர்க்கப்போனதை அரசன் நிச்சயப்படுத்திக் கொண்டதும், அவர்கள் இல்லாமல் இருந்ததை தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு அவ்வறையில் நுழைந்து ஒரு அலமாரியில் ஒளிந்துகொண்டான்.

இவ்வாறு அரசன் ஒளிந்துகொண்டதும், வெளியே போன பெண்கள் அறைக்குத் திரும்பிவந்து கதவைச் சாத்தினர். அவர்களின் நடத்தையானது போதையால் விளைந்ததென்று நன்கு தெரிந்தது. அவர்கள் தம் உடைகளைக் களைந்துவிட்டு ஒருவரை மற்றவர் ஆழத் தழுவிக்கொண்டனர்.

பின் அந்தப் பெண்கள் ஆழ்ந்து தூங்கத் தொடங்கியதும், மன்னன் வெளியில் வந்து, விளக்கொளியைக் குறைத்து, ஆடைகளை அவிழ்த்துவிட்டு, அவர்களுக்கிடையே படுத்துக்கொண்டான். அவர்கள் உரையாடியபோது அவர்களின் பெயர்களை நினைவில் இருத்திக்கொண்டதால், அவர்களில் ஒருத்தியை விளித்து, ”ஏனடி இவளே, நீ கதவின் சாவியை எங்கே வைத்துள்ளாய்?” என்று மெல்லிய குரலில் கேட்டான்.

அந்தப் பெண் பதிலளித்தாள்: ”அடித் தேவடியாளே! ஒழுங்காகத் தூங்கு. சாவி வழக்கமான இடத்தில்தான் உள்ளது.”

அரசன் தனக்குத்தானே சொல்லிக்கொண்டான்: ”வல்லமையும் பலமும், எல்லாம்வல்ல கடவுளைத் தவிர்த்து வேறு யாரிடமும் இல்லை!'' இவ்வாறு சொன்ன அவன் குழம்பி நின்றான்.

பின் திரும்பவும் அவன் அந்தப் பெண்ணிடம் சாவியைப் பற்றி கேட்டான்: ”நாள்பொழுது வரப்போகிறது. நான் அவசியம் கதவைத் திறக்கவேண்டும். சூரியன்வேறு வரப்போகிறது. நான் வீட்டை திறக்கப்போகிறேன்.”

அதற்கு அவள் பதிலளித்தாள்: ”சாவி வழக்கமான இடத்தில்தான் உள்ளது. என்னை எதற்காக குடைகிறாய்? நான் சொல்கிறேன், உறங்கு. இப்போது இன்னும் விடியவில்லை.”

திரும்பவும் அரசன் தனக்காய் சொல்லிக்கொண்டான்: ”வல்லமையும் பலமும் எல்லாம் வல்ல கடவுளைத் தவிர்த்து வேறு யாரிடமுமில்லை. அவரிடம் பயம் இல்லாதிருந்தால் இப்போதே வாளை உருவி இவளில்

செலுத்தியிருப்பேன். பின் அவன் மீண்டும் கேட்க ஆரம்பித்தான்: ”அடி இவளே!’’

அவள் கூறினாள்: ”உனக்கு என்ன தேவை?”

“நான் அசௌகரியமாக உள்ளேன். அந்தச் சாவி, அது எங்கே உள்ளதென எனக்குத் தெரியவேண்டும்?’’

அவள் பதிலளித்தாள்: ’’அடி துடுக்குக்காரி! புணருவதற்கு உந்தன் மறைவிடம் அரிக்கிறதோ? ஒரே ஒருநாள் இரவுகூட படுக்காமல் உன்னால் இருக்கமுடியாதோ? இதோ பார்! ஊசூரின் மனைவி அந்தக் கருப்பினத்தவனின் அத்தனை தேவைகளையும் தாங்கி நிற்கிறாள். அதேசமயம், கடந்த ஆறு மாதங்களாக அவனைச் சேரவில்லை! போ, சாவி அந்தக் கருப்பினத்தவன் ஆடையில் உள்ளது. அவனைப் பார்த்து, ’சாவியைத் தருவாய் என்று கேட்காதே’, மாறாக, ’உந்தன் ஆணுலக்கையைத் தருவாய்’ என்று கேட்க வேண்டும். அவன் பெயர் டொரிரேம் என்பதை அறிவாயாக.’’

மன்னன் இப்போது அமைதி காத்தான். ஏனெனில் அவனுக்குச் செய்யவேண்டியது என்னவென்று தெரிந்துபோயிற்று. அவன் உறங்கும்வரை சற்றுநேரம் பொறுத்திருந்தான். பின் அவள் ஆடைகளை அவன் பூண்டுகொண்டு, தன் வாளை அதனில் மறைத்துக்கொண்டான். அவன் முகத்தை சிவப்புநிறத் துணியால் மறைத்திருந்தான். இவ்வாறு உடையணிந்த அவன், ஒரு பெண்ணைப் போல தோற்றமளித்தான். பிற்பாடு அவன் கதவை மெல்லத் திறந்து, மென்மையாக அடியெடுத்து வைத்து, பிரதான அறையின் திரைச்சீலைக்குப் பின் மறைந்துகொண்டான். அங்கு சிலர் அமர்ந்திருப்பதைக் அவன் கண்டான். மீதம் இருந்தவர் அனைவரும் உறங்கிக்கொண்டிருந்தனர்.

பிறகு அரசன் மௌனமாக பிரார்த்தனை செய்தான்: ”ஓ, என் ஆத்மாவே! என்னை சரியான வழியில் நடத்துவாயாக. இந்த மக்கள் எல்லோரும் போதையினால் ஸ்தம்பித்துப் போயிருக்கின்றனர். எனவே, அரசனும் அவன் படையணியும் இங்கே உள்ளனர் என்பதை அவர்கள் அறியமாட்டார்கள் மற்றும் கடவுள் எனக்கு வலிமையை அளிப்பான் ஆகுக!’’

பின் அவன், பிரதான அறையில் நுழைந்தவாறு சொன்னான்: ”கடவுளின் திருநாமத்தால்!’’ அவன் கருப்பினத்தவனின் படுக்கையை நோக்கி குடித்துவிட்டு போதையில் உள்ளவனைப்போல் தள்ளாடி நடந்துசென்றான். கருப்பினத்தவரும் பெண்களும் பெண்ணுடை அணிந்திருந்ததால் அவனை பெண் என்றே நினைத்து, படுக்கையை நோக்கி அழைத்துச் சென்றனர்.

டொரிரேமி அந்தப் பெண்ணை புணர்வதற்கு விருப்பப்பட்டான். அப் பெண்ணானவள் படுக்கையில் அமர்ந்துகொண்டதும், அவள் தூக்கம் கலைந்து வந்திருக்கவேண்டும் என நினைத்து ஒருவேளை, காமக் களியாட்டம் ஆட வந்திருக்கலாம் என்றும் நினைத்தான். அதனால் அவன் அப் பெண்ணிடம், ''அடி இவளே!, ஆடைகளை அவிழ்த்துவிட்டு என் படுக்கையில் வந்து படுத்துக்கொள்வாயாக. நான் விரைவாக வந்துவிடுகிறேன்'' என்று கூறினான்.

மன்னன் தனக்குள் சொல்லிக்கொண்டான்: ''கடவுளைத்தவிர வேறு ஒருவரிடமும் வல்லமையோ பலமோ இல்லை!'' பிறகு அவன் கருப்பினத்தவன் ஆடைகளிலும் பைகளிலும் சாவியைத் தேட, அது கிடைக்கவில்லை. அவன், ''கடவுள் அருள்புரிவார்!'' என்று சொல்லிவிட்டு, கண்களை உயர்த்திப் பார்க்க, அங்கே உயரமான ஜன்னல் ஒன்றைக் கண்டான். உடனே அதைநோக்கி கையைச் செலுத்த, அங்கே தங்க வேலைப்பாடமைந்த ஆடையைக் கண்டான். அவன் அதன் பையில் கைவிட்டுத் தேட, என்ன ஆச்சரியம்! அவன் சாவிக்கொத்தைக் கண்டெடுத்துவிட்டான். அவன் அதை ஆய்ந்து, வீட்டின் கதவுகளில் பொருந்தக்கூடிய ஏழு சாவிகளைக் கண்டெடுத்துவிட்டான். உச்சபட்ச சந்தோஷத்தில் உணர்ச்சிவசப்பட்டவன். ''கடவுள் புகழத்தக்கவர்!'' என்றான். பிறகு அவன் சொன்னான்: ''இங்கிருந்து தந்திரத்தால்தான் நான் வெளியேற முடியும்.'' அவன் மயங்கிவிட்டதுபோல் நடித்து, வாந்தியெடுப்பதாக வாயில் கைவைத்து, அறையின் நடுவில் தள்ளாடினான். கருப்பினத்தவன் அவனிடம் சொன்னான்: ''கடவுள் உனக்கு அருள்புரியட்டும்! ஓ, அடி இவளே! படுக்கையில் இருக்கும் மற்ற பெண்களெல்லாம் உன்னால் நோயுற்றுவிடுவார்கள்போல் இருக்கிறதே!''

பிறகு அரசன், வீட்டின் உட்புறக் கதவுக்கு அருகே சென்று அதைத் திறந்தான். அவன் அதை மூடிவிட்டு மற்றொன்றைத் திறந்து இப்படியாக, ஏழு கதவுகளையும் திறந்து, கடைசியில் தெருக்கதவையும் திறந்தான். அவ்விடத்தில், தன் தோழர்கள் யாவரும் பெருத்த கவலையினால் காத்துக்கொண்டிருப்பதையும் அவனைப் பார்த்ததும் அவனிடம், 'என்ன பார்த்தாய்' என்றும் கேட்டனர்.

அரசன் இவ்வாறு கூறினான்: ''பதிலளிக்க இப்போது நேரமில்லை. நாம் கடவுளின் அருளாலும் உதவியாலும் வீட்டிற்குள் போகலாம். வாருங்கள்'' என்றான்.

அவனுக்கு பாதுகாப்பளிக்க அவர்களும் சேர்ந்து, ஏழு

கருப்பினத்தவர்களும் பனிரெண்டு பணிப்பெண்களும் நிலவைப்போல் அழகுமிகு ஏழு பெண்களும் உள்ளேயிருக்கும் வீட்டிற்குள் போயினர்.

ஊசூர், அரசனைப் பார்த்துக் கேட்டார்: ”என்ன உடை இதுவோ?”

அரசன் பதிலளித்தான்: ”அமைதியாக இரு. அந்த உடை இல்லையெனில் நான் சாவியைப் பெற்றிருக்க முடியாது.”

தான் நடுவில் படுத்திருந்த அந்த இரு பெண்களின் அறைக்குச் சென்று, அவள் ஆடையைக் களைந்துவிட்டு தன் ஆடைகளை அணிந்துகொண்டு வாளையும் எடுத்துக்கொண்டான். பின், அவன் பிரதான அறைக்கருகே செல்ல, உள்ளே கருப்பினத்தவர்களும் பெண்களும் இருக்க, அவனும் தோழர்களும் கதவின் திரைச்சீலைக்குப் பின்னே ஒளிந்துகொண்டனர்.

அவர்கள் அந்த அறைக்குள் எட்டிப் பார்த்துவிட்டுச் சொல்லினர்: ”அங்கே உயர்ந்த மெத்தையில் அமர்ந்துள்ள பெண்ணைப்போல அழகானவள் யாரும் இங்கே கிடையாது!”

அரசன் சொன்னான்: ”அந்தப் பெண் எனக்குத்தான். வேறு யாருக்கும் அவள் சொந்தமாகாதபட்சத்தில்.”

அவர்கள் அறையின் உள்ளே ஆராய்ந்துகொண்டிருந்த வேளையில், டொரிரேமி கட்டிலில் இருந்து இறங்க, அவனைப் பின்பற்றி ஒரு அழகான பெண் இறங்கினாள். பின், மற்றொரு கருப்பினத்தவன் வேறொரு பெண்ணோடு கட்டிலில் ஏற, இப்படியே ஏழுபேரும் ஏறினர். இவ்வாறு அவர்கள் ஒருவர்பின் ஒருவராக களியாட்டம் ஆட, மேலே சொல்லப்பட்ட அந்த அழகான பெண்ணும் பணிப்பெண்களும் இதில் கலந்துகொள்ளவில்லை. மற்ற பெண்கள் யாவரும் தயக்கம்காட்டியவாறு கட்டிலில் ஏறி, புணர்ச்சி முடிந்ததும் தலையை தொங்கப் போட்டுக்கொண்டு கீழே இறங்குவதுமாக இருந்தனர்.

இருப்பினும், கருப்பினத்தவர்களுக்கு அந்த அழகான பெண்மீது மோகம் ஏற அவளை நெருங்கினர். ஆனால் அவளோ, அவர்களை ஒதுக்கிவிட்டு சொல்லலானாள்: ”நான் இதற்கு ஒப்பமாட்டேன். என் பாதுகாப்பிலுள்ள கன்னிகளையும் விட்டுவிடமாட்டேன். ”

டொரிரேமி எழுந்திருந்து அவள் அருகில் சென்று, முழுவதும் விரைத்து தூணாக நிற்கும் தன் குறியை கைகளில் பிடித்துக்கொண்டான். பின் அந்தக் குறியால் அவள் முகத்திலும் தலையிலும் அடித்து அவன் சொன்னான்: ”இன்றிரவு ஆறு தடவை உன்னை இணங்கவைக்க முயற்சித்தேன். ஆனால் நீயோ இணங்கவில்லை. அதனால் இப்போது எனக்கு நீ வேண்டும்.”

கருப்பினத்தவனின் பிடிவாதத்தைக் கண்ட அவள், அவன் போதையிலே

கூத்தாடுவதை உணர்ந்து, சத்தியம் செய்வதன்வாயிலாக அவனை சாந்தப்படுத்த முயன்றாள். ''இங்கே, நீ அமருவாய். இன்றிரவில் உனது ஆசைகள் எல்லாம் நிறைவேறும்.''

கருப்பினத்தவன் அவள் அருகில் அமர, அவனது இலிங்கம் இன்னும்கூட தூண்போல் எழும்பி நின்றிருந்தது. இதையெல்லாம் கண்டு, கேட்டுக்கொண்டிருந்த அரசன் வியப்படைந்தான்.

அந்தப் பெண் கீழ்வரும் கவிதைகளை தன் இதயத்தின் அடியாழத்திலிருந்து எழுப்பி பாடினாள்.

அவள் இதைப் பாடி முடித்ததும் அரசன் மாபெரும் வியப்பில் சொன்னான்: ''எத்தளவு காமம் மிகுந்த பெண்ணாக கடவுள் இவளைப் படைத்திருக்கிறான்.'' அவன், தன் தோழர்களின் புறம் திரும்பி, ''இந்தப் பெண்ணுக்கு கணவன் இல்லையென்பது சர்வநிச்சயம். தவிர, இவள் ஒழுக்கங்கெடவில்லை. கருப்பினத்தவன் இவளை விரும்புகிறான். ஆனால் இவளோ, அவனை துரத்தியடிக்கிறாள்'' என்று கூறினான்.

உமர் பென் இசாத் ஆமோதித்தான். ''உண்மைதான் மன்னா! அவளின் கணவன் அவளைப் பிரிந்துசென்று ஒரு வருடம் ஆகப்போகிறது. பலப்பல ஆண்கள் அவளைப் புணர முயற்சித்தனர். ஆனால் தன்னை அவள் தற்காத்துக்கொண்டாள்.''

மன்னன் கேட்டான்: ''அவளுடைய கணவன் யாரோ?''

அவனின் தோழர்கள் பதிலளித்தனர்: ''உங்கள் தந்தையின் ஊசூரின் மகனின் மனைவி.''

மன்னன் மறுமொழி புகன்றான்: ''உண்மையைப் பேசுவாய். ஏனெனில், என் தந்தையின் ஊசூரின் மகனுடைய மனைவி குற்றமற்றவள் எனக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவள் அழகும் சுத்தமான வடிவமைப்பும் நளினமும் உடையவள். மற்றபடி, ஒழுக்கங்கெட்டதை அறியாதவளும் சோரம்போகக்கூடியவளும் அல்லள்.''

''அவளே இந்தப் பெண் " என்று எல்லோரும் கூறினர்.

அரசன் கூறினான்: ''எப்படியோ. ஆனால் அவள் எனக்கு வேண்டும்.''

அவன் உமரின் பக்கம் திரும்பி உரைத்தான்: ''இந்தப் பெண்களில் உனது எஜமானி எங்கே?''

உமர் பதில் கூறினான்: ''நான் பார்க்கவில்லை எனது மன்னனே!''

அதற்கு அரசன் சொன்னான்: ''பொறுமையாக இருப்பாய். நான் அவளை உனக்குக் காண்பிக்கிறேன்.''

உடனே மன்னனுக்கு எவ்வளவு விஷயங்கள் தெரிந்துள்ளன என உமர்

ஆச்சரியப்பட்டான். ”அந்தக் கருப்பினத்தவன் டொரிரேமி இவன்தானோ’’ என மன்னன் கேட்டான். ”ஆம். அவன்தான் என்னுடைய அடிமை” பதில் சொன்னார் ஊசூர். ”அமைதியாக இருங்கள். இப்போது பேசுவதற்குண்டான நேரமல்ல” என்று அரசன் கூறினான்.

இவ்விடத்தில் உரையாடல் போய்க்கொண்டிருக்கும்போதே, அங்கே கருப்பினத்தவன் டொரிரேமி, அந்தப் பெண்ணை அடையும் தீராத ஆவலால், அவளிடம் சொன்னான்: ”உன் பொய்களால் நான் களைப்படைந்துபோனேன். ‘‘ஓ பெதர் எல்பெதோர்” (முழு நிலவுகளின் முழு நிலவு) அப்படித்தான் அவள் தன்னைத்தானே அழைத்துக்கொண்டாள்.

மன்னன் சொன்னான்: ”அவளை அந்தப் பெயர்சொல்லிக் கூப்பிட்டவன் அவளின் உண்மையான பெயரையே சொல்லியிருக்க வேண்டும். ஏனெனில் அவள் முழுநிலவுகளின் முழுநிலவு, கடவுள் வாழ்க.”

இருப்பினும் கருப்பினத்தவனுக்கோ அவளை அடையவேண்டும் என்ற ஆவல் தலைக்கேற, அவளின் முகத்தில் அடித்தான்.

இதைக்கண்டு பொறாமையில் துடித்த மன்னன், இதயத்தில் வலிகொண்டு ஊசூரிடம் கூறினான்: ”பாருங்கள், உம்முடைய கருப்பினத்தவன் என்ன செய்கிறான் என்று! ஐயோ கடவுளே! ஒரு எதிரியைப்போல் அவன் சாக வேண்டும். எல்லோருக்கும் அவனை உதாரணமாக காட்டப்போகிறேன். அவன் தன்வழியில் நடந்தால் என்ன ஆகுமென்று!”

அக்கணத்தில் அரசனானவன், அப்பெண் கருப்பினத்தவனுடன் பேசுவதைக் கேட்டான். ”நீ உன் தலைவனான ஊசூரையும் அவரின் மனைவியையும் ஏமாற்றுகிறாய். இப்போது அவளையும் ஏமாற்றுகிறாய், அவளிடம் நீ நெருக்கமாக இருந்தும், அவள் உனக்கு ஏராளமாக உதவிகள்செய்தும் வஞ்சனை செய்கிறாய். நிச்சயமாக அவள் உன்னைக் காதலிக்கிறாள். நீயோ வேறு ஒருத்தியின் பின்னால் போகிறாய்!”

மன்னன் ஊசூரிடம் சொன்னான்: ”அவள் சொல்வதைக் கேட்பாய் மற்றும் ஒரு வார்த்தைகூடப் பேசாதே.”

பிறகு அந்தப் பெண் எழுந்து, முன்பிருந்த பழைய இடத்திற்கே சென்று கவிதையை பாடத் தொடங்கினாள்.

அவள் கூறிய வார்த்தைகளைக் கேட்டதும் ஊசூர் அழத் தொடங்கினார். அரசன் அவரை ஆறுதல்படுத்தி அமைதிப்படுத்தினான். அவளின்

வார்த்தைகளுக்கு பதில் வார்த்தைகளை சொல்லத் தொடங்கினான் அந்தக் கருப்பினத்தவன்.

சொல்லிமுடித்ததும், அந்தக் கருப்பினத்தவன் அவள்மேல் பாய்ந்து அமுக்க, அவளோ அவனைத் தள்ளினாள்.

அந்தக்கணத்தில் தன் இதயம் சுருங்குவதை மன்னன் உணர்ந்தான். அவனும் அவனுடைய தோழர்களும் வாட்களை உருவிக்கொண்டு அறைக்குள் நுழைந்தனர். கருப்பினத்தவர்களும் பெண்களும் நாற்புறமும் சுழன்ற வாட்களைத் தவிர்த்து வேறொன்றையும் கண்டார்களில்லை.

கருப்பினத்தவரில் ஒருவன் எழுந்துகொண்டு, அரசனையும் அவன் தோழர்களையும் நெருங்கினான். ஆனால் காவல்தலைவன் அவனை எதிர்கொண்டு அவன் தலையை ஒரேவீச்சில் துண்டித்தான். மன்னன் கூவினான்: ''கடவுள் உமக்கு அருள்செய்வாராக!'' உந்தன் கைகள் இன்னும் தொய்ந்துபோகவில்லை. உனது தாயாரோ பலவீனமானவரைப் பெற்றெடுக்கவில்லை. நீ எதிரியைக் கொன்றொழித்தாய். அதனால் சொர்க்கம் உனது வசிப்பிடமாகி அங்கே ஓய்வெடுப்பாயாக!''

மற்றொரு கருப்பினத்தவன் எழுந்திருந்து காவல்தலைவனைக் குறிவைத்து, அவன் கையிலிருந்த வாளைப் பிடுங்கி இரண்டு துண்டுகளாக வீசியெறிந்தான். அதுவொரு அழகான வாள். அது நாசமானதைக்கண்ட காவல்தலைவன் வெறிபிடித்தவன் போலாகி, அந்தக் கருப்பினத்தவன் கையைப் பற்றி, தலைக்குமேலாகத் தூக்கி, சுவரில் வீசி எலும்புகளை முறித்தான். அப்போது மன்னன் கூவினான்: ''கடவுளின் வல்லமையே வல்லமை. அவர் உனது கரங்களை சோர்வுறச் செய்யவில்லை. காவல்தலைவனுக்கு நிகர் அவனே! கடவுள் தமது அருளை வாரி வழங்கட்டும்!''

கருப்பினத்தவர்கள் இந்த சம்பவத்தைக் கண்டதும், ஒரு பசுவைப்போல் அமைதியாகிவிட, அவர்களின் உயிர்களுக்குத் தலைவனான மன்னன் கூறினான்: ''யார் கைகளை உயர்த்துகின்றாரோ அவன், தனது தலையை இழப்பான்!'' மீதமுள்ள ஐந்து கருப்பினத்தவர்களின் கைகளும் அவர் முதுகுக்குப் பின்புறம் கட்டப்பட வேண்டுமென ஆணை பிறப்பித்தான்.

இவையெல்லாம் நடந்து முடிந்தபின்னால், அவன் பெதொர் எல் பெதுவோரிடம் திரும்பி, ''நீ யாருடைய மனைவி? இந்த கருப்பினத்தவர்கள் யாரோ?'' என வினவினான்.

அவள் முன்னமே உமர் சொன்னதையே திரும்பவும் சொன்னாள். அவள் சொன்னதைக் கேட்ட மன்னன் அவளுக்கு நன்றி சொல்லிவிட்டு, ”கடவுள் உமக்கு அருளட்டும்” என்றுரைத்தான். பின் அவளிடம் அரசன் மீண்டும் கேட்டான்: ”புணர்ச்சியில்லாமல் ஒரு பெண்ணானவள் எத்தனைகாலம் பொறுமையாக தாக்குப் பிடிப்பாள்?” அவள் இக்கேள்வியால் அதிர்ந்துபோனாலும் மன்னன் அவளிடம் திரும்பவும் கூறினான்: ”பேசுவாய் பெண்ணே, வெட்கப்படாதே.”

பிறகு அவள் பதிலளித்தாள்: ”உயர்குலத்தில் பிறந்த நல்ல பெண்ணானவள் ஒரு ஆறு மாத காலம் வரையில் தாக்குப் பிடிப்பாள். ஆனால் தாழ்குலத்தில் பிறந்த பெண்ணாகப்பட்டவள், தன்னைத்தானே மதிக்கத் தெரியாதவள். அவள்மேல் ஒரு ஆணின் கைகள் பட்டாலேபோதும். உடனே தன்னைத்தானே ஒப்படைத்துவிடுவாள். அவனுடைய வயிறும் மர்ம உறுப்பும் அவளின் யோனியை உடனே அறிந்துகொள்ளும்.”

பின் அங்கிருந்த பெண்களில் ஒருத்தியை சுட்டிக்காட்டி, அரசன் கேட்டான்: ”யாரிவளோ?”

அவள் பதிலளித்தாள்: ”அவள்தான் காதியின் மனைவி.”

”இவள் யாரோ?”

“இரண்டாவது ஊசூரின் மனைவி”

“இவள்?’’

“தலைமை முஃப்தியின் மனைவி”.

“இவள்?”

“கருவூலக்காரரின் மனைவி”

“அடுத்த அறையிலுள்ள அந்த இரண்டு பெண்கள்?”

அவள் பதிலளித்தாள்: ”அவர்கள் இவ்வீட்டு மாண்பைப் பெற்றவர்கள். அவர்களில் ஒருத்தி ஒரு கிழவியால் நேற்றுதான் கொண்டுவரப்பட்டாள். கருப்பினத்தவன் அவளை இன்னும் தொடக்கூட இல்லை.”

பிறகு உமர் சொன்னான்: ”என் தலைவனே! இந்தப் பெண்ணைப்பற்றிதான் நான் கூறியது.”

“மற்றும் அந்தப் பெண்? அவள் யாருக்குச் சொந்தம்?’’ அரசன் வினவினான்.

“தச்சர்களின் தலைவனுக்குச் சொந்தமானவள்” என்று அவள் பதில் கூறினாள்.

பின் மன்னன் சொன்னான்: ”இந்த இளம்பெண்கள், இவர்கள் யாரோ?”

அவள் பதில் கூறினாள்: ”கருவூலத்தில் எழுத்தரின் மகளாவாள். அவள் மோத்ஸாபின் மகள், மூன்றாவது பெண் பொயிபின் மகள், அடுத்ததாக இருப்பவள் மொய்தீனின் மகளாவாள். அவள் துணிச் சாயம் போடுபவரின் மகள்.’’ மன்னனின் பார்வைக்கு அவர்கள் யாவரையும் அவள் காண்பித்தாள்.

‘‘இவ்வளவு பெண்கள் இங்கே கொண்டுவரப்பட்டதன் காரணம் யாதோ’’ என மன்னன் வினவினான்.

பெதர் எல் பெதோர் பதிலளித்தாள்: ”ஓ, எங்களின் தலைவரே! இந்த கருப்பினத்தவன் ஆன இவன், புணர்ச்சி மற்றும் நல்ல மதுவைத் தவிர வேறொன்றை அறியாதவன். நாளும் இரவுமாக புணர்ந்துகொண்டிருப்பான். அவன் தூங்கும்போதுதான் அவனுடைய ஆண்குறியும் தூங்கும்.”

மேலும் மன்னன் கேட்டான்: ”அவன் வாழ்வது எங்ஙனம்?’’

அவள் சொன்னாள்: ”தேனில் ஊறவைத்த மஞ்சள்கருவை பொறித்தும், வெண்ணிற ரொட்டிகளை விற்றும் பிழைப்பு நடத்துகிறான். மற்றும் அவன் குடிப்பது கொடிமுந்திரி மது மட்டுமே.’’

அரசன் மேலும் கேட்டான்: ”யார் இந்தப் பெண்களை இங்கே கூட்டிவந்தது? அவர்களில் யார்யார் அரசு ஊழியரின் பெண்கள்?”

அவள் பதில் கூறினாள்: ’’எங்களின் தலைவனே, நகரத்தில் விடுதிகளை நடத்தும் வயதான பெண் ஒருத்தி சேவை புரிகிறாள். அவளே அழகிலும் வடிவமைப்பிலும் சிறந்த பெண்களைத் தேர்வுசெய்து இங்கே கொண்டுவருகிறாள். ஆனால் அவள் வெள்ளி மற்றும் ஆடைகள் இவற்றுக்காக மட்டுமே சேவை புரிகிறாள். தவிர, விலைமதிப்பற்ற கற்கள், மாணிக்கங்கள் மற்ற ஆபரணங்கள்.”

“அந்த கருப்பினத்தவன் எங்கிருந்து இந்த வெள்ளியைப் பெறுகிறான்?” மன்னன் கேட்டான். அதற்கு அந்தப் பெண் மௌனமாக இருக்கவே அரசன், ”நீ ஏதேனும் தகவல் அளித்தால் நன்றாக இருக்குமென” உரைத்தான்.

இதையெல்லாம் அவனுக்கு தலைமை ஊசூரின் மனைவியே கொண்டுவந்து தருகிறாள் என அவள், தன் கடைவிழிக்கண்ணால் குறிப்புத் தெரிவித்தாள்.

மன்னனும் அவள் சொன்னதைப் புரிந்துகொண்டதும் தொடர்ந்து சொன்னான்: ”ஓ, பெதர் எல் பெதோர்! எனக்கு உன்மேல்

நம்பிக்கையுள்ளது. காதியின் இரண்டு சாட்சிகளைப்போல் என் கண்களில் உனது பிராமணம் நிற்கிறது. உன்னை வருத்தமுறச்செய்யும் விஷயத்தைப்பற்றி என்னிடம் தயங்காமல் கூறுவாயாக.”

அவள் பதில் பேசினாள்: ”நான் தீண்டப்படக்கூடயில்லை. எனது இந்த நிலை எத்தனைகாலம் நீடித்தாலும் அந்தக் கருப்பினத்தவனின் ஆசை நிறைவேறியிருக்க முடியாது.”

“அப்படியா” என்று மன்னன் கேட்டான்.

அவள் சொன்னாள்: ”ஆம், அப்படித்தான்!” அரசன் சொல்லவேண்டியதைச் சொல்லாமலே புரிந்துகொண்டாள். மன்னன் அவள் வார்த்தைகளின் பொருளை புரிந்துகொண்டான்.

“எனது மாண்பை அந்த கருப்பினத்தவன் மதிக்கிறானா? அதைப்பற்றி தகவல் தருவாய்”என்று மன்னன் சொன்னான்.

அவள் பதிலளித்தாள்: ”உங்கள் மனைவியரைப் பொறுத்தவரையில் அவன் உங்கள் மாண்பை மதிக்கின்றான். அவனுடைய குற்ற நடவடிக்கைகள் அம்மட்டில் நீளவில்லை. அதே கடவுளானவர் அவன் ஆயுளை நீட்டித்துவிட்டிருந்தால்தான் மாண்பு செய்யும் இடத்திற்கு ஏதேனும் பங்கம் விளைவிக்காமல் இருக்கமாட்டான் என்று சொல்வதற்கில்லை.”

‘‘மற்ற கருப்பினத்தவர்கள் யாரோ?’’ என மன்னன் கேட்டதற்கு, அவள் கூறினாள்: ”அவர்கள் அவனுடைய தோழர்கள். அவன் கொண்டுவந்த பெண்களை முழுவதும் அனுபவித்தபின், தன் தோழர்கள் அனுபவிக்கக் கொடுத்துவிடுவான். நீங்கள் பார்த்ததுபோல்.”

பிறகு மன்னன் பேசினான்: ”ஓ, பெதோர் எல்பெதொர்! இந்த அநியாயத்திற்கு எதிராக உன் கணவன் ஏன் என்னிடம் குற்றம் சொல்லவில்லை, நீ ஏன் புகார் தெரிவிக்கவில்லை?”

அவள் கூறினாள்: ’’காலத்தின் மன்னனே, மரியாதைக்குரிய சுல்தான் அவர்களே, எண்ணற்ற படைகளின் தலைவரே! என் கணவரைப் பொறுத்தமட்டில் நான் அவரிடத்தில் சொல்லவேண்டிய விஷயங்கள் ஏராளம். நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை. இப்போது நான் பாடிய கவிதையின்வாயிலாக தாங்கள் தெரிந்துகொண்டிருப்பீர்கள். நான் கவிதையின் முதல் வரியிலிருந்து கடைசி வரி வரைக்கும் பெண்களைப்பற்றி ஆண்களுக்கு அறிவுரை சொல்லியிருப்பேன்.”

மன்னன் சொன்னான்: ”ஓ, பெதொர் எல்பெதொர்! உன்னை எனக்குப் பிடித்திருக்கிறது. தேர்ந்தெடுக்கப்பட்ட தீர்க்கதரிசியின் (அவர்மேல் கடவுளின் கருணையும் இரக்கமும் உண்டாகட்டும்) பெயரால் நான் ஒரு

கேள்வியை உன்னிடம் வைக்கிறேன். யாவற்றையும் என்னிடம் உரைப்பாயாக. நீ எதற்கும் அச்சம்கொள்ளத் தேவையில்லை. நான் உனக்கு மன்னிப்பும் கருணையும் அளிக்கிறேன். அந்த கருப்பினத்தவன் உன்னை அனுபவிக்கவில்லையா? ஏனெனில், நீங்கள் யாவரும் அவனுடைய கைகளிலிருந்து தப்பமுடியாதிருந்தபோது எப்படி உங்கள் மாண்பை காப்பாற்றிக்கொண்டிருக்க முடியும்?"

அவள் பதிலளித்தாள்: "ஓ, எங்கள் காலத்து மன்னனே, உங்கள் உயர்பதவியின் சக்தியின் பெயரால் சொல்கிறேன்! நீங்கள் கேட்கும் அவனை என் சட்டரீதியான கணவனாகவே கொள்ளமுடியாது. பின் எப்படி என் கள்ளக்காதலனாகக் கொள்வேன்?"

மன்னன் கூறினான்: "நீ சொல்வது யாவும் உண்மைபோல் தோன்றுகிறது. ஆனால் நீ பாடிய பாடலானது என் நெஞ்சத்தில் ஐயங்களை கிளப்பிவிட்டிருக்கிறது."

அவள் திருப்பிச் சொன்னாள்: "அப்பாடலின் மொழியில் மூன்றுவித பொருட்களை நான் சொல்லியுள்ளேன். முதலில் நான் ஒரு பெண்குதிரைபோல் தகிக்கும்நிலையில் இருந்தேன். இரண்டாவதாக, எப்பிஸ் எனும் காம ரசமானது எனது மறைவிடத்தில் ஊறிவிட்டது. இறுதியான பொருள், அந்த கருப்பினத்தவனை அமைதியும் பொறுமையும் கொண்டிருக்கச் செய்யவேண்டுமென்ற நோக்கம். அதனால் அவன் என்னை சற்றுக்காலம் அமைதியில்விட்டு, ஆண்டவனே என்னை அவன் கைகளில் சேர்க்கும்படி விட்டிருப்பான்."

மன்னன் கேட்டான்: "நீ சர்வநிச்சயமாகத்தான் பேசுகிறாயா?" அவள் அமைதியுடன் இருந்தாள். பின் அரசன் கூவினான்: "ஓ, பெல்தோர் எல்பெல்தோர்! நீ மன்னிப்பு வழங்கப்பட்டாய்!" அவளுக்கு மட்டுமே இறப்பிலிருந்து விடுதலை என அவள் புரிந்துகொண்டாள். பின் அவன், அவளை இவ்விஷயத்தை இரகசியமாக வைத்துக்கொள்ளச் சொல்லி எச்சரிக்கை விடுத்தான் மற்றும் தான் அங்கிருந்து வெளியேறப்போவதாகவும் கூறினான்.

உடனே எல்லாப் பெண்களும் கன்னிகளும், பெதொர் எல்பெதோரை சூழ்ந்துகொண்டு அவளைக் கெஞ்சி நின்றனர். "மன்னனிடம் உங்களுக்கு செல்வாக்கு இருப்பதால், எங்களுக்காக அவரிடம் மன்றாட வேண்டுகிறோம்" மேலும் அவர்கள் அவள் கைகளின்மீது கண்ணீரைச் சிந்தி தோல்வியினால் மண்டியிட்டு அமர்ந்தனர்.

பெதோர் எல் பெதோர், போய்க்கொண்டிருந்த அரசனை அழைத்து அவனிடம் சொன்னாள்: "ஓ, என் தலைவனே! நீங்கள் வரம் ஏதும் எனக்குத் தரவில்லை."

”இல்லயே, நான் உனக்கு அழகான கழுதையொன்றை அனுப்பிவைத்துள்ளேன். நீ அதன்மீது ஏறி வருவாய். இந்த பெண்களைப் பொறுத்தவரை எல்லோரும் சாகவேண்டியதுதான்” என்றான்.

பின் அவள் சொன்னாள்: ”ஓ, எங்கள் தலைவரே! நான் உங்களை ஒன்று கேட்பேன். நீங்கள் தயங்காமல் மறுக்காமல் அதற்கு ஒப்புதல் அளிக்கவேண்டும்.”

மன்னனும் அவள் கேட்பதை மறுக்காமல் நிறைவேற்றுவதாக ஒப்புதல் அளித்தான். பிறகு அவள் கூறினாள்: ”நான் இந்தப் பெண்கள் மற்றும் பணிப்பெண்கள் எல்லோரையும் விடுவிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். ஏனெனில் அவர்களின் மரணங்களானது நகரத்தில் கொடுமையான குழப்படியை உண்டுபண்ணிவிடும்.”

மன்னன் கூறினான்: ”கருணைவாய்ந்த கடவுளைவிட வேறு எவரிடம் வல்லமையும் சக்தியும் உள்ளது!” பின் அவன் எல்லா கருப்பினத்தவரையும் கொண்டுசென்று தலைகளை வாங்கும்படி உத்திரவிட்டான். அவன் விதிவிலக்கு அளித்தது கருப்பினத்தவனான டொரிரேமி மட்டுமே. அவன் அதிக பருமனாகவும் கழுத்து மட்டுமே மாட்டை நிகர்த்தும் இருந்தது. அவர்கள் அவனுடைய காதுகளையும் மூக்கையும் உதடுகளையும் அறுத்தனர். பின், அவன் ஆண்குறியை அறுத்து அவன் வாயில் திணித்து பிற்பாடு கழுமரத்தில் தொங்கவிட்டனர்.

பின் அரசனானவன், அந்த வீட்டின் ஏழு கதவுகளையும் அடைக்கச் சொல்லிவிட்டு தன் அரண்மனைக்குத் திரும்பினான்.

கதிரவன் எழும்வேளையில் அவனொரு கழுதையை பெதொர் எல்பெதோரிடம் அனுப்பிவைத்து, தன்னிடம் கூட்டிவரும்படி கூறினான். அவளும் அவனுடன் வாழத் தொடங்க, அவன் அவளை சிறப்பானவர்களில் சிறப்பானவளாக கண்டுகொண்டான்.

பிறகு மன்னன் உமர் பென் இசாத்திடம் அவன், தன் மனைவியை ஒப்படைத்து, அவனை தன் அந்தரங்க காரியதரிசியாக்கிக் கொண்டான். பின் அவன், ஊசூரிடம் அவன் மனைவியை விவாகரத்து செய்யும்படி உத்தரவிட்டான். அவன், கருப்பினத்தவன் விவகாரத்தில் பல உதவிகளைச் செய்த காவல்தலைவனையும் மறக்கவில்லை. வாக்குறுதி கொடுத்தாற்போல் அவனுக்கு மாபெரும் பரிசுகளை அள்ளித் தந்தான். அவன், தன் தந்தையின் ஊசூரின் மகனையும் சிறைக்கு அனுப்பிவைத்தான். பிற்பாடு அவன், அந்த வயதான கிழவியை தன்முன் வரவழைத்து அவளைக் கேட்டான்: ”அந்த கருப்பினத்தவன்

நடவடிக்கையைப் பற்றிய எல்லா தகவல்களையும் கூறுவாயாக! பெண்களை ஆண்களிடம் இந்தமுறையில் அழைத்துவருவது நல்லதா? எனக் கேட்கிறேன்."

அந்தக் கிழவி பதிலளித்தாள்: "இந்த வயதிலிருக்கும் எல்லாப் பெண்களுக்கும் ஏறத்தாழ இதுதான் தொழில்." மன்னன் அவளை சிரச்சேதம் செய்ய உத்தரவிட்டான். அவளை இத்தொழிலில் பின்பற்றிய எல்லா வயதான பெண்களுக்கும் மரண தண்டனை அளிக்கும்படி ஆணையிட்டான். இவ்வாறு தன் நாட்டிலிருந்து விபசாரத்தின் ஆணிவேரையே அடியோடு பிடுங்கிவிட்டான்.

அவன் அந்தப் பெண்களையும் இளம்கன்னியரையும் அவரவர் பெற்றோரிடம் அனுப்பிவைத்து, கடவுளிடம் மன்னிப்புக் கோரும்படி சொன்னான்.

இந்தக் கதை, பெண்கள் தங்கள் கணவனுக்கெதிராக செய்யும் தந்திரங்களையும் நயவஞ்சகங்களையும் சற்றே கூறுகிறது.

இக்கதையின் நீதி என்னவெனில், ஒரு பெண்ணின்மேல் காதல் வயப்படும் ஆணானவன் பல்வேறு சிக்கல்களைச் சந்திப்பான் என்பதே!

## அத்தியாயம்-III

# அவமதிப்பில் வைத்திருக்கவேண்டிய ஆண்கள்

அறிக என் சகோதரனே! (கடவுள் அவனுக்கு கருணையை வாரிவழங்கட்டும்] மனிதன் ஒருவன் வடிவம் குலைந்தவனாய், கரடுமுரடான தோற்றத்தோடு, அவனுடைய குறி சிறியதாக, மெலிதாக, தொங்கிப்போயிருந்தால் பெண்களின் கண்களுக்கு அலட்சியப்படுத்தக்கூடியதாகத் தெரியும்.

இதுபோன்ற மனிதன் ஒருவன், பெண் ஒருத்தியோடு லீலைபுரியும் வேளையில், சுறுசுறுப்பாக அவள் விஷயத்தை புரிந்துகொண்டு அவளுக்கு சந்தோஷத்தை தரமாட்டான். அவள்மேல் படுத்துக்கொண்டு, முன்விளையாட்டை விளையாடமாட்டான், முத்தமிடமாட்டான், அவளை கயிறாக கட்டமாட்டான், கடிக்கவும் மாட்டான், உதடுகளை உறிஞ்சவும் மாட்டான், கிச்சுகிச்சு மூட்டவும் மாட்டான்.

அவள் தான் காணப்போகும் இன்பத்தைக் காண தயாராகும்முன்னரே அவன், அவளின்மேல் படுத்து மென்மையான வீரியமற்ற குறியை அவளுக்குள் செலுத்துவான். அவன் தொடங்கும்முன்னே அதை முடித்துவிடுவான். அவன் ஒன்றிரண்டு முறைகள் அசைவான். பின், பெண்ணின் முலைகள்மேல் படுத்திருந்துவிட்டு, தன் விந்துவை

வெளியேற்றுவான். அதைத்தான் அவனால் செய்யஇயலும். பிறகு தன்னை வலித்துக்கொண்டு, அவசரஅவசரமாக அவளிடமிருந்து எழுந்துகொள்வான்.

எழுத்தாளரால் சொல்லப்பட்டதைப் போல, இவன் போன்றதொரு மனிதன், எழுப்புவதில் மெல்லமாகவும் விந்துவை வெளியேற்றுவதில் விரைவாகவும் இருப்பான். விதையெனும் விந்து வெளியேறியபின்னே அவன் மெலிதாக நடுங்குவான். பின் அவன் மார்பு கனமாகிவிட இடுப்பின் இருபக்கங்களிலும் வலிக்கும்.

இவைபோன்ற தகுதிகளைப் பெற்றிருக்கும் ஆண்களானவர், பெண்களுக்குத் தேவையில்லை. இவனைப் போன்ற மனிதன் தன் வார்த்தைகளில் பொய்யாக இருக்கும் மிக இழிவானவன். அவன் செய்த சத்தியத்தை நிறைவேற்றவும் மாட்டான். எப்போதும் பொய்யன்றி வேறெதனையும் பேசமாட்டான். தன் மனைவியிடமிருந்து எல்லாவற்றையும் மறைப்பான். ஆனால் பிற பெண்களிடம் தான் செய்த காமவிவகாரங்களை மட்டும் உரைப்பான்.

இவனைப்போன்ற ஆணிடமிருந்து பெண் எந்தவித இன்பத்தையும் பெறமாட்டாள் என்பதால் அவனை மதிக்கவும்கூட மாட்டாள்.

அப்பாஸ் என்ற ஒரு மனிதனைப்பற்றி இங்கே சொல்லப்படுகிறது. அவனுடைய குறியானது மிகச்சிறியதாக மெலிந்தும் இருக்க, அவன் தன் மனைவியோ மிகவும் கொழுத்திருந்தாள். அவளை புணர்ச்சியில் திருப்திப்படுத்தவே முடியவில்லை. அதனால் வெகுவிரைவில் தன் தோழியரிடம் அவனைப்பற்றி குற்றமும் குறையுமாக சொல்லத்தொடங்கினாள்.

இந்தப் பெண் ஏராளமான செல்வத்தைப் படைத்திருந்தாள். ஆனால் அப்பாஸோ பரம ஏழை. அவனுக்கு ஏதேனும் வேண்டுமாயின் அவள் அதைத் தருவதேயில்லை.

ஒரு நாள் ஞானி ஒருவரை பார்க்கச்சென்று அவரிடம் தன் சிக்கலைச் சொன்னான்.

ஞானி அவனிடம் கூறினார்: உன்னிடம் சக்திவாய்ந்த குறி இருப்பின் அவளுடைய செல்வத்தை நீ பெறலாம். அவர்களின் மதமே யோனியில்தான் உள்ளது என்பதை நீ அறியமாட்டாயோ? எனினும் நான் ஒரு மருந்தைத் தருவேன். அது உனது பிரச்சனைகளை எல்லாம் தீர்த்துவிடும்.

ஞானியும் சொன்னதுபோல் மருந்தை தயார்செய்ய, அப்பாஸ் உடனே அதைப் பயன்படுத்த ஆரம்பிக்க, அவனுடைய குறி நீளமாகவும்

பருமனாகவும் வளர்ந்தது. அவனுடைய மனைவிக்கு இதைக் கண்டதும் படுவியப்பு. ஆனால் படுக்கையில் அவள் அனுபவித்ததைவிட அதிகளவு இன்பத்தை அது தரத்தொடங்கியது. அவன் அவளிடம் ஆக்ரோஷமாக இயங்க, அவளும் அதனுடன் சேர்ந்து ஆடி, பெருமூச்சுவிட்டுத் தேம்பி, பின் கத்தத் தொடங்கினாள்.

மனைவியானவள் இத் தகுதிகள், தன் கணவனிடம் பொங்கிப் பெருகவே, தன் செல்வத்தையெல்லாம் அவன் கையாளத் தந்தாள்.

## அத்தியாயம்-IV

# அவமதிப்பில் வைத்திருக்கவேண்டிய பெண்கள்

அறியுங்கள் ஊசூர் அவர்களே! (கடவுள் அவருக்கு கருணையளிக்கட்டும்) பெண்கள் யாவரும் குணாதிசயங்களால் வேறுபட்டிருப்பர். அவர்களில் புகழத்தக்க பெண்கள் உண்டு. மற்றொருவகையில் அவமதிப்பில் வைக்கப்படக்கூடிய பெண்களும் உண்டு.

ஆணுக்கு திருப்தி தராத பெண்ணானவள் அவலட்சணமாகவும் தொணதொணவென்று பேசும் இயல்புடையவள். அவள் தலைமுடியானது கம்பளிஆட்டின் மயிர்போல் இருக்கும். கண்கள் மங்கலாகத் தென்படும், நெற்றி புடைத்திருக்கும், மூக்கானது பயங்கரப் பெரிதாக இருக்கும், உதடுகள் ஈயவண்ணத்திலிருக்கும், வாய் பெரிதாக இருக்க, கன்னங்கள் சுருங்கிப்போய், பற்களிடையே இடைவெளிகள் அதிகமிருக்கும். அவள் கன்னக்கதுப்புகள் வற்றிப்போய், முகவாய்க்கட்டையின் நடுவே மயிர் முளைத்திருக்கும், அவளின் தலை அகன்ற கழுத்தில் அமர்ந்திருக்கும், அதில் நரம்புகள் புடைத்திருக்கும். அவளின் தோள்கள் மார்புக்கு எதிராக குறுகியிருக்கும், மார்பில் தொங்கிப்போன முலைகள் ஆடிக்கொண்டிருக்கும், காலியாகயிருக்கும் தோல் குடுவையென அவள் வயிறு இருக்க, அதில் கற்களின் குவியலென தொப்புள் இருக்கும், அவளின் பக்கவாட்டு விலாஎலும்புகள் துருத்திக்கொண்டிருக்கும், அவள் முதுகுத்தண்டிலிருக்கும் எலும்புகளை எண்ணிவிடலாம். அவள் முதுகில் சதையென்பதே கிடையாது. அவளின் நிதம்பம் பெரிதாகவும் குளிர்ந்தும் காணப்பட, அதில் அழுகிய உடலின் நாற்றமடிக்கும். அது முடியற்று மங்கலாக ஈரத்துடன், நீளமான கடினம் ஆக துருத்திக்கொண்டிருக்கும், கொழகொழவென்ற உதடுகளைக் கொண்டிருக்கும்.

இப்படியாகப்பட்ட பெண், பெரிதான பாதங்களையும் முட்டிகளையும்

கைகளையும் மெலிந்த தொடைகளையும் கொண்டிருப்பாள்.

இவைபோன்ற கோளாறுகளைக் கொண்டிருக்கும் பெண் மகள், பொதுவில் ஆணுக்கு இன்பம் தரமாட்டாள். குறிப்பாக, அவள் கணவனுக்கோ அல்லது காதலனுக்கோ சுகம் தரமாட்டாள்.

ஒரு ஆண்மகன், இதுபோன்ற பெண்ணோடு உறவுக்கு விழையும்போது, அவனுடைய குறியானது தன்மீது மிருகத்தின் சுமை உள்ளதுபோல், மென்மையாக தொங்கிப்போய் காணப்படும். இவள்போன்ற பெண்களை கடவுள் விலக்கிவைப்பாராக!

எல்லாவற்றுக்கும் தொடர்ந்து சிரிக்கக்கூடிய மங்கை அலட்சியப்படுத்தத்தக்கவள். எப்படியெனில், ஒரு ஆசிரியர் உரைக்கிறார். “நீங்கள் எப்போதும் சிரித்துக்கொண்டிருக்கக்கூடிய விளையாட்டிலும் கேலிசெய்வதிலும் தன் அக்கம்பக்க வீட்டுக்காரர்களைத் தேடிப்போகிற, தனக்கு சம்பந்தமில்லாத விஷயங்களில் தலையிடுகிற, தன் கணவனிடத்தில் எப்போதும் குறைசொல்லி நச்சரிக்கிற, மற்ற பெண்களோடு அவனுக்கு எதிராக நடந்துகொள்கிற, கிழவிபோல உபதேசம் செய்கிற, எல்லோரிடத்துமிருந்தும் பரிசுகளை வாங்கிக்கொள்கிற பெண்ணை எப்போதும் அணுகக்கூடாது.

சதாகாலமும் வருத்தமாக இருக்கிற பெண்ணும் தூற்றப்படவேண்டியவள். அதேபோல் அச்சுறுத்தும் தோற்றமுடைய, தொணதொணவென்று பேச்செடுக்கும், ஆண்களுடன் சர்வசாதாரணமாக பழகும், சர்ச்சைக்குரிய கணவனின் இரகசியங்களை மறைப்பதற்குத் திராணியற்ற பெண், அல்லது தீங்கிழைக்கும் எண்ணம்கொண்ட பெண் இவர்களெல்லாம் விலக்கப்படவேண்டியவர்கள். தீங்கிழைக்கும் எண்ணம்கொண்ட பெண் பொய்களையே பேசுபவள். அவள் ஒரு சத்தியத்தை செய்தாளென்றால், அதை உடைப்பதற்கே யாரேனும் அவளை நம்பினால் ஏமாற்றம்தான். அவள் ஒழுக்கங்கெட்டுப்போய், வசைகூறுபவளாக, கரடுமுரடாக முரட்டுத்தனத்துடன் இருப்பாள். அவளால் நல்ல புத்திமதியைக் கூற இயலாது. அவள் எப்பொழுதும் அடுத்தவர் விஷயங்களிலேயே தலையிட்டபடி இருப்பாள், கெடுதல் செய்வாள், அற்பமான செய்திகளிலே கவனம் செலுத்தியிருப்பாள். அவள் சோம்பேறியாக படுத்திருப்பாள், எவ்வித வேலையும் செய்யமாட்டாள், ஒரு இஸ்லாமியனை அழைக்கும்போது அவன், தன் கணவனாக இருக்கும்போதும் தேவையற்ற வார்த்தைகளை பிரயோகம் செய்வாள். அவள் நாவில் கடுஞ்சொற்களே நிறைந்திருக்கும். அவள் சுவாசத்தில்

கெட்டநாற்றம் அடிக்கும், அவளைவிட்டு பிரிந்துசென்றாலும் அது உங்களுடன் ஒட்டிக்கொண்டிருக்கும்.

அவள் பேசுவது அத்தனையும் அலட்சியப்படுத்தத்தக்கதாய் இருக்கும். அவள் பாசாங்குவாதியாக, நல்லசெயல் செய்யாதவளாக இருப்பாள். ஒரு மனைவிக்குரிய கடமைகளைச் செய்யும்படி அவளின் கணவன் கேட்க, அக்கோரிக்கையை ஏற்க மறுத்துவிடுவாள். கணவனின் காரியங்களுக்கு துணைசெய்ய மறுத்துவிடுவாள். முடிவாக, அவனை கண்ணீராலும் புகார் சொல்வதினாலும் ஸ்தம்பிக்கச் செய்துவிடுவாள்.

இவ்வகையான பெண்டிர், எரிச்சலாலும் சிக்கல்களாலும் துன்பப்படும் தன் கணவனுக்கு உதவமாட்டாள். மாறாக, அவன் துயரத்தைக் கண்டு அவளுக்கு நகைப்பும் கிண்டலுமே வரும். அவள், தன் கணவனிடத்தில் மற்ற ஆண்களிடத்தில் ஊதாரித்தனத்தையே விரும்புவாள், அவனுடைய விருப்பத்தின்பேரில் நடக்கமாட்டாள், அவனை மகிழ்வுப்படுத்த நல்ல தோற்றத்தில் இருக்கமாட்டாள். அதற்குமாறாக, அவன் எதிரே அசிங்கமான தோற்றத்தில் நடமாடுவாள். கண் மையையோ, பற்களைச் சுத்தப்படுத்தும் பொருட்களையோ பயன்படுத்தமாட்டாள்.

இவள்போன்ற பெண்ணை மனைவியாகக் கொண்ட எந்தவொரு மனிதனுமே சந்தோஷம் கொள்ளமாட்டான். கடவுளானவர் இவள்போன்ற பெண்ணிடத்திலிருந்து நம்மை விலக்கிவைப்பாராக!

### அத்தியாயம்-V

## சந்ததி உற்பத்தி

அறிக ஓ, ஊசூரே! (கடவுள் உம்மைக் காக்கட்டும்) புணர்ச்சிகொள்ள நீங்கள் விரும்பினால் அதாவது, ஒரு பெண்ணோடு இணைய விரும்பினால், உமது வயிறானது உணவாலும் நீராலும் நிறையாதிருக்கட்டும். வயிறு நிறைந்திருந்தால், புணர்ச்சியானது முழுமையாகவும் நல்லதாகவும் இருக்காது, இருவருக்கும் தீமையே வந்துசேரும். உங்களுக்கு பக்கவாதம் மற்றும் கீல்வாதம் வருவதற்கான அறிகுறிகள் தெரியும்.மேலும் குறைந்தபட்சமாக சிறுநீர் கழிப்பதில் சிக்கலும் பார்வைக் குறைபாடும் ஏற்படும்.

எனவே புணர்ச்சியின்போது வயிறானது அதிகபட்ச உணவினாலும் நீராலும் நிறையாதிருக்கட்டும். பிற்பாடு நோயினால் நீங்கள் வருத்தம்கொள்ளமாட்டீர்கள்.

புணர்ச்சிக்கு முன்பாக உங்கள் மனைவியை காமவிளையாட்டுகளால் மகிழ்ச்சிப்படுத்துங்கள். அதனால் புணர்ச்சியானது இன்பமாக முடியும்.

இலிங்கத்தை நுழைத்து புணர்ச்சியை ஆரம்பிக்கும்முன் அவளுடன் போதுமான அளவில் விளையாடவேண்டும். அவள் கன்னங்களை முத்தமிட்டு உணர்ச்சிவசப்படவைத்தல் வேண்டும், உதடுகளைச் சப்பவேண்டும், முலைகளை மிருதுவாகக் கையாள வேண்டும், உந்திச்சுழியில், தொடைகளில் மற்றும் கீழுறுப்பில் பகட்டான முத்தமிடுதல் வேண்டும். கைகளை மெதுவாகக் கடித்தல், மேலாக அங்கங்களின் எந்தவொரு பாகத்தையும் விட்டுவிடுதல் கூடாது. அவள் மார்பகங்களின்மீது நெருக்கமாகப் படர்ந்து, உங்கள் காதலையும் அடிபணிதலையும் தெரிவியுங்கள். கால்களைக் கொண்டு அவளை பின்னிக்கொள்ளுங்கள், கைகளால் அவளை அழுத்துங்கள், ஒரு கவிஞர் கூறுவதுபோல்,

நீங்கள் ஒரு பெண்ணுடன் நெருக்கமாக இருக்கும்போது, அவளுடைய கண்கள் மங்கலாக, தனக்குள்ளே வரும்படி பெருமூச்சுவிட்டபடி முனகுவதைக் கேட்பீர்கள். உங்களிருவரின் மோகமும் ஒன்றாக இருக்க, குறியில் வழவழப்பான திரவம் ஊறட்டும். ஏனெனில் இதுவே காமவிளையாட்டின் முக்கியமான கட்டம். பிறகு பெண்மகள் அனுபவிக்கும் இன்பம் சொல்லமுடியாதது. நீங்கள் அப்போது செயல்புரிந்துகொண்டே இருக்கவேண்டும். அதனால் உங்கள்மீதான அவளின் அன்பானது எப்போதும் மாறாதிருக்கும். இதைப்பற்றி இவ்வாறு சொல்லப்படுகிறது.

“ஒரு பெண்மகள் ஆழ்ந்து பெருமூச்சுவிடும்போது, அவள் இதழ்கள் சிவந்துபோய், கண்கள் செயலிழந்து மூடிக்கொள்ள, வாய் பாதி திறந்திருக்க, உடலசைவுகள் அலட்சியமாக ஆகுவதைக் காண்கிறீர்கள். அவள் தூங்குவதற்கு தயாராகிறாள் என்று உங்களுக்குத் தெரியவரும்போது, தனது நடையில் தடுமாற்றம் அடைந்தவளாக, கொட்டாவிவிடுபவளாக ஆகும்போது, குறியைச் செலுத்தி அவளுடன் சேருவதற்கு இதுவே தருணம் என்றறிருந்து செயல்பட்டால், பிறகு நீங்கள் கேள்வி கேட்கமுடியாத வரவேற்பைப் பெறுவீர்கள். அவள் கருவின் வாசலானது உங்கள் குறியை இறுக்கிப் பிடிக்க, அதுவே உங்களிருவருக்கும் அளப்பரிய சுகமாகும். இவையே அன்பையும் காதலையும் நீங்கள் பெறுவதற்கு ஒரே வழி.

காதல் விவகாரங்களில் ஆழ்ந்து கரைகண்ட கலைஞன் ஒருவனின் கட்டளைகள் எல்லோருக்கும் தெரிந்ததே.

“பெண்கள், பழம்போலும் உங்கள் கைகளில் வைத்து உருட்டும்வரைக்கும் அது இனிமைதராது. துளசிச் செடியைப் பாருங்கள். உங்கள் விரல்களால் பிடித்து அழுத்தும்வரை அது மணம்தராது. ஆம்பர்

பிசினைப்பற்றி உங்களுக்குத் தெரியும்தானே! அது கையாளப்பட்டு வெப்பமாகும்வரை தன்னுள் மறைந்திருக்கும் மணத்தை வெளிப்படுத்தாது. அதேபோல்தான் ஒரு பெண்மகளும், அவளுடன் விளையாடி, முத்தங்கள் பொழிந்து, தொட்டு மெல்ல வருடி, உயிரூட்டவில்லையெனில், நீங்கள் நினைத்ததை அவளிடமிருந்து பெறமுடியாது. படுக்கையில் அவளுடன் எவ்வித இன்பத்தையும் பெறமுடியாது. அவள் இதயத்திலிருந்து அன்பையோ, ஆசையையோ கோரமுடியாது. அவளின் எல்லாவித ஆசை-அபிலாஷைகளும் மறைந்திருக்கும்.

ஒரு ஆணைப்பற்றி இங்கே சொல்லப்படுகிறது. அவன் ஒரு பெண்ணைப் பார்த்து இப்படிக் கேட்கிறான்: ‘‘புணர்ச்சியின் போது என்னவிதமாக நடந்துகொண்டால் பிடிக்கும்?’’

அதற்கு அவள் சொன்ன அறுதியான பதில் கீழ்வருமாறு:

“நீங்கள் என்னை கேள்விகேட்டீர்கள். அதற்குண்டான பதில் என்னவென்றால், விளையாடுதலும் தொடுதலுமே புணர்ச்சியின் சுவையைக் கூட்டுகிறது. இவை முன்நிகழ உச்சகட்டத்தின்போது அழுத்தமான தழுவலே பேரின்பம்!”

“என்னை நம்புங்கள். முத்தங்கள், மெல்ல கடித்தல், இதழ்களை உறிஞ்சுதல், இறுகத் தழுவுதல், முலைகளின் காம்புகளில் வாயைக் கொண்டுபோதல், புதிதான எச்சிலைச் சுவைத்தல். இவையே அன்பை ஊட்டி வளர்க்கும்.”

“இவ்வாறு செய்திருக்கும்போது, இருவருக்கும் ஒரேசமயத்தில் உச்சகட்டம் உண்டாகி, அக்கணத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரேசமயத்தில் பேரின்பம் உண்டாகிறது. அப்போது ஆண், தன்னுடையை குறியை கருப் பையானது பிடிப்பதை உணர, இருவரும் ஒரேநேரத்தில் அதீத இன்பத்தை உணர்வார்கள்.”

இதுதான் காதல் பிறப்பதற்கான வழி. இம்முறையில் காமமானது வழிநடத்தப்படவில்லையெனில், பெண்மகள் முழு இன்பத்தைப் பகிரமாட்டாள். அவளின் கருப்பை சுகத்திற்கு ஏங்கி நிற்கும். அறிவாயாக! பெண்மகள் தன் ஆசை திருப்தியடையவில்லையென உணருவாள், அவள் கருப்பை சொன்னபடி செய்யாவிடில் இயங்குபவன்மீது அவளுக்கு ஆசை எழாது. ஆனால் கருப்பை தன்னுள் குறியானது இயங்கிவிட்டால், பிற்பாடு அவன் உருவத்தில் அசிங்கமாக இருப்பினும் அவன்மீது அதீதகாதல் கொள்வாள்.’’

“பிறகு இரண்டுபேரின் சுக்கில-சுரோணித ஊற்றும் ஒரேசமயத்தில்

கிளம்ப நீ காரணமாக இருக்கவேண்டும். இங்கேதான் காதலின் இரகசியம் ஒளிந்துள்ளது.”

இவ்விஷயத்தைக் கற்று, அதன்படி செயல்படும் வீரனே ஒரு பெண்ணின் நம்பிக்கையைப் பெறமுடியும்.

“ஓ, ஆண்களே! உனக்கும் மற்றெல்லாருக்கும் உரைப்பது என்னவெனில், நீங்கள் பெண்ணின் அன்பையும் காதலையும் வேண்டி கடும் உழைப்பைச் செய்கிறீர்கள். அவள் இதயத்தில் மென்னுூர்வு தோன்ற லீலை புரியவேண்டுமாயின் கலவிக்கு முன்பாக விளையாடுங்கள். பேரின்பத்திற்கு அவளைத் தயார்செய்யுங்கள், முடிவை அடையும்வரை எதையும் விட்டுவிடாதீர். கடும் உழைப்பினால் அவள் உடலை ஆராய்ந்து பாருங்கள், அவளுடன் அவள் நினைப்பாகவே இருங்கள், வேறெந்த விஷயமும் சிந்தனையை ஆக்ரமிக்கவிடாதீர், அந்த இன்பகரமான பொழுதை விட்டுவிடாதீர், அவள் கண்கள் பாதிமூடியும் பாதி திறந்துமிருக்கும் அந்தப்பொழுதே கலவிக்கு உகந்த நேரம். பிற்பாடு வேலையை ஆரம்பியுங்கள். ஆனால் உங்கள் முத்தங்களோ அல்லது விளையாட்டுகளோ விளைவை உண்டாக்குமுன் செயல்படாதீர்.

“நீங்கள் சரியான சமயத்தில் ஒரு பெண்ணை தகுந்தநிலைக்குக் கொண்டுவந்துவிட்டால் ஓ மனிதா! உந்தன் ஆண்குறியை அவளுக்குள் செலுத்தி, பின் சரியான அசைவுகளை மேற்கொண்டால், அவள் தனது ஆசைகள் யாவும் திருப்தியடைய அடங்குவாள்.’’

“அவள் முலைகளின்மேல் படு, கன்னங்களில் மழையென முத்தங்கள் பொழி, அவள் நிதம்பத்திலிருந்து உந்தன் குறியை எடுத்துவிடாதே, அவளின் கருப்பைக்காக அழுத்திச் செலுத்து. பிறகு உந்தன் உழைப்புக்கு ஊதியம் பெறுவாய்.’’

“கடவுளின் உதவியால் அதை க்கண்டுவிட்டால், உந்தன் குறியை இழுத்துக்கொள்ளாதே. அதிலேயே இருக்கவிட்டு எண்ணிலடங்கா இன்பத்தைப் பெறுவாயாக! பெண்ணுடைய ஆழமான பெருமூச்சையும் முனகல்களையும் கேட்டிருப்பாயாக. அவை, அவளுக்கு நீ தந்த வன்முறையான அருளுக்கு சாட்சியம் கூறும்.’’

“பேரின்பம் பெற்றபின், காதல்கொண்ட உந்தன் போராட்டம் முடிவுக்குவந்தபின்னர், சட்டென்று எழுந்துகொள்ளாதே. மற்றும் உனது குறியை மெல்ல இழுத்துக்கொள். பெண்ணின் அணைப்பிலேயே இருப்பாய், அவளது வலதுபக்கத்தில் படுத்திருந்து உனது சந்தோஷத்தை நினைவுகூறு. அப்போதும் இன்பம் பெருகும். மாறாக, கழுதையானது ஏறுவதுபோல் ஒரு பெண்ணை புணர்ந்ததுமுடித்ததும்

தன் குறியை உருவிக்கொண்டு அவளைவிட்டு அப்பால் விலகுகிற ஆணைப்போல நடந்துகொள்ளாதே. இவைபோன்ற நடவடிக்கைகளை விட்டுவிடு. ஏனெனில் இவை பெண்ணின் இன்பத்தை முழுவதும் பறித்துவிடும்.”

சுருக்கமாகச் சொல்வதெனில், ஒரு உண்மையான காதலன் நான் சொல்வதினின்று தவறவே மாட்டான், என்னுடைய இந்தக் கணிப்பின்படி பெண்ணுக்கு பேரின்பம் உண்டாகும். அந்த பேரின்பத்தை உண்டாக்கும் விதிகளேதான் இவை.

கடவுளானவர் யாவற்றையும் சிறப்பானவையாகவே படைத்திருக்கிறார்!

## அத்தியாயம்-VI

# புணர்ச்சியைப்பற்றிய எல்லா தகவல்களும்

அறிக, ஓ ஊசூரே! (கடவுள் உமக்கு எல்லா நன்மைகளையும் செய்யட்டும்}) நீங்கள் இன்பமிகு புணர்ச்சியை பெறவேண்டுமென்று விரும்பினால் அதாவது, மெத்தையில் போர்புரியும் இருவரும், ஒரேசமயத்தில் சுகத்தைப் பெற்று திருப்தியடைய வேண்டுமென விரும்பினால், முதலில் அப்பெண்ணோடு விளையாட வேண்டும். பிறகு முத்தங்களால் அவளை உணர்ச்சிவசப்பட வைக்கவேண்டும், பின் உதடுகளை மெல்லப் பிடித்து உறிஞ்சவேண்டும், அதன்பின் கழுத்தையும் கன்னங்களையும் வருடி உதட்டால் உறியவேண்டும், பிறகு அவளை மெத்தையில் புரட்டிப்போட்டு, அவள் பின்புறத்தில் அவள் வயிற்றில் என முத்தங்கள் பொழிந்து, அவள் கண்களைப் பார்த்து சுகம் அருகிலுள்ளது எனப் புரிந்துகொண்டு, முந்திய அத்தியாயத்தில் நான் சொன்னதுபோல் எதையும் விட்டுவிடாமல் செயல்புரிய வேண்டும்.

பின், அப்பெண்ணின் இதழ்கள் மெல்லநடுங்கி சிவந்து காணப்படுவதை நீங்கள் கண்டுகொண்டதும், அவளின் கண்களானது மெல்ல வாடி, மூச்சானது விரைவுபட்டதும், அவள் புணர்ச்சியை வேண்டி சூடடைந்துவிட்டாள் என அறிவாயாக. எனவே, உந்தன் குறியானது அவளது யோனிக்குள் நுழைய வேண்டும். நீ எந்தன் அறிவுரையைப் பின்பற்றினால், உங்கள் இருவருக்கும் பெருத்த இன்பம் கிட்டும். அது உனக்கு மாபெரும் திருப்தியை அளிப்பதுடன், இனிமையான ஞாபகத்தை ஊட்டும்.

யாரோ ஒருவர் கூறினார்.

“நீங்கள் புணர்ச்சிக்கு விரும்பினால், பெண்ணை நிலத்தில் கிடத்தி,

அவளின் மார்பகங்களுக்கு நெருக்கமாக, அவளது இதழ்கள் உம்மைத் தீண்டும்படி வைக்கப்படவேண்டும். பின், அவள் மூச்சைப்போன்று நெருக்கமாக பிணைத்துக்கொண்டு மெல்லக் கடிக்கவும். அவளுடைய முலைகளை முத்தமிடவும், அவளது வயிற்றை, பிருஷ்டத்தை முத்தமிட்டு, கைகள்கொண்டு அவளை அழுத்தவும். அதனால் அவளை சந்தோஷத்தில் திக்குமுக்காடச் செய்வாய். இப்படியாக, அவள் இவ்விஷயத்தில் நெடுந்தொலைவுக்குச் சென்றதும், உந்தன் குறியை அவளுக்குள் வைத்து அழுத்துவாய். நான் சொன்னதுபோல் நீ செய்தால் இன்பகரமான விஷயங்கள் இருவருக்கும் ஒரேசமயத்தில் நடக்கும். இதுவே பெண்ணின் இன்பத்தை இனிமையாக வைக்கும். ஆனால் நீ என் அறிவுரையை பின்பற்றத் தவறினால், அப்பெண்ணானவள் திருப்தியடைய மாட்டாள், நீயும் அவளை இன்பமடையச் செய்ய முடியாது.”

புணர்ச்சி முடிந்ததும், உடனே எழுந்துவிடாதே. மாறாக, அவளின் வலதுபக்கத்தில் மெதுவாக வா. அச்சமயம் அவள் கருத்தரித்தால், அவள் ஒரு ஆண் குழந்தையை ஈன்றெடுப்பாள். அது கடவுளின் உயர்ந்த விருப்பமாக இருந்தால்!

ஞானியரும் வீரர்களும் சொல்கிறார்கள்: {கடவுள் தமது மன்னிப்பை அவர்களுக்கு வழங்கட்டும்}

“அப்பெண்ணின் யோனிமீது கைவைத்து பின்வரும் வார்த்தைகளை உரைக்க வேண்டும். ‘கடவுளின் திருப்பெயரால்! அவர் தனது தீர்க்கதரிசிக்கு கருணையும் இரக்கத்தையும் வழங்குவராக! ஆஹா, என் கடவுளே! எந்தன் தீர்க்கதரிசியின் பெயரால் பிரார்த்தனை செய்கிறேன். இந்த உறவின்வாயிலாக எனக்கு ஆண்மகவைத் தருவாய் மற்றும் நமது அருளாளரான முகமது அவர்களின் யோசனையின்பேரில், அப்பெண் ஆண்மகவை ஈன்றெடுப்பாள்.”

புணர்ச்சிக்குப் பின்னர் மழைநீரைக் குடிக்காதீர். ஏனெனில் அது சிறுநீரகங்களை பலவீனப்படுத்திவிடும்.

நீங்கள் புணர்ச்சியை திரும்பவும் செய்யவிரும்பினால், இனிமையான மணமூட்டியினால் நறுமணமூட்டிக்கொண்டு, பின் பெண்ணுக்கு நெருக்கமாக இருந்தால், நீங்கள் சந்தோஷகரமான முடிவை அடைவீர்கள்.

பெண்ணானவள் உங்கள்மீது அமர்ந்து புணர்ச்சியை செய்யவிடாதீர். அதனால் அவளின் இன்பத்திரவம் உங்கள் குறியினுள் ஊடுருவி கொனெரியா எனும் ஆணுறுப்பு நோயை வரவழைத்துவிடும்.

புணர்ச்சிக்குப்பின் கடும் வேலைகளைச் செய்யாதீர். அது உங்களது உடல்நலத்தை கடுமையாக பாதித்துவிடும். அதனால் சிறிதுநேரம் ஓய்வுகொள்ளுங்கள்.

பெண்ணின் நிதம்பத்திலிருந்து உங்கள் குறியை எடுத்தபின் உடனே அலம்பாதீர். எரிச்சல் அடங்கியபின்னரே அதனையும் அதன் தொளையையும் கழுவவேண்டும். அடிக்கடி குறியை கழுவதல் வேண்டாம். யோனியிலிருந்து சடாரென குறியை எடுக்க வேண்டாம். ஏனெனில் இச்செய்கை புண்ணை தோற்றுவித்துவிடும்.

## பலவித புணர்ச்சி நிலைகள்

பெண்களுக்குச் செய்யப்படும் புணர்ச்சி நிலைகளானது எண்ணிலடங்காதவையும், பல்வித நிலைகளுமாகவும். இப்போது மாறுபட்ட புணர்ச்சிநிலைகளை உங்களிடம் சொல்லவேண்டிய சமயம் வந்துவிட்டது.

எல்லாம் வல்ல கடவுளானவர் கூறுகிறார்:

“பெண்கள் உழப்படும் நிலத்திற்கு ஒப்பானவர்கள். அந்நிலத்தில் உங்கள் விருப்பப்படி செல்லலாம். உங்கள் விருப்பத்திற்கு இணங்க எந்த நிலை வேண்டுமோ அதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவும். ஆயினும் இடத்திற்குத் தக, அப்பெண்ணுடைய அரசிலைக்குத் தக அந்த நிலை அமையவேண்டும்.

முதலாம் நிலை: பெண்ணை மல்லாக்கக் கிடத்தி, அவள் இரு தொடைகளையும் உயர்த்தி, அவள் கால்களுக்கிடையே சென்று, உங்கள் குறியை அவளுள் அறிமுகப்படுத்தவேண்டும். பின்கால்களின் நுனிவிரல்களால் நிலத்தை தாங்கிப் பிடித்தவாறு அவளின் இன்பத்திற்கேற்ப குடாயவேண்டும். இது ஆண்மகனின் நீண்டநேரப் புணர்ச்சிக்கு நல்லதொரு நிலையாகும்.

இரண்டாம் நிலை: உங்கள் குறி சிறியதாக இருப்பின், பெண்ணை மல்லாக்கக் கிடத்தி, அவள் கால்களை காற்றில் உயர்த்தவும். எனவே அவளின் வலதுகால் வலதுபக்க காதுக்கருகிலும், இடதுகால் இடது காதுக்கருகிலும் இருக்க, இந்தநிலையில், பிருஷ்டபாகமானது உயர்ந்திருக்க, அவளுடைய நிதம்பமானது முன்பக்கம் துருத்திக்கொண்டிருக்கும். பிறகு உங்கள் குறியை உள்ளே நுழைக்கலாம்.

மூன்றாவது நிலை: பெண்ணை நிலத்தில் பரப்பி கிடக்கவிடுங்கள். பின் அவளின் தொடைகளுக்கு நடுவில் செல்லுங்கள். பின்னர் அவளது ஒரு

காலை உங்கள் தோளின்மீது வைத்துக்கொள்ளுங்கள். அதன்பின் உங்கள் ஒரு கையை அவளது மற்றொரு காலுக்கிடையில் நுழைத்து கக்கம் வரை கொண்டுசெல்லுங்கள், பிற்பாடு இயங்குங்கள்.

நான்காம் நிலை: அவளை மல்லாக்க கிடத்துங்கள். அவள் இரு கால்களையும் உங்கள் இரு தோள்களின்மீது வையுங்கள். இந்நிலையில் உங்களின் இலிங்கமானது அவள் குறியைப் பார்த்திருக்கும். அப்போது அது தரையை தொடக்கூடாது. பின் உங்கள் குறியை நுழையுங்கள்.

ஐந்தாம் நிலை: பக்கவாட்டில் அவளை படுக்கவையுங்கள். நீங்களும் அதேபோல் படுத்துக்கொண்டு அவளின் தொடைகளுக்கு இடையில் வாருங்கள். பின் உங்கள் குறியை அவளது நிதம்பத்திற்குள் நுழையுங்கள். ஆனால் இந்த பக்கவாட்டுப் புணர்ச்சியானது அடிக்கடி செய்யப்பட்டால் மூட்டுவாதமும் கீல்வாத நோயும் பீடிக்கும்.

ஆறாவது நிலை: அவள் முட்டிபோட்டு முழங்கைகளை ஊன்றி, பிரார்த்தனையின்போது இருக்கும்நிலையை அடையவேண்டும். இந்தநிலையில் அல்குலானது பின்புறமாக துருத்திக்கொண்டிருக்கும். பிற்பாடு உங்கள் குறியைக்கொண்டு நீங்கள் தாக்குதலைத் தொடங்கலாம்.

ஏழாவது நிலை: படுக்கையில் கிடத்திய பெண்ணின் தொடைகளுக்கு நேராக அமருங்கள். பின் அவளுடைய ஒரு காலைத் தூக்கி உங்கள் தோளின்மீது போட்டு, அவள் அப்படியே கிடக்க, அவளின் மற்றொரு கால் உங்கள் தொடைகளுக்கிடையே இருக்கும். பின், அவளின் அரசிலையில் புகுந்து, உங்கள் கைகளைக் கொண்டு மார்புக்கு வலித்து தழுவிக்கொள்ளுங்கள்.

எட்டாவது நிலை: மல்லாக்க தரையில் பரப்பிக் கிடந்தநிலையில் அவள் கால்கள் பின்னிக்கொள்ளட்டும். பின் குதிரை ஏறும் வீரனைப்போன்று, நீங்கள் முட்டிபோட்டு அமர்ந்தநிலையில் அதேசமயம், அவளின் கால்கள் தொடைகளில் இருக்க, அப்போது உங்கள் ஆயுதத்தை அவள் பெண்மைக்குள் நுழைக்கலாம்.

ஒன்பதாவது நிலை: முன்புறம் அவளை சாய்ந்துகொள்ளும்படி விடுங்கள் அல்லது உங்களின் வசதிக்கேற்ப, அவளின் பின்புறத்தில் சாய்ந்துகொள்ளும்படி விடுங்கள். அவளுடைய கால்கள் நிலத்தில் ஊன்றி இருக்கட்டும். பின், தன் அரசிலையை உங்களின் குறிக்கு அறிமுகப்படுத்துவாள்.

பத்தாவது நிலை: பெண்ணை ஒரு உயரம் குறைந்த தலையணையில் இருக்கும்படி வைக்கவும். அதனால் அவள் தன் இரு கைகளாலும்

அதைப் பிடித்துக்கொள்வாள். பின் அவளுக்கு அடியில் படுத்திருந்து, அவள் கால்களை உங்கள் தொப்புள்வரை உயர்த்தவும். அப்போது அவளின் கால்களால் உங்கள் உடலின் இரு பகுதிகளையும் அவள் பிடிக்கட்டும். இந்நிலையில் அவளுடன் குறியை பிணைத்துக்கொண்டு, தலையணையின் பின்புறப்பகுதியை பிடித்துக்கொள்ளுங்கள். அதேசமயம் நீங்கள் இயங்கும்போது அப்பெண்ணும் இயங்கவேண்டும்.

பதினோராவது நிலை: அவளை ஒரு தலையணையின்மீது மல்லாக்க கிடத்தவும். அவள் கால்களுக்கிடையே போய் பின் அவளது இரு பாதங்களையும் ஒன்றுசேர்த்து பிடித்துக்கொள்ளும்படி செய்துவிட்டு, பிறகு உங்கள் குறியை அறிமுகப்படுத்துங்கள்.

இந்தியாவிலுள்ள மக்கள் பயன்படுத்தும் மேலேசொன்ன நிலைகளோடு சேர்த்து, வேறுபல நிலைகளும் உள்ளன. அந்தப் பகுதியின் மக்கள் யாவரும் பெண்ணை சுகிக்க பல்வித வழிமுறைகளைப் பயன்படுத்துகின்றனர். அவர்கள் எல்லாம் நம்மைவிட புணர்ச்சியில் அதிகளவு அறிவும் ஆராய்ச்சியும் செய்திருக்கின்றனர்.

முதலாம் நிலை: பெண்ணின் பின்புறத்து பிருஷ்டப்பகுதியில் ஒரு மெத்தையை வைக்கவும். பின், அவள் கால்களுக்கிடையே போகவும். அப்போது உங்களின் கால்கள் நிலத்தில் ஊன்றியிருக்கட்டும். அவள் தொடைகளை மார்புநோக்கி உம்மால் முடிந்தமட்டில் மடித்துக்கொள்ளவும். உங்கள் கைகளைக்கொண்டு அவள் கைகளுக்கு அடியில் கொண்டுசென்று தோள்களைத் தழுவவும். பின், குறியை நுழைத்து விந்து வரும்வேளையில் உங்களுடன் சேர்த்து அணைக்கவும். இந்த நிலை பெண்களுக்கு மிகுந்த வலி தரக்கூடியது. ஏனெனில் அவள் தொடைகள் மேல்நோக்கி உயர்த்தி மடித்திருக்க, பிருஷ்டம் மெத்தைகொண்டு உயர்த்தப்பட்டிருக்க, அல்குலின் சுற்றுப்புறத் தசைகள் யாவும் இறுகியிருக்க, கருப்பை முன்னோக்கி வந்திருக்க, சற்றும் அசைவதற்கு வழியில்லாமல் போகிறது. மற்றும் பெண்ணின் உள்ளே செல்பவருக்கும் இடம் கிடைக்காது. அதேபோல், தாக்குதல் தொடுப்பவருக்கும் கருப்பையின் வாசலை தாக்கமுடியாமல் போகிறது. எனவேதான் இந்தநிலையை கூடுமானவரையில் கடைப்பிடிக்கக்கூடாது. இருப்பினும் ஆணின் குறியானது சிறியதாகவும் மென்மையாகவும் இருப்பின் இந்நிலையை கடைப்பிடிக்கலாம்.

இரண்டாவது நிலை: பெண்ணைக் குனியவைத்து, அவள் தொடைகளை பாதங்கள்படுகிறார்போல வைக்கவேண்டும், இப்போது அவை பிருஷ்டத்தைத் தொட்டாற்போல நிலைகொள்ளும். பிறகு நீங்கள் அவளின் பின்புறத்தில் அமர்ந்துகொள்ளவும், பின் அவள் நிதம்பத்தைப்

பார்த்தவாறு உங்கள் இலிங்கத்தை நுழைக்கவும். பிறகு அவள் கால்முட்டிகளை உங்கள் கக்கங்களின் கீழே வைக்கவும். அதன்பிறகு அவள் கைகளின் மேற்புறப் பகுதிகளைப் பிடித்திருந்து, அவளை உங்களுக்காக இழுத்து இன்பம் சேர்க்க வேண்டும்.

மூன்றாவது நிலை: பெண்ணை மல்லாக்க படுக்கவைத்து, அவள் தொடைகளுக்கிடையில் நீங்கள் முட்டிப்போட்டு அமரவும், அப்போது நிலத்தில் கால்விரல்கள் நன்கு ஊன்றியிருக்கட்டும். அவளது முட்டிகளைக் கூடுமானவரையில் உயர்த்துக, அச்சமயம் அவளது கால்கள் உங்கள் இடுப்பைத் தழுவட்டும், அவளின் கைகளும் உங்கள் கழுத்தை தழுவட்டும்.

நான்காவது நிலை: பெண்ணானவள் தரையில் மல்லாக்கக் கிடக்க அவளின் தொடைகள் ஒன்றுசேர, கால்களின் பாதங்களானது விதானத்தைப் பார்க்கட்டும். பின் அவளது தொடைகளோடு ஒன்றிணைந்து குறியை இணைத்து அவள் கால்களைப் பிடித்துக்கொள்ளுங்கள்.

ஐந்தாம் நிலை

ஆறாம் நிலை: ஆண்மகன் மல்லாக்க படுத்துக்கொள்ள பெண்ணானவள் அவனைப் பார்த்து அவனுடைய குறியின்மேல் அமர்ந்து கொள்க. பிறகு அவள் படுக்கையில் தன் கைகளை ஊன்றிக்கொள்ள வயிறானது அவனுடையதை தொட்டுக்கொண்டிருக்கும். பின் அவள் மேலேயும் கீழேயும் ஆடலாம். ஆண் வலிமைகொண்டிருந்தால் அவளுக்கு உதவலாம். இந்த நிலையில் பெண்ணுக்கு ஆணை முத்தமிடவேண்டுமானல் தன் கைகளை சற்று நீட்டிக்கொண்டால் போதும்.

ஏழாவது நிலை: மேல்விதானத்திலிருந்து பெண்ணை கைகளிலும் கால்களிலும் நான்கு கயிறுகளைக் கட்டி தொங்கவிடவும். ஐந்தாவது ஒரு கயிறை அவளின் நடுப்பாக உடலில் கட்டவும், இவ்விடத்தில் அவள் உடல் நோகாதவண்ணம் ஜாக்கிரதையாக இருக்கவும். அவளுக்கு நேராக நீங்கள் நிற்கும்போது உங்களின் குறியானது அவள் அகலுக்கு நேராக நிற்கவேண்டும். அப்போது நீங்கள் குறியை அவளுள் நுழைக்கவேண்டும். பின் அவளது உடலானது முன்னும்பின்னும் அசையும்படி அதாவது, உங்களின் குறி உள்ளேபோவதும் வருவதுமாக இருக்க வேண்டும். இந்த முறையில் உங்களின் வாளானது அதன் உறையில்போவதும் வருவதுமாக இருக்க, நீங்கள் அதன் கருப்பையை தாக்கலாம். இந்த நிலைமை விந்து வெளியே வரும்வரை நீடிக்கும்.

எட்டாவது நிலை: ஆணானவன் பெண்ணின் கைகளையும்

கால்களையும் அவள் கழுத்து அருகே கொணர்ந்திருக்க, அதனால் அவளின் நிதம்பம் குவிமாடமென குவிந்திருக்க, பின் அவளை முன்னமே கட்டப்பட்ட கயிறால் விதானம் நோக்கி உயர்த்த வேண்டும். பின் அவன் தரையில் படுத்துக்கொண்டு கயிற்றின் மறுநுனியைப் பிடித்திருந்து அவளை மேல்நோக்கி இழுப்பதுமாய், தன்னை நோக்கி கவருவதுமாய் இருத்தல் வேண்டும். இது தொடர்ந்து நடக்க அவனுக்கு விந்து பீய்ச்சியடிக்கும்.

ஒன்பதாவது நிலை: பெண்ணானவள் கால்சராயை கண்டிப்பாக அணிந்திருத்தல் வேண்டும். அதை அவள் தன் பாதங்கள்வரை கழற்றிவிட்டிருக்க வேண்டும். பின் அவள் குனிந்திருந்து தன் தலையை பாதங்களை நோக்கி வளைக்கவேண்டும், அவள் கழுத்து சராயை நோக்கி இருக்கவேண்டும். அந்நேரத்தில் ஆண்மகன், அவள் கால்களைப் பிடித்து இழுத்து, அவளை மல்லாக்கப் படுக்கவைக்க வேண்டும். பின், தன் இலிங்கத்தை அவளது குறிக்கு நேராகக் கொணர்ந்து, கால்களுக்கிடையில் நுழைத்து, பிறகு உள்ளே கொண்டுசெல்ல வேண்டும்.

பத்தாம் நிலை: பெண் படுக்கையில் படுத்திருக்க, ஆண் அவள் எதிரில் மண்டியிட்டமர்ந்து, அவள் கால்களை மெல்ல உயர்த்த வேண்டும். இதனால் அவள் தலை தோள்கள் மாத்திரம் படுக்கையில் இருக்கும். அவன் தன் குறியானது அவளது பிருஷ்டத்திலிருக்க, அவளின் கால்கள் அவனுடைய கழுத்தை பின்னிக்கொள்ளும்.

பதினோராவது நிலை: பெண் ஆனவள் படுக்கையில் கிடக்க, நீங்கள் அவள் கால்களுக்கிடையே அமர்ந்திருந்து உங்களின் குறியானது அவளது குறி இதழ்களை தொட்டுக்கொண்டிருக்க வேண்டும், தொட்டுக்கொண்டிருக்க கட்டை மற்றும் சுட்டு விரலையும் பயன்படுத்த வேண்டும். பின் உங்கள் குறியால் அவள் இதழ்களை விடாமல் தேய்த்து, உங்கள் குறியிலிருந்து மன்மத திரவம் அவள் குறி முழுவதையும் ஈரப்படுத்த வேண்டும். இப்போது அவள் போதுமான அளவு புணர்ச்சிக்கு தயாரானது உங்கள் குறியை முழுவதுமாக உள்ளே செலுத்தவும்.

பனிரெண்டாவது நிலை: ஆணானவன் படுக்கையில் மல்லாக்கக் கிடக்க, பெண் ஆனவள் அவன் கால்களைப் பார்த்தவாறு குறியில் அமரவேண்டும், அப்போது அவன் தன் தொடைகளாலும் கால்களாலும் அவள் பக்கவாட்டுகளை அழுத்த வேண்டும், அவள், தன் அசைவிற்கு ஆதரவாக படுக்கையில் கைகளை ஊன்றிக்கொள்ள வேண்டும் மற்றும் தன் தலையைக் குனிந்து அவனுடைய பிருஷ்டத்தைப் பார்க்க

வேண்டும்.

பதிமூன்றாவது நிலை: பெண்ணானவள் தன் பக்கவாட்டில் படுத்திருக்க வேண்டும். ஆணும் அவளின் பின்பக்கம் படுத்தவாறு அவள் கால்களுக்கிடையே தன் குறியை செலுத்த வேண்டும். அப்போது அவன் கையானது அவள் இடுப்பில் படிந்திருக்க வேண்டும். பெண்ணைப் பொறுத்தவரை அவள், அவன் காலைப் பிடித்து உயர்த்த வேண்டும்.

பதினான்காவது நிலை: ஆண் அமர்ந்துகொண்டு தன் இரு பாதங்களும் சந்திக்கும்படி இருக்க, உள்ளங்கால்களை குறிக்கு நேராகக் கொணர்ந்து, தொடைகளை தாழச் செய்ய வேண்டும். பெண்மகள் அவனுடைய கால்பாதங்களின்மீது அமர அவளை ஆண் உறுதியாகப் பிடித்துக்கொள்ள வேண்டும். இந்தநிலையில் பெண்ணின் இரு தொடைகளும் ஆணின் பிருஷ்டத்தை சுற்றி வளைத்திருக்க வேண்டும். அவளின் கைகளானது அவனது கழுத்தை வளைத்திருக்க வேண்டும். பிறகு ஆணாகப்பட்டவன் அவளின் இரு கணுக்கால்களையும் பிடித்தபடி, கால்களை தன் குறிக்காக இழுக்க வேண்டும். அதனால் இருவரது குறிகளும் சந்தித்து ஒன்றிணையும். இவ்வாறு அவன், தன் கால்களை இழுப்பதும் பின்னர் தள்ளுவதுமாக இருந்தால் அவனுடைய குறியும் உள்ளே போவதும்வருவதுமாக முழு இயக்கத்தில் இருக்கும்.

இம்முறையில் பெண்ணாகப்பட்டவள் தன் எடையை குறைத்துக்கொள்ள வேண்டும். அதனால் அவளும் சுலபமாக வருவதும் போவதுமாக இருப்பாள். அவளுடைய ஒத்துழைப்பு இன்றியமையாததாக இருக்கும். ஆணின் குறியானது முழுவதுமாக அவளின் நிதம்பத்தை விட்டு வெளியே வந்துவிட்டால், அவள் இடுப்பை பிடித்துக்கொள்ள வேண்டும்.

பதினைந்தாவது நிலை: ஆண்மகன் அமர்ந்து கால்களை நீட்டிக்கொள்ள வேண்டும். பெண்மகள் அவனுடைய தொடைகளில் அமர்ந்துகொண்டு கால்களால் அவன் பின்பக்கத்தை பற்றிக்கொள்ள வேண்டும். இப்போது அவளுடைய அரசிலையானது அவனுடைய இலிங்கத்திற்கு எதிராக இருக்கும். பிறகு அவள் தன்னுடையதில் அவனுடையதை செலுத்தலாம். பின் அவள் அவனுடைய கழுத்தை இறுக்க கட்டிக்கொள்ள, அவனும் அவளது இடுப்பையும் பக்கவாட்டினையும் தழுவிக்கொண்டு அவள் எழுந்து தன் குறியின்மீது அமர்வதற்கு உதவவேண்டும். அவளும் அவன் நடவடிக்கையில் உதவ வேண்டும்.

பதினாறாம் நிலை: பெண்மகள் குப்புறப்படுத்துக்கொண்டு, ஒரு மெத்தைமீது தன் பிருஷ்டத்தை வைத்துக்கொண்டு, உயர்த்த வேண்டும். ஆண்மகன் அவளின் பின்புறத்தில் அணுகி தன் குறியை செருக

வேண்டும். அப்போது பெண்ணானவள் அவனுடைய முழங்கைகளைப் பிடித்து தன் கைகளை பின்னிக்கொள்ள வேண்டும். எல்லா நிலைகளிலும் இதுவே சுலபமான வழியாகும்.

பதினேழாவது நிலை: ஆணும் பெண்ணும் ஒருவரைப் பார்த்து ஒருவர் நிற்கவேண்டும். அவள் தொடைகளை அகலித்துக்கொள்ள வேண்டும். பிறகு ஆணானவன், தன் இலிங்கத்தை பெண்ணின் நிதம்பத்திற்கு கொண்டுவர, பெண்ணும் அதேபோல் செய்யவேண்டும். இந்த நிலையில் ஆண், தன் ஒரு காலை முன்னோக்கி நகர்த்திவைத்துக்கொள்ள வேண்டும். ஒருவருக்கொருவர் மற்றவர் இடுப்பை பிடித்துக்கொள்ள, ஆண் தன் இலிங்கத்தை அவளுள் செலுத்த வேண்டும். இவ்வாறு இருவரும் பின்னிப் பிணைந்துகொள்ள வேண்டும்.

பதினெட்டாம் நிலை: பெண் முட்டிபோட்டு அமர்ந்து முழங்கைகளை தரையில் ஊன்றிக்கொள்ள வேண்டும். ஆண் அவளை பின்பக்கமாக அணுகி, முட்டிபோட்டு, தன் குறியை அவளுள் ஊடுருவச் செய்யவேண்டும். அவளும் அதற்குத்தக அழுத்தம்தர வேண்டும். அவன், அவளின் தோள்களின்மீது கைகளை வைத்துக்கொள்ள வேண்டும்.

பத்தொன்பாவது நிலை: பெண் நின்றுகொண்டு தன் கைகளால் கால்களைப் பிடித்து தன் மறைவிடத்தை வெளிப்படையாக காட்டவேண்டும். அவள் பின்புறம் நிற்கும் ஆண் அவளை ஆய்ந்து, பிருஷ்டத்திற்கு கீழிருக்கும் தொடைகளை பிடித்துக்கொள்ள வேண்டும். இந்த நிலையில், ஒரு ஆண்மகன் தன் குறியை அவளுள் செலுத்தி பின் வெளியே எடுத்தாலும், பெண்ணாகப்பட்டவள் தன் நிலையை மாற்றாமல் இருந்தால், அப்போது அவள் அரசிலையிலிருந்து கன்றுக்குட்டி கத்துவதுபோல் ஒரு சப்தம் உண்டாகும். ஆனால் புணர்ச்சிக்குத் தகும் இந்த நிலை மிகவும் கடினம். இந்தச் சூழ்நிலையை அறிந்த பெண்கள் இதற்கு உடன்படமாட்டார்கள்.

இருபதாவது நிலை: பெண்மகள் சுவரின்மீது நிலைப்படுத்திக்கொண்டு, ஆணுடைய இடுப்பை தன் இரு கால்களாலும் பின்னிக்கொள்ள வேண்டும். அவள் நின்றவாறு இருக்கும் இந்த நிலையில், அவனுடைய கழுத்தை கட்டிப்பிடிக்க, ஆண் தனது கோலை அவளுடைய குறியில் செலுத்துவான்.

இருபத்தோராவது நிலை: பெண்ணாகப்பட்டவள் தன் வலதுபுறப் பக்கவாட்டில் படுத்திருக்க, அவளுக்கு எதிரே நீங்கள் இடதுபுறமாகப் படுக்கிறீர்கள். உங்கள் இடதுகால் கீழிருக்க, வலதுகாலை உயர்த்தி அவளின் பிருஷ்டத்தின்மீது போடுகிறீர்கள். அவளும் தனது காலைத் தூக்கி உங்கள்மீது போடுகிறாள். அதன்மூலம் அவள் நிலைகொள்ள

ஏதுவாக உள்ளது. இப்போது உங்கள் குறியை அவளுள் செலுத்தியபிறகு, விருப்பப்படி நீங்கள் அசையலாம். அதேபோல் பெண்ணும் அசையலாம்.

இருபத்தி இரண்டாவது நிலை: ஆண்மகன் பெண் அறியாதநிலையில் அவள் பின்பக்கம் வரவேண்டும். பின், தன் கரங்களை அவளின் இரு கக்கங்களில் கொண்டுபோக வேண்டும். பின், அவைகளை பற்றி கழுத்துக்குக்கீழே கொணர்ந்து அவளை ஸ்தம்பிக்கச் செய்யவேண்டும். அவள் விரல்களோடு தன் விரல்களை பின்னிக்கொண்டு அவள் குனிந்து இதன் கழுத்தருகே கொணரவேண்டும். அவள் கால்சட்டை போடவில்லையெனில், ஆண் தன் கால்முட்டியால் அவளது அங்கியை நடு உடல் வரை தூக்கவேண்டும். தன் ஒரு காலால் அவளது காலை பின்னிக்கொள்ள வேண்டும். அதனால் தன் குழிதளத்தை அவன் ஆயுதத்திடம் ஒப்படையாமல் அவள் எங்கும் தப்பிக்க முடியாது. அதன் அறிமுகப்படுத்தலில் இருந்தும் நழுவ முடியாது. அவள் போட்டிருக்கும் கால்சராய் கனமாக இருந்தால், ஆண் அவளை கழற்றும்படி கேட்டுக்கொள்ளலாம்.

ஒரு பெண்ணை அனுபவிக்க இந்த நிலை ஆணுக்கு ஏற்றதாகும். தவிர, அவன் அவளை வலுக்கட்டாயமாகப் புணர வேண்டும்.

இருபத்தி மூன்றாவது நிலை: பெண்மகள் தன் கைகளாலும் கால்முட்டிகளாலும் ஆட்டைப்போல நிலைகொண்டிருக்க வேண்டும். ஆண் மகன் அவளை பின்புறத்தில் அணுகி, அவள் தொடைகளை தன்னிரு கைகளால் தூக்கி அவள் நிதம்பம் வெளியில் தெரிகிறபடி தூக்கவேண்டும். பிறகு தன் இலிங்கத்தை அவளுக்குள் செருகவேண்டும். இந்த நிலையில் அவள் அவனுடைய கரங்களில் தன் தலையை வைக்க வேண்டும்.

இருபத்தி நான்காவது நிலை: ஆண் மகன் மல்லாக்க படுத்திருக்க வேண்டும். பெண்ணானவள் அவன் கால்களுக்கிடையே வந்து தன் கால்களின் நுனிகளானது தரையில் அழுந்திப் பதியவைக்க வேண்டும். அவள் அவனது தொடைகளை உயர்த்த, இலிங்கம் அவளது அரசிலையை நோக்கியிருக்கும். இந்நிலையில் அவள், அவன்மீது சவாரி செய்வாள். அப்போது அவள் தனது கைகளை அவன் பக்கவாட்டில் மெத்தையில் ஊன்றியிருப்பாள். இந்த நிலையில் பெண்ணானவள் ஆணுடைய காரியத்தை நிறைவேற்றுகிறாள்.

இருபத்தைந்தாவது நிலை: ஆணானவன் மெத்தையில் படுத்திருக்க, தோள்களுக்கு அடியில் தலையணை ஒன்று இருக்கட்டும். ஆனால் பிருஷ்டம் மெத்தையை தொட்டுக்கொண்டிருக்க வேண்டும். பின், தன்

தொடைகளை முன்புறம் வலிக்க, முட்டிகளானது அவன் முகத்திற்கருகே வரவேண்டும். பெண்மகள் அவன் அருகில் அமர்ந்து, அவன் ஆயுதத்தில் கழுவேற வேண்டும். ஏறி அவன்மீது படுக்கக்கூடாது. ஆனால் குதிரையின்மேல் அமருவதைப் போன்று அமரவேண்டும். சேணமானது ஆணுடைய முட்டிகளும் வயிறும் ஆகும். இந்தநிலையில் அவள், தனது முட்டிகளைப் பயன்படுத்தி மேலேயும் கீழேயும் வரலாம். ஆண்மகன் தனது தொடைகளை அவளுக்கேற்றாற்போல் அசைக்கவேண்டும், அவள் தனது இடதுகையை அவனது வலது தோளில் வைத்திருக்க வேண்டும்.

இருபத்தியாறாவது நிலை: மங்கையானவள், தனது கீழ்முதுகெலும்பால் தரையில் நிறுத்தவேண்டும். அப்போது அவளது பிருஷ்டபாகம் மட்டுமே தரையில் படவேண்டும். ஆண்மகனும் அதேநிலையை கடைப்பிடிக்க, அவளது அல்குலானது அவனது இலிங்கத்தைப் பார்த்திருக்க, அவள் தனது வலது தொடையை அவனது இடது தொடையில் வைக்கவேண்டும். அதேசமயம், அவன் வலது தொடையை அவளது இடது தொடையில் வைத்திருக்க வேண்டும்.

பெண்மகள் அவனது கரங்களைப் பற்றியவாறு, அவனது இலிங்கத்தை தனது குறியில் நுழைக்க வேண்டும். இருவரும் சற்றுப் பின்னோக்கி ஒருவர்பின் ஒருவராகச் சாய்ந்திருக்க, ஒருவர் கைகளை மற்றவர் பிடித்திருக்க, முன்பக்கமாக சாய்ந்துசாய்ந்து ஆட, அவர்களின் ஆட்டம் தரையில் ஊன்றியிருக்கும் குதிவிரல்களால் செய்யப்படும்.

இருபத்தேழாவது நிலை: பெண் மல்லாந்து படுத்திருக்க, ஆண்மகன் அவளின்மேல் படுத்து தலையணையை தன் கையில் பிடித்திருக்க வேண்டும். பிறகு தன் குறியை அவளுள் நுழைத்தபின், பெண்மகள் தன் பிருஷ்டபாகத்தை மெத்தையிலிருந்து முடிந்தமட்டில் உயர்த்த வேண்டும். அப்போது ஆணுடையது அவளுள் நன்கு முழுவதுமாக நுழைந்துவிடும். பின் பெண்ணாகப்பட்டவள் தன் பிருஷ்டத்தை சடாரென கீழிறிக்கி அதிர்ச்சியைக் கொடுக்கவேண்டும். அவர்கள் இருவரும் கட்டியணைக்கவில்லை என்றாலும், ஆண் அவளுடன் பசையாக ஒட்டியிருக்க வேண்டும். இதேநிலையை அவர்கள் தொடர, அதேசமயம் ஆண் கனமற்று இருக்க, மெத்தை மென்மையாக இருக்கவேண்டும்.

இருபத்தெட்டாவது நிலை: மங்கையானவள் தலையணையை தன் பிருஷ்டபாகத்திற்கு அடியில் வைத்தவாறு படுத்திருக்க, அவள் கால்முட்டிகள் முடிந்தமட்டில் மார்புவரை உயர்ந்து மடிந்திருக்க, இதனால் அவளது அல்குலானது தாக்கப்படும் நிலைக்குத் தயாராக

அப்பட்டமாகத் தெரியும். பிறகு அவள் அவனுடைய குறியை தன்னுள் நுழைக்கலாம்.

ஆண்மகன் தன் இயக்கத்தை வழக்கப்படி சற்றுநேரம் நடத்தலாம். பின், தன் குறியை நிதம்பத்திலிருந்து எடுத்துவிட வேண்டும். பின், குறியை பெண்ணின் தொடைகளில் சில விநாடிகளுக்கு தேய்த்தெடுக்க வேண்டும். அதாவது, கொல்லன் ஒருவன் அடுப்பிலிருக்கும் கொதிக்கிற இரும்பை எடுத்து குளிர்ந்த நீரில் மூழ்கடிப்பதைப் போன்று. இந்தநிலை சீமைமாதுளையின் நிலை என்று அறிவாயாக.

இருபத்தொன்பதாவது நிலை: பெண்மகள் மல்லாந்து படுத்திருக்க, ஆண் அவளின் கால்களில் அமர்ந்து, அவளின் பிருஷ்டத்திற்கு அடியில் தனது கால்களை நுழைக்க அவன், அவளுடைய தொடைகளைத் தூக்கி அகலிக்க வேண்டும். பிறகு அவளுடைய கால்களை தன் கைகளின்மீதோ, தோள்களிலோ தூக்கிக்கொள்ள வேண்டும். பின், அவளுடைய இடையையோ அல்லது தோள்களையோ பிடித்துக்கொள்ள வேண்டும்.

மேலே சொல்லப்பட்ட நிலைகள் யாவும் அதிகளவு நுணுக்கங்கள் வாய்ந்திருக்க, அவற்றையெல்லாம் இந்த நூலில் சொல்லிக்கொண்டிருக்க முடியாது. ஆனால் தேர்ந்தெடுப்பதற்கு வசதியாக பலநிலைகள் இருக்க, ஒரு மனிதன் ஒரு நிலையை செய்வதற்கு கஷ்டப்பட்டால் அவன் சுலபமாகச் செய்ய வேறுபல நிலைகளை எடுத்துக்கொள்ளலாம்.

உணர்ந்துகொள்ளமுடியாத நிலைகள் எதையேனும் நான் இங்கே குறிப்பிடவில்லை. செய்வதற்கு கடினமாக ஏதேனும் நிலையிருப்பதாக யாரேனும் நினைத்தால் அவர்கள் புதிதான நிலையை தெரிவு செய்துகொள்ளலாம்.

புணர்ச்சியைப் பொறுத்தமட்டில், கடினமான நிலைகளை இந்தியர்கள் அனாவசியமாக செய்திருக்கிறார்கள் என்று சொல்லமுடியாது. இருப்பினும் அந்த நிலைகளின் மூலங்களை அவர்கள் முயற்சித்துள்ளார்கள் என்பதை கீழ்க்காணும் வார்த்தைகளிலிருந்து சொல்கிறேன்.

“பெண்மகளானவள் மல்லாந்து படுத்திருக்க, ஆணாகப்பட்டவன் அவள் முகத்திற்கு தன் பின்புறத்தைக் காட்டியபடி அவள் மார்பினில் அமரவேண்டும். பிறகு தன் கால்நகங்கள் தரையைத் தேய்க்க, முட்டிகளை முன்புறம் கொணரவேண்டும். பின் அவளை வில்லாக வளைத்து, இடுப்பை உயர்த்தி, அவளது அரசிலை தனது குறியை சந்திக்கும்படி வைத்து, பின் அதில் நுழைத்து, தன் நோக்கத்தை தீர்க்க

வேண்டும்.

இந்த நிலை நீங்கள் நினைத்தாற்போல் களைப்படையச் செய்வதும், கடைப்பிடிக்க கடினமாக இருப்பதும் ஆகும். இவை வார்த்தைகளில் மட்டுமே சொல்லப்பட்ட ஒரு நிலையாகும் என நான் நம்புகிறேன். மேலே சொல்லப்பட்ட வேறுபல நிலைகளை ஆணும் பெண்ணும் மனமொத்து உடல் நலத்தில் ஆரோக்கியமாக இருக்கவேண்டும். உதாரணத்திற்கு, இருவரோ அல்லது ஒருவரோ கூன் போட்டு இருக்கக்கூடாது. மிகுந்த உயரமாகவும் அல்லது மிகுந்த குள்ளமாகவும் குண்டாகவும் இருத்தல் கூடாது. திரும்பவும் சொல்கிறேன்: இருவரும் உடல்நலத்தில் ஆரோக்கியமாக இருக்க வேண்டும்.

முதலில் பருமனான பெண்ணுக்கும் ஒல்லியான ஆணுக்கும் இடையில் நிகழும் புணர்ச்சிகளையும், அவர்கள் கொள்ளவேண்டிய பல்வித நிலைகளையும் கூறி, பெண்ணாகப்பட்டவள் கீழே இருப்பாள் மற்றும் நாலாபக்கத்திலும் அவளை புரட்டிப்போடத் தெரியவேண்டும்.

அந்த ஆணுக்கு அவளை பக்கவாட்டில் புணரவேண்டுமானால், அவளது மேல்பக்கத்து தொடையை எடுத்து, தன் பிருஷ்டத்திற்கு மேலாக உயர்த்தி, தன் இடுப்பின்மேல் போட்டுக்கொள்ள வேண்டும். அவனது தலைக்கு அவளது கையை பயன்படுத்திக்கொள்ள வேண்டும். அதேநேரம், தடிமனான தலையணை ஒன்றை அவளின் இடுப்பின்கீழே வைக்கவேண்டும். இதனால் தன் குறியை அவளது குறிக்குச் சமமாக வைக்கலாம்.

ஆனால் ஆணுக்கு பெரியதொரு வயிறு இருக்குமாயின், அது வெளிப்படையாக வெளியே துருத்திக்கொண்டிருக்குமாயின், அவளின் தொடைகளுக்கு அருகே படுத்து, அவளுடைய தொடையை வயிறுக்கு அருகே கொண்டுசெல்ல வேண்டும். பிறகு ஆண் அவளின் தொடைகளுக்கு நடுவே இருந்துகொண்டு, அவளின் இடுப்பைப் பிடித்தவாறு, தன்னருகில் இழுத்து ஆனால் தன்னுடல் தடிமனாக இருக்கும் காரணத்தால் அவ்வாறு செய்யவியலாமல் போய்விட்டால், அவன் தன் இரு கரங்களாலும் அவளது பிருஷ்டபாகத்தை அணைத்துக்கொள்ள வேண்டும். ஆனால் அவளது பெருவயிறு காரணமாக, அவளால் தன் தொடைகளை அசைத்து செயல்பட முடியாமல் போகலாம். இருப்பினும் அவன் தனது கரங்களால் ஆதரவு கொடுத்து, தனது தொடைகளால் அவளுக்கு சிரமம் ஏற்படாதவண்ணம் காரியமாற்ற வேண்டும். அதாவது ஒரு கவிஞர் கூறுகிறபடி,

இதேபோல் ஆண் பெண்ணின் பக்கத்திலும் படுத்துக்கொள்ளலாம். முழங்காலானது முன்பக்கம் இருக்க, பின் அவன் அந்தக் காலின்

தொடையின்மீது அமர, அவனுடைய குறியானது அவளுடைய நிதம்பத்தைப் பார்த்திருக்க, அவளின் மேற்புற காலை தூக்கவிட்டு அதேநேரம், அவள் அதை முட்டியில் மடக்கவேண்டும். பின் அவளுடைய தொடைகளையும் கால்களையும் தன் கைகளில் பிடித்தவாறு, தன் குறியை நுழைக்க வேண்டும். அச்சமயம் அவனது உடலானது அவள் கால்களுக்கு இடையில் கிடந்திருக்க முட்டிகள் மடங்கி, பாதங்களின் முனைகள் பூமியைத் தொட, அதனால் பிருஷ்டத்தை துருத்திக்கொள்ள ஏதுவாக, அவளுடைய தொடைகள் பிணைவதை தடுப்பதிலிருந்து காத்துக்கொள்ள முடியும். இந்தநிலையில், இருவரும் செயலில் இறங்கி செயல்பட முடியும்.

குழந்தையை வயிற்றில் தாங்கி அவள் கர்ப்பிணியாக இருந்து வயிறு பெரிதாக இருக்கும்பட்சத்தில், ஆண்மகன் பெண்ணவளை ஒரு பக்கமாக படுக்கவைக்க வேண்டும். அவள் தொடைகளை ஒன்றன்மேல் ஒன்றாக வைத்து, வயிறு வரை மடக்கி அதன்மேல் படாதவாறு வைக்கவேண்டும். பின் அவளின் பக்கம் படுத்திருந்தவாறே தன் குறியைச் செருகலாம். இந்த முறையில் ஆயுதத்தை முழுமையாகச் செலுத்தலாம். குறிப்பாக, பெண்ணின் காலுக்கடியிலுள்ள தன் பாதத்தை, அவள் தொடைக்கு நிகராக உயர்த்தவேண்டும். இதேநிலையை கர்ப்பமற்ற பெண்ணிடமும் கடைப்பிடிக்கலாம். ஆனால் இந்தநிலையானது குறிப்பாக, கர்ப்பமுடைய பெண்ணிடம் கடைப்பிடிக்க வேண்டியதாகும். மேலே சொல்லப்பட்ட இந்த நிலை கர்ப்பமடைந்திருக்கும் பெண்ணானவள் எவ்வித அபாயத்திற்கும் உட்படாமல் தன்னின்பத்தைப் பெற உதவுவதாகும்.

ஒரு ஆணானவன் அசிங்கமான உடலை அதாவது, தொப்பையுடன் இருந்தால், அதேநேரம் மங்கையானவள் ஒல்லியாக இருந்தால், அவ்விடத்தில் பெண்ணையே மேலேறி செயல்படவைப்பது சாலச்சிறந்தது. இதன் முடிவாக ஆண் மல்லாந்து படுத்திருந்து தன் தொடைகளை ஒன்றுசேர்த்திருக்க, பெண்மகள் அவன்மேல் ஏறி சவாரி செய்யவேண்டும். அப்போது அவள் தன் கைகளை மெத்தையில் ஊன்றியிருக்க, அவன் அவளுடைய கைகளைப் பிடித்திருக்க வேண்டும். அவளுக்கு அச்சமயத்தில் ஆடவேண்டிய வித்தை தெரிந்திருந்தால், பிறகு அவனது குறியில் ஏறியிறங்கலாம். ஒருவேளை, அவளுக்கு இந்த விஷயத்தில் தெளிவு பிறக்கவில்லையெனில் அவன் தன் ஒரு தொடையை அவளின் பிருஷ்டத்தின் அடியில் வைத்து மேலேறி கீழிறங்க உதவலாம். அதேசமயம், ஆண் இந்த நிலையை கடைப்பிடிப்பேயானால், அதனால் அவனுக்கு தீங்கு வர நேரலாம். எப்படியெனில், பெண்ணின் சுக்கிலமானது அவனுடைய குறியில்

இறங்கி அவனுடைய விந்தை வரவிடாமல் தடுத்து, மீண்டும் அதை உள்ளே அனுப்பிவிடும்.

ஆணாகப்பட்டவன் பெண்மகளை மல்லாக்க படுக்கவைத்து, அவளருகில் அமர்ந்து, அவள் கால்களுக்கிடையில் முட்டிபோட, அவள் தன் கால்களை திறம்பட விரிப்பாள். இவ்வாறு அவனுடைய பிருஷ்டபாகமானது அவளது கால்களுக்கிடையே இருக்க, அவனது பாதங்கள் அதை தொட்டுக்கொண்டிருக்கும். இப்படிச் செய்தாலும் அவன் நிராசையை உணர்வான். காரணம், அவனது வயிறானது அவளின்மேல் அழுந்திக்கிடக்க, இருவருக்கும் ஒருவித அசௌகரியத்தன்மையே கிடைக்கும். தவிர, அவனால் தன் குறியை அவளுக்குள் முழுவதுமாகக் கொண்டுபோக முடியாது.

மேலே சொல்லப்பட்டவாறு இந்த நிலையானது விவரித்திருக்கும் அளவில், பெண்மகள் கர்ப்பமடைந்திருக்கும் நிலையில், அதேபோன்று கதி உண்டாகும்.

ஆண் - பெண் இருவரும் குண்டாக இருக்கும்பட்சத்தில், புணர்ச்சியின்போது இருவரும் கட்டியணைக்கவேண்டி இருப்பின், அவர்களால் சிக்கலின்றி அதைச் செய்யமுடியாது. குறிப்பாக, இருவருக்கும் தொப்பை இருக்கும்பட்சத்தில் இதுபோன்றதொரு சூழ்நிலையில் பெண்மகள் ஒரு விலங்கைப்போல முட்டிபோட்டு அமர்ந்து, கைகளால் தரையில் ஊன்ற, அவளது பின்புறம் துருத்திநிற்கும். ஆண்மகன் அவளது கால்களைப் பிரித்து ஆனால் பாதங்கள் ஒன்றுசேர விட்டுவிட வேண்டும். பின் அவளது பின்புறத்தில் மண்டியிட்டமர்ந்து, தனது வயிற்றை கைகளால் பிடித்து தனது குறியை அவளது அல்குலில் செலுத்தி தாக்கலாம். இந்நிகழ்வின்போது தனது வயிறை அவளது பிருஷ்டபாகத்தின் மேலே வைக்கலாம். ஒருவேளை, அவனது வயிறை அவளின் பிருஷ்டபாகத்திற்குமேல் வைக்கமுடியாதபடி, உயரம் குறைவாக இருந்தால், அவளின் முட்டிகளுக்குக் கீழே தலையணை ஒன்றை வைக்கலாம்.

குண்டான ஆணும் பெண்ணும் ஒன்றுசேர இந்த நிலைகளைத் தவிர வேறொன்றும் அறியேன்.

மேலேகண்ட சூழ்நிலையின்போது, ஒரு குண்டான ஆண்மகன், பெண்மகளின் பின்புறம் இருக்க, அப்போது அவனது வயிறானது அவளது தொடைகளை முட்டிநின்றால், அச்சமயத்தில் அவனது குறியை ஒழுங்காகப் பயன்படுத்த முடியாது. அதேநேரம், அவளது நிதம்பத்தையும் பார்க்க முடியாது அல்லது சிறிதளவே பார்க்க இயலும். அந்நிலையில், அவனால் செயல்படவோ அல்லது குறியை

நுழைக்கவோ முடியாது என்று சொல்லப்படுகிறது.

மற்றொருவகையில் ஆண்மகன், பெண்மகளை குப்புறப் படுக்கவைத்து, அவளின் பின்புறமிருந்து கால்களை மடித்துக்கொண்டு, அவளின் பிருஷ்டபாகத்திற்கு மேலாக தனது வயிறை அழுந்தவைத்துக்கொள்ள வேண்டும். அப்போது அவள் தனது தொடைகளையும் கால்களையும், அரசிலையை வெளிப்படையாகக் காட்டி அவனது குறியை நுழைக்கும்பொருட்டு, நன்கு மடித்துவைத்திருக்க வேண்டும். அவளால் கால்களை போதுமான அளவுக்கு மடிக்க இயலாவிட்டால் ஆண்மகனால் அவளது அரசிலையை பார்க்கவோ அல்லது ஆராயவோ முடியாது.

எனினும் இருவரது வயிறுகளும் சற்றே உள்ளடங்கியிருப்பின், அவர்கள் எல்லா நிலைகளையும் கைக்கொள்ள இயலும். அதேநேரம், ஒரேநிலையிலே அவர்கள் நெடுநேரம் இருக்கக்கூடாது. ஏனெனில் அவர்கள் மூச்சையிழந்து சோர்வுறக்கூடும். ஆகிருதியான ஆணும் சின்னஞ்சிறிய உடல் படைத்த பெண்ணும், தத்தமது உறுப்புகளின் வாயில்களை சந்திக்கும்படி செய்ய வேண்டியிருந்தால் சிறு யுக்தியின்வாயிலாக சரிசெய்யலாம். முதலில் பெண்ணானவள் மல்லாக்க படுத்திருக்க வேண்டும். ஆண் மகன் அவளுக்குப் பக்கத்தில் படுத்திருந்து, தனது ஒரு கரத்தை அவளின் கழுத்துக்கடியில் செலுத்த வேண்டும். மற்றொரு கையால் அவளது தொடையை உயர்த்தி, தனது குறியை அவள் அல்குலில் செலுத்த வேண்டும். அதேசமயம் பெண்ணானவள் அமைதியாக இருக்க வேண்டும். இந்த நிலையில், அவன் அவளது கழுத்தையும் தொடையையும் தனது கரங்களால் பிடித்திருக்க வேண்டும். அப்போது அவன் அவளுள் நுழைய, பெண்ணானவள் அவனது கழுத்தை கட்டிப்பிடித்து அவனது இதழ்களில் முத்தமிட அணுகலாம்.

ஒரு ஆண்மகன் விரும்பும்போது பெண்மகள் அவனுக்குப் பக்கத்தில் படுத்திருக்க, அவன் அவள் கால்களுக்கிடையில் இருந்து, அவள் தொடைகள் தன் கால்களில் ஒன்றன்மீது ஒன்றாக, அவளது குறி பின்புறம் நன்கு தெரிய அதில் தன்னுடையதை நுழைக்க வேண்டும். பின், தன் தொடைகளை அவளது பிருஷ்டத்திற்கு எதிராக அழுத்த வேண்டும். அப்போது அவளது தொடைகளை அவன் அழுந்தப் பிடித்திருக்க வேண்டும். மற்றொரு கையால் அவளது கழுத்தை அணைத்திருக்க வேண்டும். மேற்க்கொண்டு அந்த ஆணானவன் விரும்பினால், தொடைகளை அந்தப் பெண்ணுக்கெதிராக போட்டு தனக்குத்தானே அழுத்த வேண்டும். இது அவனுக்கு அசைவதற்கு

சுலபமாக இருக்கும்.

குள்ளமாக இருக்கும் ஆணும் உயரமாக இருக்கும் பெண்ணும் புணர்ச்சியில் இருக்கும்போது ஒன்றுசேர்ந்து முத்தமிட இயலாது. ஒருவேளை, அவர்கள் இந்த நிலையை எடுத்திருந்தால் முத்தமிடமுடியும். அப்போதும் அவர்கள் சோர்வடைவார்கள்.

முதலாம் நிலை: பெண்மகள் மல்லாக்க படுத்திருக்க, தடிமனான தலையணையை தன் பிருஷ்டபாகத்திற்கு அடியில் வைத்திருக்க, அதேபோல் தன் தலைக்கு அடியிலும் ஒன்றை வைத்திருக்கிறாள். பிறகு அவள் தன் தொடைகளை முடிந்தமட்டில் தன் மார்புவரை இழுத்துக்கொள்கிறாள். ஆண் அவள்மேல் படுத்துக்கொண்டு, குறியை நுழைத்து அவளின் தோள்களை தன்பக்கமாக இழுத்துக்கொள்கிறான். பெண்ணும் அவளுடைய கைகளாலும் கால்களாலும் அவனை பின்னிப் பிணைந்துகொள்கிறாள். அதேசமயம் அவனும் அவளது தோள்களை அணைத்துக்கொள்கிறான். விரும்பினால் அவள் கழுத்தை அணைக்கிறான்.

இரண்டாவது நிலை: ஆணும் பெண்ணும் அருகருகே படுத்திருந்து, ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்திருக்க வேண்டும். பெண் தன் அடிப்புறத்தொடையை அவனுடைய விலாப்புறத்தின் அடியிலும் மற்றொரு காலை அவன் மேற்புறத்திலும் போட்டுக்கொள்ள வேண்டும். பின் தன் வயிற்றை உள்ளுக்கு இழுத்துக்கொள்ள ஆண், தன் குறியால் அவளை ஊடுருவவேண்டும். இருவரும் மற்றவர் கழுத்தைப் பிடித்துக்கொள்ள, பெண்ணானவள் தன்னுடைய கால்களால் அவனை தன் பக்கமாக இழுத்து அணைத்துக்கொள்ள வேண்டும்.

மூன்றாவது நிலை: ஆண்மகன் மல்லாந்து படுத்திருந்து தன் கால்களை நீட்டிக்கொள்ள, பெண்ணாகப்பட்டவள் அவனுடைய குறியின்மீது அமர்ந்துகொள்ள வேண்டும். பிறகு அவன்மீது அப்படியே படுத்துக்கொண்டு தன் கால்முட்டிகளை வயிறுக்கு அருகே கொண்டுவர வேண்டும். பின் தன் கைகளால் அவன் தோள்களைப் பிடித்தவாறு உதடுகளை அவனுக்கு எதிராக அழுத்த வேண்டும்.

இந்த நிலைகள் இருவருக்கும் அதிகமாகவோ அல்லது குறைவாகவோ களைப்பைத் தரக்கூடியது. எனினும் அவர்கள் விரும்பக்கூடிய நிலையை தேர்ந்தெடுக்கலாம். இந்த நிலைகளில் அவர்கள் முத்தமிட ஏதுவாகும்.

இவற்றைத் தொடர்ந்து, சின்னஞ்சிறிய உடல் படைத்த, கூனர்களாக படைக்கப்பட்ட மனிதர்கள் கொள்ளவேண்டிய சில வகைகளைப் பார்ப்போம்.

முதலில், ஒரு கூனனான மனிதனைப் பார்ப்போம். அவனுடைய முதுகெலும்பும் கழுத்தும் நேராக உள்ளது. அவன் சிறு உடல் படைத்த பெண்ணை பின்னாலிருந்து அல்ல; மாறாக முன்பக்கம் சேரவேண்டும். அவளின் முன்பக்கத்திலிருந்து தனது குறியை அறிமுகப்படுத்த வேண்டும். ஆனால் பெண்ணின் தோள்கள், கைகள், கால்கள் நேராக இல்லாமல் வளைந்திருந்தால், ஆண்மகன் இன்னும் சிறப்பாகச் செய்யலாம். ஒருவேளை, பெண்மகளுக்கு கூனிருந்தால் இதே நிலை பொருத்தமாக இருக்கும்.

இருவரும் கூன் அடைந்திருக்கும்பட்சத்தில் அவர்களுக்கு எந்த நிலை பொருத்தமாக உள்ளதோ அந்த நிலையை தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ஆனால் அவர்களால் கட்டியணைக்க இயலாது. இருவரும் பக்கவாட்டில் படுத்திருந்தால் அவர்களின் குறிகளுக்கு இடையே வெற்றிடம் உண்டாகும். இருவரில் ஒருவர் மல்லாக்க படுத்திருந்தால் அவர் தன் தலைக்கு தோள்களுக்கு அடியில் தலையணையை வைக்க வெற்றிடம் சமன்படுத்தப்பட்டுவிடும்.

ஆண்மகனின் கழுத்தானது கோணலாக இருப்பின், அவனுடைய முகவாய் மார்பை அழுத்திக்கொண்டிருப்பின், மற்ற அங்கங்கள் நேராக இருப்பின், அவன் எவ்வித நிலையையும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். தன்னை வருடவும் தழுவவும் தூண்டலாம். அவளிடமிருந்து முத்தங்களை எதிர்பார்க்கலாம். பெண்மகள் மல்லாந்து படுத்திருந்தால், ஆண்மகன் அவளை ஆட்டுக்கிடாவைப் போன்று முட்டிமோதலாம். பெண்மகளின் கழுத்தும் ஆணின் கழுத்தைப்போல் வடிவமற்று இருந்தால், பிறகு இருவரும் கொம்புகள்கொண்ட மிருகங்கள்போல மோதிக்கொள்ள நேரிடும். இப்போது இருவருக்கும் பொருந்தக்கூடிய நிலை எதுவாயின், பெண்மகள் குனிந்திருக்க, ஆண் அவளை பின்னிருந்து தாக்கவேண்டும். ஆணின் முதுகுப்புறத்திலுள்ள கூன், ஜாடியின் அரைப்பகுதியை ஒத்தது. அதுவொன்றும் அவ்வளவு கேவலமல்ல. ஒரு கவிஞர் சொல்கிறபடி,

உருவம் சிறியதாக இருக்கும் ஆண்மகன் எடுக்கும் நிலையையே இவர்கள் எடுக்கலாம். ஆனால் மல்லாக்க மட்டும் படுக்கக்கூடாது.

சின்னஞ்சிறிய பெண்மகள் மல்லாந்து படுத்திருக்க, கூனலிட்ட ஆண்மகன் அவளின் வயிற்றின்மேல் படுத்திருக்க, அப்போது அவன் பூச்சாடிக்கு மேலிட்ட உறையாகத் திகழ்வான். அதற்குமாறாக, பெண்மகளின் உருவம் பெரிதாக இருந்தால், அவனுடைய தோற்றம் தச்சனின் இழைப்புளியாக இருக்கும். இந்த நிலையைப்பற்றி நான் ஒரு செய்யுளை எழுதியுள்ளேன்.

மற்றும் ஒரு செய்யுளையும் எழுதியுள்ளேன்.

ஆணைப்போன்று பெண்ணுக்கும் கூன் இருந்தால், அவர்கள் கலவியின் எந்தவொரு நிலையையும் தெரிவுசெய்யலாம். அப்போது அவர்களில் ஒருவர், தனது கூனுக்குத் தக தலையணை ஒன்றை வைத்துக்கொள்ள வேண்டும். அதன் காரணமாக அது கூட்டில் அடைந்து வலியற்று இருக்கும். இந்த முறையில் அவர்கள் இருவரும் இறுகத் தழுவிக்கொள்ள இயலும்.

ஒரு ஆணுக்கு முதுகிலும் மார்பிலும் கூன் இருந்தால் அவன், பெண்மகளை அணைக்கவோ அல்லது படரவோ கூடாது. முடியாது. மற்றபடி, அவன் விரும்பும் நிலை எதுவாயினும் தெரிவுசெய்துகொள்ளலாம். இருப்பினும் பொதுவாக சொல்லவேண்டுமாயின், இதுபோன்ற குறைபாடு இருக்கும் ஆணுக்கும் பெண்ணுக்கும் கலவி என்பது மிகுந்த கஷ்டம் தரக்கூடியது. நான் இதுபற்றி எழுதியதாவது:

ஆணுக்கும் பெண்ணுக்கும் இரட்டைக் கூனிருந்தால் அவர்கள் புணர்ச்சியில் தேர்ந்தெடுக்கக்கூடிய சிறப்பான நிலை பின்வருமாறு: "பக்கவாட்டில் ஒரு பெண் படுத்திருக்கும்போது, கர்ப்பிணிகளின் விஷயத்தில் முன்பே சொல்லப்பட்ட நிலையை இங்கே கைக்கொள்ள வேண்டும். இப்படியாக, இரண்டு கூனல்களும் ஒன்றில் ஒன்று மோதாது. இருவரும் பக்கவாட்டில் படுத்திருக்க ஆண் பின்னிருந்து தாக்குவான். பெண்மகள் மல்லாந்து படுத்திருந்தால், அவள் கூனல் தலையணையால் பாதுகாக்கப்பட வேண்டும். அதேநேரம், ஆண் அவளின் கால்களுக்கிடையே மண்டியிட்டு அமர்ந்து கொள்ள வேண்டும். அவள் தனது கால்களைத் தூக்கி உயரே வைத்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு இரண்டு கூனல்களும் ஒன்றையொன்று சந்திக்காது எல்லா அசௌகரியமும் தடுக்கப்பட்டுவிடும்.

பெண்மகள் தனது தலையை குனிந்திருந்தாலும், முதுகுப்பகுதியை காற்றில் உயர்த்தியிருந்தாலும் எல் க்கவுரி நிலைக்குப் பின்னும் இருவரின் மார்புகளும் கோணலாகி இருந்து அதேசமயம், முதுகு நேராக இருந்தால் இந்த நிலைதான் இருவருக்கும் பொருந்தும். இருவரில் ஒருவர் இயக்கத்தை நடத்தவேண்டியதுதான்.

ஆனால் மிக ஆர்வமூட்டுவதும் வேடிக்கையானதுமான, நான் இதுவரை சந்திக்காததுமான நிலையை கீழ்க்காணும் செய்யுளில் தருகிறேன்.

'ஒரு ஆணின் இடுப்புப்பகுதி வளைந்திருந்தும் ஆனால் முதுகுப்பகுதி நிமிர்ந்தும் இருந்தால், அவன் பிரார்த்தனையில் இருப்பதுபோல் காட்சியளிப்பான். இவனுக்கு புணர்ச்சியானது மிகவும் கடினம். அவனது தொடைகளும் வயிறும் மாறுபாடாக இருப்பதனால் அவன், தனது

குறியை நுழைக்க முடியாது. காரணம், குறியானது தொடைகளுக்குப் பின்புறத்தில் உள்ளது. இதைச் சரிசெய்யவேண்டுமானால் அவன் எழுந்து நிற்கவேண்டும். பெண்மகள் குனிந்திருக்க அவளது பின்புறமானது காற்றில் எழுந்து நிற்கும். அப்போது அவன் தனது குறியை அவளுள் நுழைத்து பின்னர் அவனால் அசையமுடியாததால் அவளே முன்னும்பின்னும் அசையவேண்டும். இந்த நிலை எல் க்க்வுரி அதாவது, பெண்ணே இயக்கம் கொள்வதால் இந்தப் பெயர் பெற்றது.

ஆண்மகன் இக்காத் எனப்படும் அல்லது பக்கவாதம் எனும் ஜமானா என்ற நோயால் பாதிக்கப்பட்டால் அவனால் உட்கார்ந்திருக்கவே முடியும். இக்குறைபாடானது அவனுடைய முட்டிகள், கால்கள், தொடைகள் மற்றும் முதுகுத்தண்டு ஆகியவற்றை பாதித்து மற்ற பகுதிகள் நன்றாக இருந்தால், அவன் நிற்கும் நிலையைத் தவிர்த்து மற்ற நிலைகளை மேற்கொள்ளலாம், அவனது பிருஷ்டபாகம் பாதிப்படைந்திருந்தால். மற்றபடி, அவனது மற்ற உடல் பகுதிகள் நலமுடன் இருந்தால், பெண்மகளே எல்லா இயக்கத்தையும் செய்யவேண்டியிருக்கும்.

புணர்ச்சியில் அதிக இன்பத்தைத் தருவது இந்நூலில் சொல்லப்பட்டிருக்கும் நிலைகளால் மட்டும் வருவதல்ல. நான் என்னால் முடிந்தவரையே இதில் சொல்ல முயன்றிருக்கிறேன். சிலநேரம் காதலர், அவர் தமது உடலமைப்பு பொருத்தமற்றதாக இருப்பினும் தங்களுக்குத் தேவையான நிலைகளின்மூலமாக பெருத்த இன்பத்தை காணுகின்றனர்.

இவ்விஷயத்தில் கரைகண்டு, நுரைதள்ளிய பெண்களைப் பற்றியும் சொல்லப்படுகிறது. அதாவது, பெண் ஆணுடன் படுத்திருக்கும்போது, தன்னொரு காலை செங்குத்தாக நீட்டி, அதன் பாதத்தில் ஒரு விளக்கை வைத்து அதில் முழுக்க எண்ணெய் ஊற்றி திரியை எரியவிடுவாள். ஆண்மகன் குறியைச் செருகி இயக்கத்திலிருந்தாலும் அவள் விளக்கை அணையவிடாது எண்ணெய் சிந்தாமல் சுகத்தை அனுபவித்திருப்பாள்.

இப்படிச் செய்வதால் அவர்களது கலவியானது பாதிப்பு அடைவதில்லை. ஆனால் இருவருக்கும் கடும் பயிற்சி அவசியம்.

இந்திய எழுத்தாளர்கள் புணருவதற்கு பல்வேறு நிலைகளைப்பற்றி எழுதியிருப்பது நிச்சயம். ஆனால் அவர்களில் பெரும்பாலானோர் இன்பத்தைப் பற்றி எழுதாமல் துன்பம்தரும் நிலைகளைப் பற்றியே எழுதியுள்ளனர். கலவியின் மகுடமாகக் கருதப்படுவது சந்தோஷம், அணைத்தல் மற்றும் முத்தங்களே. இவையே மனிதர்களின் விலங்குகளின் சிறப்பம்சம். ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே உள்ள பால் பாகுபாட்டில் இன்பம் அடையாதவர்களே இருக்கமுடியாது.

மனிதனானவன் அதில் உச்சபட்ச சுகத்தைக் காண்கிறான்.

ஒரு மனிதனுக்குள் காதல் ஆழ்ந்து பெருகுமானால் அவனுக்கு கலவி வெகுசுலபமாக நடக்கும். அவன் அதனால் முழுத் திருப்தியடைவான்.

கலவியில் இறங்கும் காதலர் எல்லா நிலைகளையும் பரீட்சித்துப் பார்க்க வேண்டும். அவற்றில் எந்த நிலை அவர்க்கு மொத்த இன்பத்தையும் வழங்குகிறது எனத் தெரிந்துகொள்ள வேண்டும். பின் காமத்திற்கு எந்த நிலை சரியானது என்று அவன் தெரிந்துகொண்டு, பெண்ணின் அன்பைப் பெற்று தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்கிறான்.

நான் சொன்ன நிலைகளை பலர் கடைப்பிடித்து இருக்கின்றனர். ஆனால் டோக் எல் அர்ஸ்ஸை கடைப்பிடித்தவர் எவருமில்லை.

இந்த விஷயத்தில், ஒரு மனிதனுடைய வைப்பாட்டியைப் பற்றிய கதை ஒன்று சொல்லப்படுகிறது. அவள் ஒப்பற்ற அழகும் வசீகரமும் சௌந்தர்யமும் பொருந்தியவள். அவன் அவளை சாதாரண, ஒரே நிலையிலேயே காமம் துய்த்து, வேறெந்த நிலையையும் கடைப்பிடிக்காமல் இருந்துவந்தான். அந்தப் பெண்ணும் அவனிடமிருந்து எவ்வித சுகத்தையும் பெறாது, புணர்ச்சி முடிந்தவுடன் சோகமாக இருந்தாள்.

ஆண்மகன் இந்த விஷயத்தை ஒரு திருமணம் ஆன சீமாட்டியிடம் கூறி வருத்தப்படவே அவள் கூறினாள்: “அவளுடன் கூடும்போது பல்வேறு நிலைகளைக் கொள்வாயாக. இறுதியில் எந்த நிலை அவளைத் திருப்திப்படுத்துகிறதென கண்டுபிடி. பிறகு அந்த நிலையிலே அவளுடன் கூடுவாயாக. பிற்பாடு அவளுடைய அன்பு அளவுகடந்து போகும்.”

உடனே அந்த மனிதன் அவளிடம் பல்வேறு நிலைகளை செய்துபார்த்து, இறுதியில் டோக் எல் அர்ஸ் என்ற நிலையை செய்துபார்த்தான். அப்போது அவளிடம் காமம் அதீதமாகப் பீறிட அவளின் கர்ப்பப்பை தன் இலிங்கத்தை இறுக்கிப்பிடிப்பதை உணர்ந்தான். அப்போது அவள், அவனுடைய உதடுகளைக் கடித்தவாறு, “இதுதான் புணர்ச்சி செய்வதற்கு ஏற்ற நிலை” என்று கூறினாள்.

இந்த நிலையே மற்றெல்லா நிலைகளையும்விட அதிக இன்பத்தைத் தருகிறதென அவனுடைய வைப்பாட்டி சொன்னதும் அதேநிலையிலேயே அவன் இயங்க ஆரம்பித்தான். இவ்வாறு அவன் செயலை கச்சிதமாக முடிக்க, அந்தப் பெண்ணும் அவனை காதலிக்கத் தொடங்கினாள்.

இருப்பினும் மற்ற நிலைகளையும் நடத்தவேண்டும். ஏனெனில் எல்லாப்

பெண்களும் ஒரேஒரு நிலையை தமக்காகவும் மற்ற நிலைகளை தம் இன்பத்திற்காகவும் வைத்திருப்பர். அவைகளில் பிரதானமானது டோக் எல் அர்ஸ் ஆகும். இந்தமுறை மற்றவற்றைப்போலிருக்கும் வயிறானது வயிறுயோடு ஒட்டிக்கொண்டிருக்கும், வாய் வாயோடு பசைகொண்டு ஒட்டியிருக்கும். அதேநேரம் கர்ப்பப்பையின் இயக்கம் அநேகமாக இருக்காது.

புணர்ச்சிக்குத் தகுந்த பல்வேறு நிலைகளைப் பற்றி இப்போது கூறினேன். அவற்றில் சிலவற்றை இங்கே விவரிக்கிறேன்.

முதலாம் நிலை: (கிணற்றில் வாளி) குறிகளை அறிமுகப்படுத்தலுக்குப்பின் ஆணும் பெண்ணும் நெருக்கமாக கட்டியணைக்கின்றனர். பின் அவன் ஒரு அழுத்தத்துடன் இயங்கி நிறுத்துகிறான். பின் அந்தப் பெண்ணும் அதேபோல் இயங்கி நிறுத்துகிறாள். இவ்வாறு மாறிமாறி அவர்கள் இயங்குகின்றனர். கால்களோடு கால்கள் வைத்து, கைகளோடு கைகள் பின்னியிருக்க, கிணற்றில் வாளி இருப்பது போன்று அவர்கள் விட்டுவிட்டு இயங்கிக் கொள்கின்றனர்.

இரண்டாவது நிலை: (அமைதியான அதிர்ச்சி) குறிகளை அறிமுகப்படுத்தியபிறகு, அவர்கள் விட்டுவிலகாமல் நுனிவரை விலக்கிக் கொள்கின்றனர். பின் அழுத்தமாகப் புணர்ந்துகொள்கின்றனர். இவ்வாறு விஷயமானது தொடர்ந்து நடக்கிறது.

மூன்றாவது நிலை: (அணுகல்) ஆண் தனது இயக்கத்தை நடத்தி நிறுத்திக்கொள்கிறான். பின்னர் பெண்ணானவள் ஆணைப்போல் குறியானது தன் குழித்தளத்தில் இருக்க, இயங்கி பின் நிறுத்திக்கொள்கிறாள். இப்படியே அவர்கள் விந்து வெளியே வரும்வரை தொடர்ந்து இயங்குகின்றனர்.

நான்காவது நிலை: (காதலரின் தையல்காரன்) ஆண்மகன் தன் குறியானது அவளது நிதம்பத்தில் பாதியளவு சென்றிருக்க, சட்டென்று உராய்வு ஏற்படுத்தி உடனே தன் வேர் வரை உள்ளே தள்ளுவான். இது தையல்காரனின் கையிருக்கும் ஊசி எனப்படும். ஆணுக்கும் பெண்ணுக்கும் கவனம் அதிகமிருக்க வேண்டும்.

ஐந்தாம் நிலை: (நிதம்பத்தில் பற்குச்சி) ஆண் மகன் தனது குறியை பெண்ணின் அல்குலில் நுழைத்து, மேலேயும் கீழேயும் இடமாகவும் வலமாகவும் இயங்குகிறான். சுறுசுறுப்பு வாய்ந்த உறுப்பைக் கொண்டிருக்கும் ஆண்மகனாலேயே இந்த நிலையை கைக்கொள்ள முடியும்.

ஆறாம் நிலை: (காதலின் குத்துச்சண்டை) ஆண்மகன் தன் குறியை பெண்ணின் அரசிலையில் மிகவும் ஆழ்ந்து நுழைக்க, அவனுடைய முடிகளானது பெண்ணின் முடிகளோடு முடிச்சிட்டுக் கொள்கிறது. இந்த நிலையில் அவன் ஆக்ரோஷமாக தன் ஆயுதத்தை எடுக்காமல் இயங்குகிறான்.

எல்லா நிலைகளிலும் இந்த நிலை அதிகச் சிறப்புவாய்ந்தது. குறிப்பாக, இது டோக் எல் அர்ஸ் உடன் சம்பந்தப்பட்டது. பெண்கள் வேறு எந்த நிலைகளை வேண்டுமானலும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். அது அவர்களின் கர்ப்பப்பை ஆண் குறியை இறுக்கிப்பிடித்து இன்பம் தருவதாக இருக்கிறது. அவர்களின் மோகத் தாகத்தை முழுவதுமாக தணிக்கிறது.

ஓரினச்சேர்க்கையை விரும்புவதாகk கூறப்படும் பெண், மௌனமான தடவலுக்கு இந்த நிலையையே எப்பொழுதும் கைக்கொள்வர் மற்றும் இதுவே ஆணுக்கும் பெண்ணுக்கும் சந்தோஷகரமான விந்து, சுரோணித வெளியேற்றத்தைத் தருகிறது.

முத்தங்களின்றி எந்தவொரு நிலையோ அல்லது இயக்கமோ முழு இன்பத்தை அளிப்பதில்லை. இந்த நிலைகளில் கொள்ளாத முத்தங்கள் திருப்தி தருவதில்லை. காதலின் விளையாட்டில் முத்தம் என்பது அதிக சக்தி வாய்ந்ததாகும்.

புணர்ச்சியின் உள்ளார்ந்த உறுப்பே முத்தம் ஆகும். தகுந்த முத்தம் யாதெனில், நாக்கையும் உதடுகளையும் முத்தம் கொடுத்து உறிஞ்சவேண்டும். அப்போது அவளிடமிருந்து புதிதான இனிமையான எச்சில் பிறந்து வரும். ஆண் மகனானவன் அவளின் நாவை மெல்ல, மென்மையுடன் கடிக்க, அவளுக்கு அழகிய இனிமைமிகு, சுத்தமான தேனினும் சுவைமிகுந்த எச்சிலானது ஊறும். இது வாயில் ஊறும் எச்சிலோடு கலக்கக்கூடாது. இவைபோன்ற சிறுசிறு அசைவுகளே ஆணுக்கு நடுக்கத்துடன் கூடிய உணர்ச்சிகளைத் தந்து, அவன் உடலெங்கும் ஓடி, மதுவைக்காட்டிலும் அதிக மயக்கம் தருவதாகும்.

புலவர் ஒருவர் கூறியுள்ளதாவது:

முத்தம் என்பது முழுவதுமாகவும் ஆழமாகவும் இருக்க வேண்டும். அது வாயின் மேலண்ணத்தைத் தொடும் எச்சிலால் உழப்பட்டிருக்க வேண்டும். எச்சிலானது வாயினில் நாவின் அசைவினால் உண்டாகி நன்கு உறிஞ்சப்பட வேண்டும்.

இதழ்களின் வெளிப்புறத்தில் கொடுக்கும் முத்தமானது, அதிக ஓசையை எழுப்பும், அது பூனை என்று அழைக்கப்படும் அதில் இன்பமேதும்

இருக்காது. இதை குழந்தைகளுக்கும் கைகளிலும் கொடுத்தால் தகும்.

மேலே நான் விவரித்திருக்கும் முத்தமானது புணர்ச்சிக்குத் தகுந்ததாகும்.

உள்ளூர் பழமொழி ஒன்று சொல்வதாவது:

நான் இவ்விஷயத்தில் சில வரிகளை இயற்றியிருக்கிறேன்.

கோபுலா, லெட்ஸம் மற்றும் பௌஸ் ஆகிய மூன்று வார்த்தைகளும், கைகளின் அல்லது வாயின்மீது கொடுக்கப்படும் முத்தங்களைக் குறிப்பதாவன. ஃபெரேம் என்ற வார்த்தையானது வாயில் கொடுக்கப்படும் முத்தத்தைக் குறிப்பிட்டுச் சொல்வதாகும்.

ஒரு அராபிய புலவன் பாடியதாவது:

“மணப்பெண்ணின் ஆபரணம் மற்றும் ஆத்மாக்களின் சந்தோஷம்”, இந்நூலின் ஆசிரியர் மேற்கொண்டு இவ்விஷயத்திற்கு இரண்டு செய்யுள்களைப் பாடியிருக்கிறார்.

மேலே விவரித்திருக்கும் எல்லா தடவல்களும் அணைப்புகளும் முத்தங்களும் குறியை நுழைக்காமல் செய்யப்படக்கூடாது. எனவே, கலவியானது செய்யப்படக்கூடாது என்ற நிலையில், இவற்றை ஒரு ஆண்மகன் விட்டிருக்க வேண்டும். அவை எரிகின்ற தீயில் எண்ணெய்விடுவது போலாகும். தீயை மூட்டுவதுபோலும், இந்த முத்தங்களினால் தொடரும் நிகழ்வுகள்.

புணர்ச்சியற்ற தடவல்களினால் ஆணைவிடப் பெண்ணுக்கு அதிக இன்பமில்லை.

இதைப்பற்றிய ஒரு நிகழ்வு பின்வருமாறு சொல்லப்படுகிறது:

யமாமாவின் ஆளுநர் முன்பாக, தந்தை மற்றும் கணவனான எல் அஜாஜே உடன், தஹாமா பெண்ட் மெஸ்த்ஜெல் வந்து நின்று, தன் கணவன் ஆண்தன்மையற்றவனாகிவிட்டான் எனவும், அவளருகே நெருங்கக்கூடமாட்டான் எனவும், அவளை புணரவே இல்லை எனவும் புகார் கூறினாள்.

இந்த வினோதச் சிக்கலில் அவளுக்கு துணையாக நின்ற அவளது தந்தையை நோக்கி கபடமில்லாத யமாமாவின் மக்கள் கேட்டதாவது: “புணருவதற்கு உன் மகளை அழைத்து வந்திருக்கிறாயே உனக்கு வெட்கமில்லையா?”

அதற்கு அவர் பதில் அளித்ததாவது: “என்னுடைய விருப்பமே அவள் குழந்தைகளைப் பெற்றெடுக்க வேண்டும் என்பதுதான். அவர்களை அவள் இழந்துவிட்டால் அது கடவுளின் விருப்பம். மாறாக அவர்கள் இருந்து அவர்களை வளர்த்துவிட்டால் அவளுக்கு நல்லது.”

இச்சமயத்தில் தஹாமா குறுக்கிட்டு ஆளுநரிடம் கூறியதாவது: “அதோ, அங்கே என் கணவன் நிற்கிறான். அவன் இதுநாள்வரை என்னை தொட்டதுகூடக் கிடையாது.” ஆளுநர் குறுக்கிட்டுக் கேட்டார்: “அதாகப்பட்டது உன்னால் முடியவில்லை அப்படித்தானே?” அவள் மறுமொழி புகன்றாள்: “அதற்கு மாறாக, அவனுக்காக நான் மல்லாந்து படுத்திருந்து என் தொடைகளை விரித்திருப்பேன்.” அப்போது கணவன் கூவினான்: “ஓ அமீர், அவள் பொய் சொல்கிறாள். நான் அவளை புணர சண்டையிட வேண்டும்.” அமீர் கீழ்வரும் தீர்ப்பைக் கூறினார்: “நான் உன்மேல் சுமத்தப்பட்ட குற்றச்சாட்டை பொய்யென நிரூபணம் செய்ய ஒரு வருட காலம் அவகாசம் தருகிறேன்.” அவர், அந்த மனிதனுக்கு சாதகமாக இந்தத் தீர்ப்பை வழங்கினார். அல் அடேஜா பிற்பாடு சென்று கீழ்வரும் பாடலைப் பாடினான்:

தன் வீட்டிற்குச் சென்றவன், தன் மனைவியை கொஞ்சி, தடவி முத்தங்கள் இட்டான். ஆனால் அவனது முயற்சிகள் அதைத்தாண்டி போகவில்லை. அவன், தனது ஆண்மையை நிரூணம் செய்யவில்லை. தஹாமா அவனிடம் சொன்னாள்: “உன்னுடைய தடவல்களையும் தழுவல்களையும் உன்னுடனே வைத்துக்கொள், அவை என்னுடைய காமத்தை திருப்திப்படுத்தாது. நான் விரும்புவதெல்லாம் விரைத்திருக்கும் இலிங்கமே. அதன் விந்துவானது எனது கர்ப்பப்பையில் நேராகச் சென்று விழவேண்டும்.” அவள், அவனிடம் கீழ்வரும் செய்யுளை பாடிக் காட்டினாள்:

எல் அல்ஜடஜே தனது வெட்கத்தை மறைத்துக்கொள்ளும் பொருட்டு, அன்றிரவில் அவளைவிட்டு நீங்கி அவளை அவள் குடும்பத்தோடு அனுப்பிவிட்டான்.

இதுபோன்ற சமயத்திற்காக ஒரு கவிஞன் பாடியதாவது:

பெண்களில் பெரும்பாலானோர் புணர்ச்சியின்றி முத்தங்களிலும் தழுவல்களிலும் திருப்தியடைந்துவிடுவதில்லை. அவர்களைப் பொறுத்தவரை, ஆணின் விரைத்த இலிங்கத்திலேயே விஷயம் உள்ளது. அவலட்சணமாக இருந்தாலும் அவளை குடைந்தெடுக்கும் ஆண்மகனையே அவள் விரும்புவாள்.

இவ்விஷயத்தைப்பற்றி கதை ஒன்று சொல்லப்படுகிறது.

மூஸா பென் மெஸாப் என்பவன், ஒரு நாள் நகரத்தில் ஒரு பெண்ணைக் கண்டான். அவளுக்கு ஒரு அடிமைப் பெண் இருந்தாள். அவள் ஒரு நல்ல பாடகி. அவளை விலைக்கு வாங்குவதற்கு விரும்பினான். அந்தப் பெண் ஜொலிக்கின்ற அழகையும், தனித்திருக்கும் வசீகரத் தோற்றத்தையும் பெற்றிருந்தாள். அவளிடம் நல்ல செல்வவளமை இருந்தது. அதேசமயம்,

அவன், அவளுடைய வீட்டில் அசிங்கமான உருவத் தோற்றமுடைய ஒரு இளம்வாலிபன் அங்கேயும் இங்கேயும் நடந்து உத்தரவுகள் பிறப்பிப்பதைக் கண்டான்.

மூஸா, அந்த மனிதன் யாரென அவளிடம் கேட்க, அவள் சொன்னாள்: "இவரே என் கணவர். அவருக்காக என் வாழ்வையும் தியாகம் செய்வேன்! இதுவொரு மோசமான அடிமைத்தனம், நீ அதிலே மாட்டிக்கொண்டாய், உனக்காக நான் மிகவும் வருந்துகிறேன்" என்று அவன் கூறினான். ''நாம் கடவுளுக்குச் சொந்தம், அவரிடம் நாம் திரும்பவேண்டும். ஆனால் ஒப்பிடமுடியாத அழகையும், அளப்பரிய வடிவத்தையும் பெற்றிருக்கும் அழகி நீ. இதுபோன்ற மனிதனிடம் மாட்டிக் கொண்டிருக்கிறாய்."

அவள் பதிலளித்தாள்: "அவன் எனக்கு முன்பக்கம் செய்வதை உனக்கு பின்பக்கம் செய்தால் பிற்பாடு நீ உன் தந்தைவழிச்சமூக உரிமையையும், சேர்த்துவைத்திருக்கும் செல்வத்தையும் அவனிடத்தில் தந்துவிடுவாய். அவன் உன் கண்களுக்கு அழகாகத் தோன்றுவான். அவனது வெற்றுத் தோற்றம் அழகாக மாறிவிடும்."

"கடவுள் அவனை உன்னிடத்திலேயே வைத்திருக்கட்டும்!" மூஸா சொன்னான்.

இதைப்பற்றி மேலும் சொல்லப்படுவது: ஒரு நாள், புலவர் ஃபராஸ்டக் ஒரு பெண்ணைச் சந்தித்து அவள்மேல் எரிகின்ற காமத்தீயை ஊற்ற, இக்காரணத்தினால் அவள் அவரிடம் இவ்வாறு கூறினாள்: "என்னை இவ்விதமாகப் பார்க்க என்ன காரணம்? என்னிடம் ஆயிரம் அல்குல் இருந்தாலும் அவற்றில் ஒன்றை நீங்கள் பெறப்போவதில்லை!'' காரணம் ஏனோ?" என கவிஞர் கேட்டார். அதற்கு, "ஏனெனில் உம்முடைய அழகானது கவர்வதாகயில்லை மற்றும் நீ மறைத்துவைத்திருக்கும் மர்ம உறுப்பும் அதுபோல்தான் இருக்கும்" என்று அவள் சொன்னாள். அவர் பதிலளித்தார்: "நீ என்னை நிரூபிக்கச் சொன்னதனால், என்னுடைய உள்முகத் தகுதியானது வெகு அழகாக இருக்க, என் வெளிப்புறத் தோற்றத்தை மறந்துவிடுவாய்." இவ்வாறு சொன்ன அவர், தன் ஆடையை நீக்கி, ஒரு இளம்பெண்ணின் கையைப் போலிருந்த உறுப்பை அவளிடம் காட்டினார். அதைப் பார்த்தவுடன், அவள் காமத்தீயில் எரிகின்றவளாக ஆகிப்போனாள். அவர் இதைப் பார்த்தவுடன் அவளைத் தழுவுவதற்கு அனுமதி கேட்டார். பிறகு அவளும் தன் ஆடையினை நீக்கி, வீனஸைப்போல், குவிமாடமாக குவிந்திருந்த தன் உறுப்பைக் காட்டினாள். பிறகு அவர், தன் வேலையைச் செய்து முடித்து கீழ்க்காணும் செய்யுளைப் பாடினார்.

ஒரு பெண்ணிடம் சுகத்தை வேண்டிநிற்பவன், அவளை சூடான அணைப்பிற்குப்பின் கொழுந்துவிட்டெரியும் காமத்தீயை அணைக்க வேண்டும். அவள் மோகத்தில் பெருமூச்செறிவதையும், அவளின் அரசிலை ஈரம் படர்ந்திருப்பதையும், கர்ப்பப்பை முன்னால் விரிந்திருப்பதையும் கண்டுகொண்டு தன் வேலையை ஆரம்பித்தால், அப்போது இருவரின் சுக்கிலமும் சுரோணிதமும் ஒன்றுசேரும்.

# அத்தியாயம்-vii

## சந்ததி உற்பத்தியில் ஏற்படும் காயங்கள், நோய்கள்

அறிக, ஊசூர் அவர்களே! (கடவுள் அவருக்கு நல்லவராக விளங்கட்டும்) புணர்ச்சியின்போது எழும்பும் தீங்குகள் எண்ணற்றவையாகும். அவற்றில் சிலவற்றை நான் உரைக்கிறேன், அவற்றை விலக்கிவைக்க முக்கியமானவற்றை தெரிந்துகொள்ள வேண்டும்.

என்னைச் சொல்லவிடுங்கள். முதற்கண், நின்றபடி புணர்ச்சியில் ஈடுபட்டால் அது, கால்முட்டிகளைப் பாதித்து நரம்புமண்டல நடுக்கத்தைக் கொண்டுவந்துவிடும். பக்கவாட்டில் செய்தால் அது கீல்வாதத்தையும், இடுப்பு மூட்டுகளில் இடுப்புவாதத்தையும் கொணர்ந்து சேர்க்கும்.

விரதத்தில் இருக்கும் அல்லது உணவு உண்டவுடன் பெண்ணைச் சேர வேண்டாம். அப்படிச் சேர்ந்தால், உங்கள் முதுகில் வலியுண்டாகும், சுறுசுறுப்பை இழந்து விடுவீர்கள், உங்களின் கண்பார்வை மங்கலாகிவிடும்.

பெண்மேல் ஏறி இயக்கத்தை நடத்தினால் உங்கள் முதுகுப்புறம் பாதிப்படையும், இதயம் பலவீனமடையும். மற்றும் இந்நிலையில் நிதம்பத்தின் சுரோணிதத்தின் சிறுதுளி உங்கள் சிறுநீர் குழாயில் ஏறிவிட்டால் குறுக்கமாவது உண்டாகலாம்.

புணர்ச்சி முடிந்தவுடன் உங்கள் குறியை அவளது அரசிலைக்குள் வைக்காதீர். அது இடைஞ்சலை உண்டுபண்ணிவிடும் அல்லது முதுகெலும்பை மென்மையாக்கிவிடும் அல்லது இரத்தக்குழாய்களில் சேதாரம் உண்டாக்கிவிடும் அல்லது நுரையீரலில் எரிச்சலை உண்டுபண்ணிவிடும்.

புணர்ச்சிக்குப் பின் அதிகப்படியான உடற்பயிற்சியும் சீரழிவை உண்டாக்கும்.

கலவிக்குப் பின் உங்கள் இலிங்கத்தை நீரால் கழுவக்கூடாது. ஏனெனில் இது புண்ணை உண்டாக்கும்.

வயதான பெண்களிடம் செய்யும் கலவியானது கொடிய விஷம்போல. இதைப்பற்றி பின்வருமாறு சொல்லப்படுகிறது. “வயதுமுதிர்ந்த பேரிளம்பெண்களை அவர்கள் செல்வச்செழிப்புடன் இருந்தாலும் புணராதீர்.” இதைப்பற்றி மேலும் சொல்லப்படுவதாவது: “வயதான பெண்களை ஏறாதீர். அவர்கள் உமக்கு உதவிகள் பல செய்தாலும்கூட.” மறுபடியும் சொல்வதென்றால், “வயது முதிர்ந்த பெண்களுடன் கலவிகொள்வது தீங்கான உணவை உட்கொள்வதற்கு சமமாகும்”.

தன்னைவிட வயதுகுறைந்த நங்கையிடம் புணர்ச்சிகொள்ளும் ஆணானவன், வல்லமைமிகு வீரத்தைப் பெறுகிறான். தன் வயதொத்த பெண்ணாக இருப்பின் அதனால் அவன் எவ்விதப் பயனும் பெறமாட்டான். இறுதியாக, அவனைவிட வயதான பெண் அவனிடம் புணர்ச்சிகொண்டால் அவனிடமிருந்து எல்லா பலத்தையும் உறிஞ்சியெடுத்துக் கொள்கிறாள். இதைப்பற்றி கீழ்வரும் செய்யுள் பின்வருமாறு கூறுகிறது.

ஒரு பழமொழியும் இவ்வாறு கூறுகிறது: “வயதான பெண்ணுக்கு சேவகம் புரியாதே, அவள் உனக்கு வெள்ளை இரவையும் பாதாம் ரொட்டியும் தருவதாகச் சொன்னாலும்கூட”.

அதிகப்படியான புணர்ச்சியால் அதிகளவு விந்து வெளியேறுவதால் உடல்நலத்தைப் பாதிக்கும். மோரிலிருந்து வெண்ணை எடுப்பதனால், அது பால்மையத்தன்மையைக் காட்டும். அதிலிருந்து மோரை எடுத்துவிட்டால், பாலானது தனது தன்மையை இழந்துவிடும். அதேபோல் விந்துவானது சத்து நிறைந்தவற்றை தனக்குள் உருவாக்குகிறது, அதன் இழப்பு அவனை பலவீனமாக்குகிறது. மற்றொருவகையில், உடலின் தன்மையும், விந்துவின் தகுதியும் நீங்கள் உட்கொள்ளும் உணவின் அடிப்படையில் அமைந்துள்ளன. எனவே ஒரு ஆணாகப்பட்டவன், சோர்வுறாமல் புணர்ச்சியில் சந்தோஷமாக கொண்டாடவிரும்பினால், அவன் பலம்தரும் உணவுகளை உண்ணவேண்டும். நாவூறும் இனிப்பு தின்பண்டங்கள், சுகந்தமான தாவரங்கள், கறி, தேன், முட்டைகள் மற்றும் இதேபோன்று தின்பண்டங்கள். இவைபோன்ற உணவு வகைகளைத் தின்பவன். அதிகப்படியான புணர்ச்சியில் உண்டாகும் நோய்களில் இருந்து தப்பிக்கலாம்.

முதலில், சந்ததி உற்பத்தி சக்தியை இழத்தல்.

இரண்டாவதாக, பார்வையின் சக்தியை இழத்தல். அவன் முழுவதுமாக

கண்பார்வை இழக்கவில்லையென்றாலும், என்னுடைய அறிவுரையைப் பின்பற்றவில்லையென்றால் அவனுக்கு கண்நோய்களாவது வரும்.

மூன்றாவதாக, அவன் உடல் வலிமையை இழப்பான்; அவன் பறக்கநினைக்கும் மனிதனாக விரும்பக்கூடும். ஆனால் முடியாது. யாரையாவது துரத்தினால் அவனை பிடிக்கமுடியாது அல்லது சுமையை தூக்கிச் செல்பவன், வேலை செய்பவன் விரைவிலேயே களைப்படைந்துவிடுவார்கள்.

புணர்ச்சியின் சுகத்தைப்பற்றி எண்ணத்தோன்றாதவன் கற்பூரத்தை உபயோகம் செய்கிறான். சுமார் ஐந்து கிராம் கற்பூரத்தை எடுத்து நீரில் கரைத்துக் குடிப்பவன் புணர்ச்சியைப் பற்றிய சுகத்திலிருந்து விடுதலை அடைகிறான். பல பெண்கள் இதை எதிரிகளுக்கு எதிராகப் பயன்படுத்துகின்றனர் அல்லது கடுமையான உடற்பயிற்சிக்குப் பின்னர் பயன்படுத்துகின்றனர். அதற்கு அவர்கள் இறந்த உடல்களை புதைக்கப் பயன்படுத்தும் கற்பூரத்தை, அதை புதைக்க உதவும் வயதான பெண்களிடத்தில் இருந்து விலையில்லாமல் வாங்குகின்றனர். ஃபரியா எனும் ஹென்னா மலர்களையும் அவர்கள் இதற்காகப் பயன்படுத்துகின்றனர். அவர்கள் இதை அரைத்து, நீரில் கரைத்து, மஞ்சளாகும்வரை காத்திருந்து பின் குடிக்கும் திரவத்தில் கலந்துதர கற்பூரத்தைப்போல் விளைவுண்டாக்கும்.

இதற்குண்டான மருத்துவத்தை இதே அத்தியாயத்தில் சொல்கிறேன். இருப்பினும் அதற்குண்டான இடம் இதுவல்ல. எனினும் இந்த விவரத்தை இங்கே கொடுத்தால் பலருக்கு அது பயன்படும் என்று நினைக்கிறேன்.

பல விஷயங்களைத் தொடர்ந்து செய்தால் அது நலத்தை பாதித்து இறுதியில், உடல்நலத்தைப் பாதிக்கும். இவை அதிகப்படியான தூக்கம், காலமற்ற காலத்தில் நீண்ட பயணம் முக்கியமாக, குளிர்நாடுகளில், இவை உடலில் சக்தியைக் குறைத்து இறுதியில், முதுகுத்தண்டில் நோயை உண்டாக்கும்.

சிறுநீர் கழிக்க கஷ்டப்படுபவர்களுக்கும் புண்ர்ச்சியானது தீங்கு விளைவிப்பதாகும்.

உள்ளுக்குள் எரிச்சல் ஊட்டும் உணவுகளும் உடலை பலவீனப்படுத்திவிடும்.

புணர்ச்சி முடிந்தவுடன் குறியை பெண்ணின் நிதம்பதிற்குள்ளே குறுகிய அல்லது நீண்டநேரம் வைத்திருப்பது, ஆண்குறியை தளர்வடையச் செய்து கலவிக்குத் தகுதியில்லாததாகச் செய்துவிடும்.

நீங்கள் ஒரு பெண்ணோடு படுத்திருந்தால், அப்போது அவள் செய்யட்டும் என நினைத்திருந்தால் செய்யவிடுங்கள், ஆனால் நெடுநேரத்துக்கு அல்ல. ஏனெனில் இதுபற்றி சத்தியமான வார்த்தையொன்று சொல்லப்பட்டுள்ளது. அது, "யார் ஒருவன் தன் விருப்பத்திற்காக காதல் விளையாட்டை ஆடுகிறானோ, ஆசைகளை திருப்திப்படுத்திக் கொள்கிறானோ அவன் தீவிரமான சுகத்தைப் பெறுகிறான். ஆனால் அடுத்தவரின் திருப்தியை நிறைவுசெய்யும்பொருட்டு செயல்புரிபவன் தனது ஆசைகளை இழப்பதோடு மட்டுமல்லாது, கலவி செய்யும் தகுதியை இழந்துவிடுகிறான்.

இந்த வார்த்தைகளின் பொருள் யாதெனில், காம வேதனையில் உந்தப்பட்ட ஆண், தன் விருப்பத்திற்கு ஏற்ப எப்போது வேண்டுமானாலும் அல்லது எந்த சமயம் பொருந்துமோ அந்த சமயத்தில், எதிர்காலத்தில் ஆண்மையற்றுப் போய்விடுவேனோ என்ற எவ்வித பயமற்றும், தனக்காக கீழே படுத்திருக்கும் பெண்ணோடு கலவி புரியவேண்டும்.

ஆனால் அடுத்தவருக்காக அதாவது, தன் காதல்கிழத்தியின் விருப்பங்களுக்குப் பணிந்து, நடத்த இயலாதவற்றை நடத்தத் துணிந்து நடப்பவன், தன் விருப்பங்களுக்கு எதிராகச் சென்று பிற்பாடு தன் ஆரோக்கியத்தை இழக்கிறான்.

குளிக்கும்போதோ அல்லது குளித்தவுடனோ உறவுகொள்ளவது தீங்கை விளைவிக்கும். கழிவறை சென்று மீண்டவுடன் உடனே உறவுகொண்டால் அதுவும் தீங்கு விளைவிக்கும். அதுவன்றி வயிறு முட்ட குடித்திருந்தாலும் அதுவும் தீங்கை விளைவிக்கும். பெண்ணானவள் மாதவிலக்கு அடைந்திருக்கும் சமயத்தில் கலவிகொள்வது ஆணுக்கும் பெண்ணுக்கும் சீரழிவை உண்டாக்கும். ஏனெனில் அச்சமயத்தில் பெண்ணுடைய கர்ப்பப்பையானதில் குளிர்ச்சியான இரத்தம் சுற்றிக்கொண்டிருக்கும். தவிர, ஒருத்துளி இரத்தமாவது ஆணுடைய சிறுநீர் குழாயில் ஏறிவிட்டால் பல்வித சிக்கல்கள் உண்டாகும். பெண்ணைப் பொறுத்தவரை அவளுக்கு எவ்வித சுகமும் கிடைக்காது, புணர்ச்சியே வெறுப்பைத் தரும்.

குளிக்கும்போது உறவுகொள்வதனால் எவ்வித சுகமும் கிட்டாது எனச் சிலர் கூறுகின்றனர். இதை நம்புகிறேன். எப்படியெனில், புணர்ச்சியின் சுகமென்பது பெண்ணின் குறி வெப்பத்திலேயே உள்ளது, குளிக்கும்போது அந்த நிதம்பம் குளிர்ச்சியடைந்து சுகத்தைத் தராமல் போகின்றது. அதேசமயம், ஆண் மற்றும் பெண்ணின் மறைமுக

உறுப்புகளில் ஊடுருவும் நீரானது பல்வித இன்னல்களைத் தோற்றுவிக்கிறது.

அல்குலின் குழிக்குள் உற்றுப் பார்த்தால் கண்களுக்குக் கேடு வரும் என நம்பப்படுகிறது. இது, மருத்துவரின் கேள்விக்கு உட்பட்டது.

இந்த விஷயத்தில் சொல்லப்படுவதாவது: அதாவது, டமாஸ்கஸ் சுல்தானின் மகனான ஹஸின் பென் ஐஸக் என்பவர் பெண்களின் உள்ளுறுப்புகளை ஆராய்வதில் பெருவிருப்பமுடையவர். அதுபோல் செய்யக்கூடாது என எச்சரிக்கப்பட்டவர். அதற்கு அவர் சொன்னார்: “இதனினும் இன்பகரமான விஷயம் வேறு ஏதேனும் உள்ளதா?” ஆனால் அவர் சற்று நாட்களுக்குள்ளாகவே குருடாகிவிட்டார்.

அளவுக்கு மீறி உணவு உண்டுவிட்டு புணர்ச்சியில் இறங்கினால் அது குடலை சேதாரப்படுத்திவிடும். தவிர, தோல்விமுகமாக இருக்கும்போதும் இறங்குவதும் தவறு அல்லது பருவநிலை மிகுந்த சூடாகவோ அல்லது குளிர்ச்சியாகவோ இருந்தாலும் உறவுகொள்ளக்கூடாது.

சூடு நிறைந்த நாடுகளில் கலவியில் இறங்கினால் முன்னெச்சரிக்கை இன்றி பார்வை இழப்பை உண்டாக்கும்.

மறைமுக உறுப்புகளைக் கழுவாமல் அடிக்கடி புணர்ச்சியில் இறங்கினால் உங்கள் குறியின் வீர்யத்தைக் குறைத்துவிடும்.

ஆண்மகன், தன் மனைவியுடனான புணர்ச்சியை தவிர்க்கவேண்டும் அவள் சட்டத்திற்குட்பட்ட அசுத்தத்தில் இருந்தால். ஏனெனில் அவள் கர்ப்பவதியாக இருந்து கலவியை மேற்கொண்டால் பிறக்கும் குழந்தை அத்தளவு சுறுசுறுப்புடன் இருக்காது.

விந்து வெளியேறியபின் பெண்ணுடன் சேர்ந்து படுக்காதீர். ஏனெனில் அது பல்வித சிக்கல்களை அதாவது திரும்பவும் தொடங்கும் மனோநிலைமையை சிக்கல் செய்துவிடும்.

ஒருவரின் முதுகின்மேல் அதிகச்சுமை ஏற்றுவதோ அல்லது மனதில் அதிகமான எண்ணங்களைக் கொண்டிருப்பதோ கூடாது. அவன் புணர்ச்சியை தடை செய்யாமலிருப்பதை விரும்பினால், அடிக்கடி பட்டுத் துணியை உடுப்பதும் ஆகாது. அது கலவியில் உத்வேகத்தைக் குறைத்துவிடும். பட்டுத்துணிகளை உடுத்தும் பெண்களும்கூட ஆண்களின் வீர்யத்தன்மையை குறைத்துவிடுவார்கள்.

நீண்டகாலமாக உண்ணாவிரதம் இருந்தால் அது காமத்தைக் குறைத்துவிடும். ஆனால் தொடக்கத்தில் அது ஆளை இழுக்கும்.

கொழகொழப்பான திரவங்களை தவிர்க்க வேண்டும். ஏனெனில் இவை வெகுவிரைவில் புணர்ச்சியின்போது வேகத்தை வீர்யத்தைக் குறைத்துவிடும்.

வாசனையற்றதோ அல்லது வாசனை நிறைந்ததோ அது எவ்வகையான மூக்குத்தூளாக இருந்தாலும் அதைத் தவிர்க்க வேண்டும்.

புணர்ந்து முடித்தவுடன் காம உறுப்புகளை குளிர்ந்த நீரால் கழுவுதல் ஒரு மோசமான செய்கை. பொதுவாக, குளிர்ந்த நீரில் கழுவுவதால் உணர்ச்சிவேகம் குறைகிறது. அதேநேரம் சூடான நீர் அதை வலிமைப்படுத்துகிறது.

ஒரு அராபியன், தன் மகளை அவள் கணவனிடம் அனுப்பும்போது கீழ்வருமாறு கூறியதாவது: “நறுமண நீரால் உன்னை வாசப்படுத்திக்கொள்!” இதன்பொருள் என்னவெனில், அவள் தன்னுடலை நறுமணநீரால் அடிக்கடி தூய்மைப்படுத்திக் கொள்ளவேண்டும் என்பது. ஆனால் இது எல்லோருக்கும் பொருந்தாது.

ஒரு பெண்ணானவள், தன் கணவனிடம் கூறியதாவது: “நீ உன்னை நறுமணத் தைலத்தால் வாசப்படுத்திக்கொள்ள வில்லையெனில் நீ யாரோ ஒருவன்!” அதற்கு அவன் பதில் கூறியதாவது: “அவலட்சணம் பொருந்தியவளே, பெண்கள்தான் சுகவாசத்தை வெளிப்படுத்த வேண்டும்.”

காமத்தை தவறாகப் பயன்படுத்தினால் அதனுடைய சந்தோஷ சுவையானது மட்டுப்படுகிறது. இவ்வாறு அதை இழந்த நபர் தன்னுடைய ஆண்குறியை ஆண் ஆட்டு இரத்தத்தில் தேன் கலந்து பூசுங்கால் குணம் உண்டாகும். இந்த சிகிச்சை அவனை காதல் போராட்டத்தில் முழு மகிழ்வுடன் ஈடுபடவைக்கும்.

திருக்குரானை படிப்பதினால் புணர்ச்சியை ஒழுங்குபடுத்தி கட்டுக்குள் கொண்டுவரும் என்றும் சொல்லப்படுகிறது.

ஒரு ஜாக்கிரதையான மனிதன், கலவியின் இன்பத்தை முறைகேடாகப் பயன்படுத்தமாட்டான். விந்து என்பது வாழ்க்கையின் நீராதாரம்போல. நீங்கள் அதை நிதானமாகப் பயன்படுத்தினால், கலவியின் இன்பத்திற்கு எப்போதும் தயாராக இருப்பீர்கள். அது, உங்கள் கண்களின் ஒளியைப்போல. நினைக்கும்போதெல்லாம் அனுபவிக்கவேண்டுமென விந்துவை ஊதாரித்தனமாக செலவுசெய்யாதீர். அதை பாதுகாக்கவில்லையெனில் நீங்கள் பல்வேறு நோய்களில் மாட்டிக்கொள்வீர். மருத்துவ அறிஞர்கள் கூறுவதாவது: “கலவிக்கு உறுதியான கட்டுமானம் தேவை, அதைக் கொண்டிருப்பவன்

அபாயமேதுமின்றி இன்பத்தில் மூழ்குவான். ஆனால் பலவீனமான மனிதன் சுதந்திரமாக பெண்களை தேடித்தேடி அபாயத்தில் மாட்டிக்கொள்வான்".

ஞானியான எஸ் சாக்லி என்பவர், ஒரு ஆண்மகனானவன் புணர்ச்சியின் இன்பத்தில் மூழ்குவதைப் பற்றி இவ்வாறு வரையறுக்கிறார்: ஆணானவன் சளி தொந்தரவு அல்லது இரத்தம் வழிதல் முதலிய உடல் உபாதைகள் பெற்றிருப்பின் அவன் மாதத்திற்கு இரண்டு அல்லது மூன்றுமுறைகளுக்குமேல் புணர்ச்சிகொள்ளக் கூடாது. பித்தநீர் மிகுதியாக இருந்தாலோ அல்லது உருவெளித் தோற்றத்தை காண்கிறாவராக இருப்பின் அவர், மாதத்திற்கு ஒருமுறை அல்லது இரண்டு முறைக்குமேல் ஈடுபடக்கூடாது. இக்காலகட்டத்தில் முழுமையாக ஏற்றுக்கொள்ளப்பட்ட சங்கதி என்னவெனில், இந்த நான்கு குறைகளைக் கொண்டிருக்கும் ஆண்கள் காமத்தில் திருப்தியடையாதவர்களாக, இரவும் பகலும் அதிலேயே ஈடுபடுகிறவர்களாக இருந்து, தமக்கு எந்தளவு நோய்களை வரவழைத்துக் கொள்கிறார்கள் என்பதில் கவனம் கொள்ளாமல் இருக்கிறார்கள்.

புணர்ச்சியில் தம் விருப்பங்களை நிறைவேற்றிக்கொள்வதில் ஆண்களைவிட பெண்களே சிறந்து விளங்குகிறார்கள். அதுவே அவர்களின் சிறப்பியல்பு. அவர்களுக்கான இன்பம், அதேசமயம் ஆண்கள் யாவரும் காதலின் இன்பத்திற்காக எல்லாவகையான அபாயங்களையும் தேடி ஓடுகின்றனர்.

புணர்ச்சியில் ஏற்படும் பல்வித அபாயங்களை விவரித்துச்சொன்ன நான், உங்கள் அறிவுக்குத் தகுந்தபடி உடல்நலத்தைப் பற்றிக் கூறும் பின்வரும் செய்யுள்களை விவரணை செய்கிறேன். தன்காலத்தில் புகழ்பெற்று விளங்கிய, மிகவும் குறிப்பிடத்தகுந்த மருத்துவரான ஹரான் எர் ராச்சிட் என்பவரின் வழிவந்தோரால் சொல்லப்பட்ட இந்த செய்யுள்களில் புணர்ச்சியினால் உண்டாகும் இன்னல்களுக்கு தகுந்த தீர்வுகளைக் கூறுகிறார்.

இந்த விதிகள் ஞானிகளால், தயவும் நல்லெண்ணமும் மற்றும் பெருந்தன்மையுள்ள மேதாவிகளுக்குச் சொல்லப்பட்டன.

எல்லா முனிவர்களும் மருத்துவ அறிஞர்களும், காமத்தை முறையாக கொள்ளாததாலேயே ஆண்களுக்கு பல்வித உபாதைகள் தோன்றுகின்றன என உரைத்திருக்கின்றனர். எனவே, ஆண்மகன் தன் உடல்நலத்தை குறிப்பாக, கண் பார்வையை பாதுகாத்துக்கொள்ள விரும்பினால் மற்றும் மிதமான காமத்திலேயே வாழ்வின் இன்பம்

மிகுந்துள்ளது, அதை மீறினால் துன்பமே நிகழும் என அறிந்துகொள்ள வேண்டும்.

# அத்தியாயம்—viii

## ஆண்களின் காம உறுப்புகளுக்கு வழங்கப்படும் பல்வித பெயர்கள்

ஊசூர் அவர்களே! (கடவுள் அவர்களுக்கு நன்மைகளைச் செய்யட்டும்) அறிந்துகொள்ளுங்கள், ஆணின் காம உறுப்புக்கு பல்வித பெயர்கள் நிலவுகின்றன. அதாவது,

சக்திமிகு உறுப்பாளன்.

இலிங்கம்

சந்ததியைத் தருபவன்.

ஆண்புறா.

மணிநாதம் ஒலிப்பவன்.

வெல்லமுடியாதவன்.

விடுதலைப் போராளி.

உணர்ச்சியைத் தூண்டுபவன்.

ஏமாற்றுபவன்.

தூங்குபவன்.

நெம்புகோலன்.

தையல்காரன்.

தீ அணைப்பாளன்.

திரும்புபவன்.

தாக்குபவன்.

நீச்சல் வீரன்.

வீடு புகுபவன்.

பிரித்தாள்பவன்.

ஒற்றைக்கண்ணன்.

வழுக்கையாளன்.

ஒற்றைக் கண்ணுடையவன்.

தள்ளுபவன்.

வலிவுநிறைந்த தலையுடையவன்.

கழுத்தையுடையவன்.

மயிர் உடையவன்.

ஆணவமானவன்.

வெட்கமுடையவன்.

விம்முபவன்.

குடைபவன்.

ஐக்கியமடைபவன்.

கோழை அகற்றுபவன்.

வெட்டுபவன்.

தோண்டுபவன்.

தேடுபவன்.

அழிப்பவன்.

தளர்பவன்.

சூறையாடுபவன்.

கண்டுபிடிப்பாளன்.

கமீரா மற்றும் டெக்யூர் என்ற பெயர்களை வைத்துப் பார்க்கும்பொழுது, அவற்றின் பொருள் எளிதில் விளங்கும். டெக்யூர் என்ற வார்த்தை எல்லா உயிரனத்தின் ஆண் உயிர்களைக் குறிக்கும் அதேநேரம், குறிப்பிடுதல் மற்றும் ஞாபகம் முதலான அர்த்தங்களைக் குறிப்பிடும். ஒரு ஆண்மகன், தன் குறியில் காயம்பட்டாலோ அல்லது துண்டிக்கப்பட்டாலோ அல்லது தளர்வுற்றிருந்தோலோ, அவனால் தன் மண வாழ்க்கைக்குரிய கடமைகளை சரிவரச் செய்யமுடியாமல் போகும். பிறர் அவனிடம் பின்வருமாறு சொல்வார்கள்: “இவன், தனது ஆண்குறியானது செத்துப்போனது. இதன் பொருள் என்னவெனில், அவனுடைய இலிங்கமானது தொலைந்துபோய்விட, அவனுடைய குலமே நாசமானது. அவன் இறந்தபின் அவர்கள் இவ்வாறு உரைப்பார்கள்: ”அவனுடைய குறியானது துண்டிக்கப்பட்டுவிட்டது”. இதன் பொருள், இந்த உலகோடு அவனுடைய ஞாபகங்கள் துண்டிக்கப்பட்டுவிட்டது.”

இந்த டெக்யூர் என்ற வார்த்தை, கனவுகளில் வெகுமுக்கியமான பகுதியாக வருகிறது. ஒரு ஆணானவன், தன் குறியானது

துண்டிக்கப்பட்டுவிட்டதாக கனவுகண்டால், அவன் கனவுக்குப்பிறகும் தொடர்ந்து வாழுவான். ஆனால் மேலே சொல்லப்பட்டவாறு அவன் தன்னுடைய ஞாபகத்தை இழந்துவிட்டானென்றும், தனது குலத்தை தொடரசெய்ய முடியாதெனவும் கூறப்படுகிறது.

நான் கனவுகளின் விளக்கத்தை இன்னும் ஆழமாக சொல்லப்போகிறேன்.

பற்களானது காலத்தைக் குறிக்கின்றது. எனவே, ஒரு மனிதன் முழுஅளவிலான பற்களை தன் கனவில் கண்டிவிட்டால் அது அவனது நீண்ட வாழ்நாளைக் குறிக்கிறது.

அவன் தன் நகத்தை தலைகீழாக திரும்பினாற்போல் கண்டிருந்தால், தன் எதிகளிடம் கொண்டிருந்த வெற்றி தலைகீழாக நிலைமாறும். அதாவது, எதிரியால் அவன் வெல்லப்படுவான். நேர்மாறாக அவனது எதிரியின் நகங்கள் இயற்கைக்கு மாறாக அமைந்திருப்பதைக் காணநேர்ந்தால் அவனது எதிரியிடம் இழந்துபோன வெற்றியை திரும்பவும் அவன் அடைவான்.

அவன் அல்லிமலரை கண்டுவிட்டால் அந்த வருடம் முழுமைக்குமே துன்பமானது தொடர்ந்துவரும்.

கனவுகளில் நெருப்புக்கோழியை (நமேத்) கண்டுவிட்டால் அது தீய சகுனம். ஏனெனில், அதன் பெயர்ச்சொல்லானது நா மற்றும் மேத் ஆகியவற்றால் உருவாகி, அதன் பொருள் மரணத்தின் செய்தி என்றாகி, அழிவு எனப் பொருள் தருகிறது.

கேடயத்தை கனவில் கண்டுவிட்டால் எல்லா துக்கச் சம்பவங்களும் நிகழப்போகிறது என அர்த்தம். ஏனெனில் இந்த வார்த்தையின் எழுத்துகளை மாற்றிப்போட்டால் எல்லா தீய சகுனங்கள் என்று பொருளாகிறது.

புத்தம்புதிய ரோஜாவைக் கண்டால், இதயத்தை மகிழ்ச்சியில் திக்குமுக்காடச் செய்யும் இன்பமான நிகழ்வொன்று நடைபெறப்போகிறதென்று பொருள். ஆனால் மங்கிப்போன ரோஜாவைக் கண்டால், பொய்யான செய்தியென அர்த்தம். மொட்டை கோபுரத்தை கண்டால் இதேபோல்தான் நடக்கும்.

பெசாமைன் என்ற மலரானது யாஸ் என்ற கைப்பிடியுடைய உலோகக் கலத்தை கண்டுவிட்டால் தான் கொண்டிருக்கும் உறவு முடிவுக்கு வந்துவிட்டதென்று பொருள். அபூ ஜால் {கடவுள் அவனை சபிக்கட்டும்} என்பவன் இதுபோன்ற முடிவுகள் இரவு நேரங்களிலேயே நடைபெறும் என்று அறிவித்துள்ளான் .

கூஜாவானது எல்லா வகை உறவுகளிலும் கயமையை சுட்டிக்காட்டும், அது ஒரு குழியிலோ அல்லது ஆற்றிலோ விழுந்து உடைந்துவிட்டால் அதிலுள்ள எல்லா துன்பதுயரங்களும் விடுபடும்.

அறுக்கப்பட்ட மரத்துண்டை கண்டால் நல்லசெய்தி என்று அர்த்தம்.

மைக்குடுவை மலட்டுத்தன்மையைப் போக்கும் வழியைச் சொல்லும். அது எரிந்து அல்லது உடைந்து அல்லது தொலைந்துபோனாலோ நேர்மாறான பொருள் என்று பொருள்.

தலைப்பாகை முகத்தின்மேல்விழுந்து கண்களை மூடிக்கொண்டால் பார்வை பறிபோகிறதென பொருள், கடவுள் அதிலிருந்து நம்மைக் காப்பாற்றட்டும்!

ஜன்னல்வழியே வெளியேறுவதுபோல் ஒருவன் கனவுகண்டால், அவன் நடத்தும் வியாபார நடவடிக்கைகள், அது முக்கியமோ அல்லது முக்கியத்துவம் அற்றவையோ, யாவற்றிலும் பெருத்த இலாபத்தை அடைவான் என்பதை அறிந்து கொள்க. அதேசமயம், கனவில் பார்க்கும் ஜன்னலானது குறுகியதாகத் தென்பட்டால், அதன்வழியே அவன் வெளியேறுவதற்கு கஷ்டப்பட்டால், அவன் வெற்றிபெறுவதற்கு கடினமாக உழைக்கவேண்டும் என்று பொருள்.

கசப்பான ஆரஞ்சுப்பழத்தைக் கண்டால் அதை கண்ட இடத்திலிருந்து மதிப்பைக் குறைக்கும் அவச்சொல் வருவது நிச்சயம்.

காரட் காய்கறியானது துன்பமும் துயரமும் வரப்போவதைக் கூறுகின்றது.

சிவப்புமுள்ளங்கியைக் கண்டால், அந்த மனிதன் கடந்தகாலத்தியதும் சென்றுவிட்டதுமான ஒரு விஷயத்தை, அதாவது அதில் மீண்டும் காணவேமுடியாது என்று பொருள். முள்ளங்கி பெரியதாக இருந்தால் விஷயமும் பெரிதானது என்று அர்த்தம். அதுவே சிறியதாக இருப்பின் முக்கியத்துவம் இல்லை என்று பொருள். சுருங்கச்சொல்லின், முள்ளங்கியின் அளவைப் பொறுத்து விஷயத்தின் விகிதாச்சாரம் வேறுபடும்.

வெடிக்காத கைத்துப்பாக்கியை கண்டுவிட்டால், இரகசியமாக சதித்திட்டம் நடைபெறுகிறதென பொருள். அதற்கு முக்கியத்துவம் தரவேண்டியதில்லை. ஆனால் அதுவே வெடித்துவிட்டதென்றால் அந்த இரகசியத்தை உணரும் காலம் வந்துவிட்டதென பொருள்.

நெருப்பைக் கண்டுவிட்டால் அதுவொரு தீயசகுனமே.

களிமண் கூஜா உடைந்துவிட்டால் கடவுளிடம் பாவமன்னிப்பு

கேட்டதெல்லாம் வீணாகிவிட்டதெனப் பொருள். அதேசமயம், அவன் மதுவருந்தும் கண்ணாடிக்கோப்பை உடைந்துவிட்டால் அவன் கடவுளிடம் திரும்பிவந்துவிட்டானென அர்த்தம்.

மாபெரும் விருந்தும் ஏராளமான உணவு வகைகளையும் கனவில் கண்டால், அதற்கு நேர்மாறான சூழ்நிலை உண்டாகப்போகிறதென அர்த்தம்.

யாரோ, வெளியே போய்க்கொண்டிருக்கும் பிறருக்கு விடையளிப்பதை ஒருவன் கனவில் காணநேர்ந்தால், அவனுடைய பயணம் இனிதாக நேரும்படி அவர்கள் வாழ்த்துக் கூறுகிறார்கள் என்று பொருள். இதுபற்றி கவிஞர் ஒருவர் பாடுகிறார்:

கொத்துமல்லி தனியாவானது, அல்குல் நல்லநிலையில் புணர்வதற்குத் தக உள்ளது என்று அர்த்தம் கூறுகிறது.

இந்த விஷயத்தைப்பற்றி கதை ஒன்று உள்ளது. சுல்தான் ஹரூன் ரஷித் என்பவர், தான் நெருங்கிப்பழகிய சில நபர்களோடு இருக்கையில், சடாரென்று எழுந்து தான் சந்தோஷிக்கவேண்டிய மனையாளுடன் உறவுகொள்ள அவர்களை விட்டுவிட்டுப் போனார். ஆயினும் ஏமாற்றம்! அவள், தன் மாதவிலக்கு காரணமாக அவர் திரும்பி தன் தோழர்களுடன் இருக்க வேண்டியதாயிற்று.

இப்போது சிலமணித் துளிகளுக்குப்பின் அந்தப் பெண், தன் விலக்கானது சரியாகிவிட்டதை அறிந்து உணர்ந்தாள். அதை நிச்சயப்படுத்திக்கொண்ட அவள் சுத்திசெய்து நீராடிவிட்டு, ஒரு நீக்ரோ பெண்ணிடம் தட்டில் தனியா விதைகளை வைத்து சுல்தானிடம் அனுப்பிவைத்தாள்.

ஹாரூன் ரஷித் தன் நண்பர்களோடு அமர்ந்திருந்தபொழுது அந்த நீக்ரோ இனப்பெண்ணும் அங்கே தட்டை எடுத்துக்கொண்டு வந்தாள். சுல்தானும் அதை எடுத்து ஆராய்ந்து பார்த்தார். ஆனால் தன் மனைவியானவள் அனுப்பிவைத்த அதனுடைய பொருளானது அவருக்குப் புரியவில்லை. கடைசியில், தன் புலவர்களில் ஒருவரிடம் அதைக் கொடுக்க, அவரும் அதை கவனமாக நோக்கி பின்வரும் செய்யுளை உரைத்தார்.

ரஷீத், தன் அறிவாற்றலைக் காட்டிய அந்தப் பெண்ணை நினைத்தும், அதில் உட்புகுந்த கவிஞனின் திறமையையும் எண்ணி வியந்துபோனார். ஆக, மர்மமான ஒன்று மறைந்திருப்பதும், அதை வெளிக்கொணரவைப்பதும் இவ்விடத்தில் புலப்படுகிறது.

உருவிய வாளானது போரின் அறிகுறியையும், அந்த வாளை

வைத்திருந்தால் போரில் வெற்றியும் தக்கவைக்கப்படும்.

கடிவாளத்தை கண்டுவிட்டால் கொடுங்கோன்மையும் அடிமைத்தளையும் நிச்சயம்.

நீளமான முகத்தாடியை கண்டுவிட்டால், நல்லகாலமும் செழிப்புத்தன்மையும் இருக்கிறது என்று பொருள். ஆனால் அதே தாடி, தரையை தொட்டிருந்தால் மரணம் நிகழப்போகிறதென பொருள்.

மற்றவர்கள் இதைப்போன்ற கருத்தை ஆமோதிப்பார்கள். அதாவது, ஒவ்வொரு மனிதனும் தனது தாடியின் நீளத்திற்கு தலைகீழாக அவனுடைய அறிவு இருக்கும். அதாவது, தாடி பெரியதாக இருப்பின் அறிவு மட்டமாக இருக்கும். இந்த விவகாரத்தில் கதையொன்று சொல்லப்படுகிறது. ஒரு மனிதன் நீளமான தாடி வைத்திருந்தான், அவன் ஒருநாள் புத்தகமொன்றைக் கண்டு அதன் பின்னட்டையில் எழுதப்பட்டிருந்த வாசகங்களை படிக்க நேர்ந்தது. "யாரொருவன் முகவாய்க்கட்டையானது நீளமான தாடியுடன் விளங்குகின்றதோ அவனுக்கு தாடி பெரியதாக இருப்பதால் அவன் முட்டாளாக அலைவது திண்ணம்." தான், தன் நண்பர்களால் முட்டாள் என அழைக்கப்படுவென்ற பயத்தால், மிகையாக இருந்த தாடியை எடுத்துவிட முடிவெடுத்துக்கொண்டு, அன்றிரவு தன் தாடியை ஒரு கையால் முகவாய்க்கட்டையருகே பிடித்துக்கொண்டு, அதன் நுனியை விளக்கின் தீயில் வைத்தான். நெருப்பானது தாடியில் பற்றி வெகுவிரைவில் அதன் வெப்பம் கையைச் சுடவே, அவன் கையை எடுத்துவிட மொத்த தாடியும் தீயில் எரிந்துவிட்டது. பிறகு அவன் மேற்கண்ட புத்தகத்தின் பின்னட்டையில் பின்வருமாறு எழுதினான். "இந்த வாசகங்கள் யாவும் உண்மையே. இதை எழுதும் நானே இதற்கு சாட்சி". இப்படியாக, அவன் தாடியின் நீளமே ஒருவனின் முட்டாள்தனத்தை வளர்க்கிறது என்ற முடிவுக்கு வந்து விட்டான்.

இந்த விஷயத்தில் மற்றொரு சம்பவமும் சொல்லப்படுகிறது. ஹாரூன் ரஷித் என்போர், தன் அங்கியில் இருந்திருந்தபோது, நீளமான தாடியைக் கொண்ட ஒரு மனிதனைச் சந்தித்தார். அவனை தன்முன் கொணரும்படி அவர் உத்தரவிட்டார். அவன் அவர் அருகே வந்ததும், அவனைப் பார்த்துக் கேட்டார்: "உன் பெயர் என்ன?" அந்த மனிதன் பதிலளித்தான். "அபு அரபோ". "உன்னுடைய தொழில் என்னவோ?" "நான் வாதப்பிரதிவாதங்களில் வல்லவன்."

ஹாரூன் அவனிடம் பின்வரும் வழக்கொன்றைச் சொன்னார்: ஒரு மனிதன் ஆண் ஆட்டை வாங்குகிறான். அது மலங்கழியவுள்ள நிலையில் உள்ளது, உடனே அது, அப்போதே மலங்கழித்து

வாங்கியவனின் கண்மேலே போய் அதை காயப்படுத்திவிடுகிறது. இதற்குண்டான அபராதத்தை செலுத்தவேண்டியது யாரோ? “விற்றவன்” என, சட்டென்று பதிலுரைத்தான் அபூ அரபோ. “ஏன்?” காலிஃப் கேள்வி கேட்டார். ”ஏனெனில் அதன் ஆசனவாயில் மலமுள்ளது என்று வாங்கியவரை எச்சரிக்க விற்றவர் தவறிவிட்டார்” என்று, அந்த மனிதன் பதிலளித்தான். இந்த வார்த்தைகளைக் கேட்டு உடல்நோக சிரித்த காலிஃப் பின்வரும் செய்யுளை உரைத்தார்.

பெரும்பாலான பெயர்களில் பலபெயர்கள் அதிர்ஷ்டத்தையும், சில துரதிர்ஷ்டத்தையும் அவற்றின் பொருளுக்கேற்ப கொண்டுவரும் என்று பெரும்பாலான ஆசிரியர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது.

அஹமது, முகமது, ஹமௌதானா, ஹமௌதனா இப்பெயர்கள் கனவுகளில் வந்தால், கொடுக்கல் வாங்கல்களில் அதிர்ஷ்டத்தைக் கொண்டுவரும். அலி மற்றும் அலியா இப்பெயர்கள் பதவியில் உயர்நிலை அடையப்போவதை தெரிவிக்கின்றது. நசீரொனா, நசீர், மன்சூர், நசீர் அல்லா முதலான பெயர்கள் எதிரிகளை வெற்றிகொள்ளப்போவதை குறித்தது. சலீம் சலீமா மற்றும் சலீமேன் முதலான பெயர்கள் எல்லா விஷயங்களிலும் வெற்றி என்பதைக் குறித்தது, தவிர ஆபத்திலிருப்பவரை காப்பாற்றுவதையும் குறித்தன. பேதா அல்லா பேதா வெற்றியை குறித்தன, அதிர்ஷ்டவசமான மற்ற எல்லாப் பொருள்களையும் குறிக்கும் மற்ற எல்லா பெயர்களைப்போல குறித்தன. இரேட் மற்றும் இராட் இப்பெயர்கள் இடிமின்னல் கொந்தளிப்பு மற்றும் இவைசார்ந்த பொருள்களைக் கூறுவன. அபூ எல் பெரொஜ் மற்றும் பெரஞ்ஜ் மகிழ்ச்சியைக் குறிப்பன. இரேனம் மற்றும் இரனீம் வெற்றியைக் குறிப்பன. கால்ஃப் அல்லா மற்றும் காலிஃப் இவை பொருளுக்குண்டான நஷ்டஈடையும், ஆசிர்வாதத்தையும் சொல்வன. அப்தர் ரசீ, ஹபீத், மெஹபாண்ட் முதலானவை உதவிகரமானவை. இலத்தீப் [இரக்கம்] மௌரிடஸ் [உதவி] ஹனைன் [கருணை] அஸீஸ் [அன்பு] இப்பெயர்கள் கூறும் பொருள்களானது, அவற்றிலேயே பொதிந்துள்ளது, இடர்பாடான சகுனங்களைக் கூறும் பெயர்களான எல் அவுர் எல் அவுரா ஆகியன கஷ்டமான நிலையைக் கொண்டுவரும்.

முன்கூறப்பட்ட உண்மைகளை நிரூபிக்கும்வகையில் நான், நமது தீர்க்கத்தரிசி (கடவுளின் அன்பும் இரக்கமும் அவர்பால் உண்டாகுவதாகுக) அவர்களின் வார்த்தைகளை இவ்விடத்தில் ஞாபகப்படுத்துகிறேன். உந்தன் கனவுகளில் வரும் பெயர்களின் அர்த்தங்களை நினைவுகூருங்கள். எனவே அவற்றின் முடிவுகளை

வரவேற்க இயலும்.

இந்த விஷயத்தைப்பற்றி மேலும் இங்கே உரைப்பது சாலச்சிறந்ததாக ஆகாது எனினும் இதைப்பற்றி மேலும் ஒரு வார்த்தை கூறிக்கொள்ள விரும்பினால் அதுமேற்கொண்டு வளர ஆரம்பிக்கும். எனவே, இந்த அத்தியாயத்தின் விஷயத்திற்கு, அதாவது ஆண்மகனின் காம உறுப்புகளின் பெயர்களுக்கு வருகிறேன்.

எல் ஏர் என்ற பெயரானது எல் கிர் (கருமானின் துருத்தி) என்ற பெயரிலிருந்து வரப்பெற்றது. ஆண் உறுப்பானது வீங்குவதும் பழையபடியே அந்நிலையிலிருந்து நீங்குவதும் நடக்கின்றது. அது வீங்கிவிட்டால் நிமிர்ந்து நிற்பதும், அது மூழ்காவிட்டால் தொங்கிப் போய்விடுவதும் நடக்கின்றது.

அது ஒரு ஹமாமா {புறா} என்றழைக்கப்படுகிறது. எப்படியெனில், அது விரைத்து நிற்கும்பொழுதில், புறாவானது தான் பொறித்த முட்டைகளின் மேலே அமர்ந்திருக்கும் காட்சியை நினைவுபடுத்துகின்றது.

கிங்கிணி: புணர்ச்சியின்போது அது யோனியின் உள்ளே நுழையும்போதோ அல்லது வெளியே வரும்போது இதுபோன்ற சப்தங்களை எழுப்புகின்றது.

வெல்லமுடியாதவன்: இதற்கு இந்தப் பெயர் வந்திருப்பது ஏனெனில், அது விரைத்தநிலையில் தன் தலையை நகர்த்தியபடி, நிதம்பத்தின் வாயிலைத் தேடியலைந்து பின் கண்டுபிடித்து, அதன்பின் துடுக்குடன் உள்நுழைந்து, பிறகு வெளியே செல்வேன் எனச் சொல்லாது.

போராளி: இப்பெயர் கொண்டு இது அழைக்கப்படுவதற்குக் காரணம் யாதெனில், ஒரு பெண்ணின் அல்குலை மூன்றுமுறை குடைந்து அவளுக்கு தன் முதல் கணவனை அடையும் சுதந்திரம் தருவதால் இப்பெயர் கொண்டது.

விளிம்பில் நிற்பவன்: இது டெவ்பூ என்ற ஊடுருபவன் என்ற வார்த்தையிலிருந்து வந்தது. இந்தப் பெயர் ஆணுறுப்புக்கு வழங்கப்படுகிறது. காரணம், அது பெண்ணின் தொடைகளைத் தடவிக்கொண்டே, நிதம்பத்தின் திரட்சியை அனுபவித்து, திரும்பவும் தொடைகளைத் தடவி, யோனியின் மேல்பக்கத்தைத் தடவி பின், அதன் வாயிலை அணுகி அதில் தடவி தன்னை வசதியாக நிலைநிறுத்திக்கொண்டதும், வாயிலின் உள்ளே ஊடுருவி அதனுள்ளே கசிவைச் சிந்துகிறது.

தூண்டுபவன்: இது நிதம்பத்தின் எண்ணிறைந்த முறைகள் போவதும்வருவதுமாக இருந்து நிதம்பத்தைத் தூண்டுவதால் இப்பெயர்

பெற்றது.

ஏமாற்றுபவன்: இது தந்திரமும் ஏமாற்றுத்தனமும் கொண்டிருப்பதால் இப்பெயரைப் பெற்றது. அதனுடைய பாவமே பொய்யைக் காட்டுகின்றது. யாரேனும் ஒருவரை பத்தலேக் என்றழைப்பின் அவர் ஒரு பொய்யர் என பொருள்படும். அவர் புணர்ச்சியை விரும்புங்கால் இப்படிக் கூறுவார்.

ஒரு பெண்ணின் அருகே வந்து திரும்பவும் அது விரைப்படைந்ததும், அது யோனியிடம் இவ்விதம் கூறும்: “எந்தன் ஆத்மாவே! இன்று என் விருப்பமெனும் தாகத்தை உன்னுடன் தணித்துக்கொள்ளப் போகிறேன்.” அல்குலானது அது விரைப்படைந்து உறுதியாக நிற்பதைக் கண்டு, அதன் நீள அகலங்களைக் கண்டு வியந்து, இவ்விதம்கூறும்: “இதுபோன்ற சிசினத்தை யார்தான் உள்வாங்குவர்?” மேற்கொண்டு பதில் பேசும்முன், அது தன் தலையை நிதம்பத்தின் இதழ்களில் தேய்த்து, வாயைப் பிளந்து பின் அடியாழம்வரை ஊடுருவும். அது அசையத்தொடங்கும் வேளையில் யோனியானது அதைக் கேலிசெய்து இவ்வாறு கூறும்: “உனது அசைவுகள் எத்தகைய வஞ்சகத்தன்மையுடையதாக உள்ளது!” இது சொல்லப்பட்டு நெடுநேரம் கழித்து அது பின்வாங்கும். அப்போது இரண்டு விதைப்பைகள் ஒன்றோடு ஒன்று பேசிக்கொள்ளும்: “நமது உறுப்பானது செத்துப்போனது, அது இன்பத்தை பெற்றபிறகு கீழடங்கியது, சுகத்தை உறிந்து தாகமடங்கி, விந்துவை வெளியே கொட்டியபின் செத்துப்போனது!” உறுப்பானது துரிதமாக யோனியின் வெளியே வந்தபின், தன் தலையை நிமிர்த்த முயற்சிக்கும். ஆனால் அது மென்மையாக, மந்தமாகத் தென்படும். விதைப்பைகள் மற்றுமொருமுறை கூறும்: “நம் சகோதரன் இறந்துவிட்டான், நம் சகோதரன் இறந்துவிட்டான்.” ஆனால் ஆணுறுப்போ அதை மறுத்து அதுபோல் நிகழவில்லை எனக் கூறும். ஆனால் நிதம்பமானது கூக்குரலிடும்: “நீ எதற்காகப் பின்வாங்கினாய்? பொய்யனே! நீ உள்ளே வந்தபின் மறுபடியும் வெளியே வரமாட்டாய் என்றுதானே கூறினாய்.”

தூங்குபவன்: அதன் ஏமாற்றுத்தனமான தோற்றத்திலிருந்து இப்பெயரைப் பெற்றது. அது விரைப்படைந்தபிறகு அதன் நீளத்தையும் பருமனையும் கண்டவர்கள் திரும்பவும் அது தொங்கிப்போகாது எனக் கூறுவர். ஆனால் அது அல்குலை விட்டு நீங்கியபின், தன் விருப்பத்தை தணித்துக்கொண்டபின் உறக்கத்திலாழ்ந்துவிடும்.

நிதம்பத்தின் உள்ளே உறக்கத்தில் ஆழ்ந்துவிடும் உறுப்புகளும் உண்டு. ஆனால் பெரும்பாலானவை உறுதியாக வெளியேவரும். ஆனால்

வெளியேவந்து மயக்கத்தில் அவை படிப்படியாக உறக்கத்தில் ஆழ்ந்துவிடும்.

நெம்புகோலன்: இது அல்குலை சந்தித்ததும், அது இதனை உள்ளே ஏற்றுக்கொள்ளாமல் முரண்டுபிடித்தால், அது தன் தலையால் வாயிலை மோதி, பழகிய பாதையில் போகும் காட்டுவிலங்கைப்போல், தடுக்கும் யாவற்றையும் உடைத்து கிழித்து முன்னேறுவதால் இப்பெயர் பெற்றது.

தையற்காரன்: இப்பெயர் இவ்வாறு பெற்றது எவ்வாறெனில், குறிப்பிட்டதொரு சூழ்நிலையில் அது, நிதம்பத்தின் உள்ளே நுழையாமல், தையற்காரன் கையில் இருக்கும் ஊசிபோல் வாயிலை தடவிக்கொண்டே தேய்த்துக்கொண்டே இருக்கும். பிற்பாடு போதுமான அளவுக்கு விரைப்படைந்தபின்னே அது உள்ளே நுழையும்.

மோகத்தை அணைப்பவன்: ஒரு ஆணுறுப்பு பெரியதாக, உறுதியாக மற்றும் விந்துவை வெளியிடுவதில் மெள்ளமாக இருந்தால் அதற்கு இந்தப் பெயர் வழங்கப்படும். இதுபோன்றதொரு உறுப்பு, பெருத்த மோகங்கொண்ட பெண்ணையும் திருப்திப்படுத்தும். அப்பெண்ணை உச்சப்பட்ச காமத்தில் கொண்டுசெல்லும் அது வேறெந்த உறுப்புகளைக் காட்டிலும் எளிதாக திருப்திப்படுத்தக்கூடியது. அதேபோல், அந்த ஆண்மகனையும் சாந்தப்படுத்தக்கூடியது. அது நிதம்பத்தின் உள்ளே நுழைய, வாயிலுக்கு அருகே வரும்போது அது மூடப்பட்டிருப்பதுகண்டு புலம்பி, கெஞ்சி, மன்றாடி, சத்தியம் செய்யும். “ஐயோ என் காதலே! என்னை உள்ளே வர விடு, நான் அதிகநேரம் தங்கமாட்டேன்.” அதற்கு உள்ளே நுழைய அனுமதி கிடைத்ததும், தான் சொன்ன வார்த்தைகளை முறித்துக்கொண்டு, நீண்டநெடுநேரம் தங்கி, வெளியே வராமல் தன் விருப்பத்தை பூர்த்தி செய்துகொண்டு, விந்துவை வெளியே சிந்தி, போவதும்வருவதுமாக தன் தலையை நிமிர்த்தியும் குனிந்தும், இடமும் வலமுமாக குடைந்தெடுக்கும். உடனே நிதம்பம் மறுத்துக்கூறும்,: “ஏமாற்றுக்காரா! உன்னுடைய வார்த்தைகள் என்னவாயிற்று?” அவள் கூறுவாள்: “நீ சற்றுநேரந்தான் தாக்குப்பிடிப்பாய் என்று சொன்னாயே.” அதற்கு ஆணுறுப்பானது பதில் கூறும்: “நிச்சயமாக! உந்தன் கருவின் வாசலைத் தொடும்வரை நான் பின்வாங்கமாட்டேன். ஆனால் அதை தொட்டுவிட்ட பின், கூடிக் குலாவிட்டு, அதன்பிறகே வருவேன்.” இந்த வார்த்தைகளைக் கேட்டு நிதம்பமானது அதன்மேல் இரக்கங்கொண்டு, தன் கருவறையை தீண்ட அனுமதித்து, அதை வணங்குவதுபோல் அணைத்தும் முத்தமிடவும் செய்யும். பிற்பாடு உறுப்பானது சாந்தப்பட்டு பின்வாங்கும்.

திரும்புவோன்: இந்தப் பெயர் எப்படி வந்தது எனில், உறுப்பானது

அல்குலின் வாசலுக்கு வந்தபின்னால், முக்கிய வேலையாக வந்தாற்போல் பாசாங்கு செய்து, கதவைத் தட்டும், எங்கெங்கிலும் திரும்பும், வெட்கமோ நாணமோ இன்றி, இடது வலது மூலைகளில் திரும்பும், முன்னும்பின்னுமாக நீந்தும், பிறகே நிதம்பத்தின் அடிஆழம்வரை சென்று விந்துவை கக்கும்.

தாக்குபவன்: அது பெண்ணின் அகலுக்கு அருகே வந்ததும், நிதம்பத்தின் கதவை மெல்லத் தட்டும். நிதம்பம் கதவைத் திறந்தால் உள்ளே நுழையும். ஆனால் கதவைத்தட்டி பதில் இல்லாமல்போனால், தான் உள்ளே நுழையும்வரை கதவை தட்டிக்கொண்டே இருக்கும். ஒரு பணக்காரர் வீட்டில் விருந்துக்கு வந்திருப்பவன் இவ்வாறே கதவை தட்டிக்கொண்டு இருப்பான். அது திறந்தால் அவன் உள்ளே நுழைவான். ஆனால் அவன் தட்டலுக்கு பதில் இல்லையென்றால், கதவு திறக்கும்வரை அவன் திரும்பத்திரும்ப தட்டிக்கொண்டே இருப்பான். இதேபோல்தான் தாக்குபவனும் நிதம்பத்தின் வாசலை தட்டிக்கொண்டே இருப்பான்.

கதவைத் தட்டுதல் என்பது நிதம்பத்தின் வாயிலில் அது வழவழப்பாக ஆகும்வரை ஆணுறுப்பைத் தேய்ப்பது. இவ்வாறு சுரக்கும் அந்த வழவழப்பு மன்மதநீரே கதவைத் திறப்பது என்று பொருள் கொள்வது.

நீந்துபவன்: இது நிதம்பத்தின் உள்ளே நுழைந்தபின் தோதான இடத்தில் தங்காமல், அதற்கு நேர்மாறாக வலதுபுறமாகத் திரும்பும், இடதுபுறமாகத் திரும்பும், முன்னே பாயும், பின்னுக்கு வரும், பிறகு தான் சிந்திய விந்துவில் நீந்தி நிதம்பம் கக்கும் திரவத்தில் மிதந்து, அதில் மூழ்கிப் போய்விடுவோமோ என்று பயந்து தன்னை பாதுகாத்துக்கொள்ள முயற்சிக்கும்.

வீட்டை உடைப்பவன்: இந்தப் பெயரை பெற்றது இவ்வாறு: அது நிதம்பத்தின் கதவைத் தட்டும்போது நிதம்பம் கேட்கும், “உனக்கென்ன வேண்டும்?” “எனக்கு உள்ளே வரவேண்டும்!” “நடவாது! ‘‘உந்தன் பெரு அளவை கருத்தில் கொண்டால் உன்னை உள்ளே விடமுடியாது.” பிறகு அந்த உறுப்பானது, தான் முழுவதும் உள்ளே வரமாட்டேன் என்றும் தன் தலையை மட்டும் அனுமதித்தால் போதுமானது என்றும் சத்தியமிடும். பிறகு அது வாசலை அணுகி, தன் தலையால் காமரசம் ஊறி வழவழப்பாக ஆகும்வரை அதன் இதழ்களை இருமுறையோ அல்லது மூன்று முறையோ உரசி, பின் தலையை நுழைத்து ஒரேகுத்தில் விதைப்பை வரைக்கும் மூழ்கிவிடும்.

கோழை: இதற்கு இந்தப் பெயர் வரக்காரணம் யாதெனில், புணர்ச்சியின்போது தன்னைக் கவர்ந்துகொள்ள விரும்பும் நிதம்பத்தின்

வாசலருகே வரும்போது, வெப்பங்கொண்டும் மோகங்கொண்டும் இருக்கும் நிதம்பம் அதனிடம் உரைக்கும். "வா! ஆனால் ஒரு நிபந்தனை, அது என்னவெனில் என்னுள்ளே பன்முறை விந்துவை சிந்தியபின்னரே நீ வெளியே வரவேண்டும்." "நீ அதனை கூறும்முன்னரே மூன்றுமுறை உன்னுள் விந்துவை வெளியேவிடுவேன்." அது உள்ளே நுழைந்தபின் நிதம்பத்தின் உச்சபட்ச வெப்பமானது சுகத்தை பன்முறை அதிகரிக்கும். உறுப்பானது முன்பின்னும் சென்று, நிதம்பத்தின் இதழ்கள் மற்றும் கருவறையின் வாசலில், சுகபோக இன்பத்தில் பன்முறை தேய்க்கும். பிறகு விந்து வெளியேறியவுடன் அதுவும் வெளியேற முயற்சிக்கும். உடனே நிதம்பம் கூவும், "பொய்யனே எதற்காக வெளியேறுகிறாய்? ஆக, நீ கோழை என்றும் பொய்யென்றும் அழைக்கப்படுவாய்."

ஒற்றைக்கண்ணன்: ஏனெனில் இதற்கு ஒரு கண்ணே உள்ளது. இந்தக் கண் மற்ற கண்களைப் போலில்லை மற்றும் இதனால் தெளிவாகப் பார்க்க இயலாது.

வழுக்கைத்தலையன்: ஏனெனில், இதன் தலைப்பகுதியில் முடிகள் ஏதும் கிடையாது, அதனால் அது வழுக்கையாளனாக காட்சிதரும்.

ஒற்றைக்கண்ணுடையவன்: இது வினோதமாக பாப்பாவோ அல்லது இமைகளோ இல்லாது ஒற்றைக்கண்ணாக இருப்பதால் இப்பெயரைப் பெற்றது.

தடுமாறுபவன்: நிதம்பத்தின் உள்ளே ஊடுருவ முயன்று, கதவைக் காணாமல் மேலும் கீழும் தட்டிக்கொண்டே, சாலையில் கல்லால் தடுக்கப்படுபவன்போல் தடுமாறிக்கொண்டே, பிறகு நிதம்பத்தின் இதழ்கள் வழவழப்பாக ஆனதுகண்டு பிறகு உள்ளே புகும். பிறகு அல்குலானது கேட்கும், "என்ன இந்தளவு தடுமாறிக்கொண்டே உள்ளே நுழைகிறாய்?" சிசினம் பதில் கூறும்: "எந்தன் காதலே! சாலையில் இருந்த கல்லால்தான் இந்த தடுமாற்றம்."

விந்தை தலையுடையவன்: மற்றெல்லா தலைகளைக் காட்டிலும் இவன் வித்தியாசமான தலையை உடையவன்.

கழுத்தை உடையவன்: குறுகிய கழுத்து, நன்றாக வளர்ந்த தொண்டை, முடிவில் நல்ல பருமன், வழுக்கைத் தலை, அத்துடன் தொப்புளிலிருந்து இலிங்கம்வரை தடிப்பான முரட்டு மயிர் கொண்டிருப்பவன்.

முடி அடர்ந்தவன் அதாவது காடளவு முடி நிறைந்தவன்: இது ஏராளமாக முடி நிறைந்திருப்பதால் இந்தப் பெயரைப் பெற்றது.

ஆணவமானவன்: இது எப்படி இந்தப் பெயரை பெற்றதெனில், நீளமாகவும் உறுதியாகவும் ஆனபின்னால், எவரையும்

சட்டைசெய்யாது. அது, தன் தலையை சூரத்துடன் உயர்த்துவதன்மூலம் தன் எஜமானனின் ஆடையை ஆணவமாக உயர்த்துவான். அதேநேரம் எஜமானன் வெட்கங்கொள்ள, இவனோ வெட்கப்படமாட்டான். இதேபோல்தான் பெண்களிடமும் வெட்கமின்றி, அவர்களது ஆடைகளைத் தூக்கி தொடைகளைத் தடவும். அவன், தன் எஜமானன் இந்தச் செய்கையினால் வெட்கமடைய அவனோ, தன் உறுதியினால் விரைப்பினால் நிதம்பத்தின் உள்ளே மூழ்க, இன்னும் விரைப்படையும்.

வெட்கங்கொண்டவன்: இந்தவகையான உறுப்பு சிலசமயங்களில், இதற்குமுன்பு பார்த்தறியாத நிதம்பத்தை பார்க்கும்போது, வெட்கப்பட்டு, கொஞ்சநேரம் கழித்தே தடிமனாகி விரைப்படையும். பிறிதொரு சமயங்களில் அந்நியர் எவராவது இருந்தால் எழக்கூட எழமால் செத்துப்போயிருக்கும்.

அழுபவன்: அடிக்கடி இது விந்துத்துளிகளை சிந்துவதால் இந்தப் பெயர் பெற்றது. இது விரைத்துக்கொண்டு நிமிரும்போது அழும். அழகான முகத்தைக் கண்டால் அழும். ஒரு பெண்ணை கைக்கொண்டால் அழும். இது தனிமையில் இருக்கும்போதுகூட நினைத்துக்கொண்டால் அழும்.

குடைபவன்: நிதம்பத்தில் ஊடுருவிப்பாய்ந்த வேளையில், தன் விருப்பம் நிறைவேறும்வரையில் அங்கேயும் இங்கேயும் குடைந்தெடுப்பதால் இந்தப் பெயரை பெற்றது.

ஒன்றானவன்: இது நிதம்பத்தில் நுழைந்தபிறகு, தன்னுடைய முடியும் நிதம்பத்தின் முடியும் ஒன்றாக சேரும்வரை உள்ளே நுழைகிறது, அதனினும் தன் விதைப்பைகளை உள்ளே செலுத்தவும் முயற்சிக்கும்.

சளிநீக்குபவன்: இந்தப் பெயர் எதற்காக உண்டானது எனில், அது நிதம்பத்தின் அருகில் வருகையிலே அல்லது அதனுடைய உரிமையாளன் ஒரு பெண்ணை தொடும்போதோ அல்லது விளையாடும் அல்லது அவளை முத்தமிடும்போதோ, அதில் சளிபோன்ற பொருள் உருவாகி, அதன் கண்ணில் நீரரும்பும். இந்த சளிபோன்ற திரவமானது, வேலைசெய்ய சிறந்தபொருளாக உள்ளது, அது தன்னுடைய உரிமையாளரின் ஆடையைக்கூட சிலசமயங்களில் நனைத்துவிடும். இதுபோன்றதொரு உறுப்பு பொதுவானதாகும். சில நபர்களுக்கு இதுபோல வாய்ப்பதில்லை.

இது சுரக்கும் திரவமானது மெதி என வழக்கறிஞர்களால் உரைக்கப்படுவது. தடவுதல் மற்றும் அணைத்தல் தவிர காமம்சார்ந்த எண்ணங்களால் இந்த திரவம் உற்பத்தியாகின்றது. சில நபர்களிடம் இந்த திரவம் நிதம்பத்தை நிரப்பும் அளவுக்கு அதிகமாக சுரந்துவிடும். ஆனால் நிதம்பத்தில் இருந்து ஊறுவதாக தவறாக

நினைத்துக்கொள்ளப்படுவதுண்டு.

வெட்டுபவன்: சாறுநிறைந்த யோனியில் இது நுழையும்போது, ஏரியின் அலைகளைப் பிளந்து சப்திப்பதுபோல சப்தம் உண்டாக்குகிறது.

கோலாலன்: இந்த உறுப்பானது பெயருக்கேற்றாற்போல் நீளமாகவும் உறுதியாகவும் இருந்து பெரியதாக, குண்டாந்தடி அல்லது பெரிய எலும்புபோலிருக்கும். இது கன்னிப்பெண்களின் நிதம்பத்தின் கன்னித்திரையை கிழித்து அதிலிருந்து பெருமளவு இரத்தத்தை வரவழைப்பதால் இந்தப் பெயர் பெற்றது.

தேடுபவன்: பழக்கத்தோஷத்தின் காரணமாக நிதம்பத்தின் உள்ளே எல்லாதிசைகளிலும் எதையோ ஒன்றைத்தேடும், அது கர்ப்பப்பையின் வாசல். அதைக் காணும்வரை அதற்கு ஓய்வே கிடையாது.

தேய்ப்பவன்: இதற்கு இந்தப் பெயர் எப்படி வந்தது எனில், இது யோனியில் நுழையும்முன் நிதம்பத்தின் வாசலிலும் வயிற்றின் அடிப்பகுதியிலும் தன் தலையை பன்முறை தேய்க்கும். அது அடிக்கடி அதுதான் வாயிலென குழம்பும்.

தொங்கிப்போனவன்: இது யோனியின் உள்ளே நுழையாது. காரணம் என்னவெனில் அது படுமென்மையாக இருந்து, நிதம்பத்தின் வாசலில் தன் தலையை தேய்த்து, அங்கேயே விந்தை கக்கிவிடும். இது பெண்களுக்கு எவ்வித இன்பத்தையும் தராது, ஆனால் அவளுடைய மோக ஆவேசத்தை பிரம்மாண்டமாக எரியச்செய்து, அதேசமயம் அவளுக்கு எவ்வித திருப்தியும் தராமல், அவளை எரிச்சலடையச்செய்யும்.

சூறையாடுபவன்: இவ்வித பெயர்க்காரணம் வர யாதெனில், அது வழக்கத்திற்கு மாறான இடங்களிலெல்லாம் ஊடுருவும், நிதம்பத்தின் முழுநிலையையும் புரிந்துகொள்ளும், அதனுடைய தகுதிகளையும் குறைகளையும் நன்கு எடுத்துரைக்கும்.

கண்டுபிடிப்பாளன்: அது தன் தலையை நிமிர்த்தி உயரும்போது, தன்னை மறைத்திருக்கும் ஆடையைக் களையும், தன் உரிமையாளனை நிர்வாணப்படுத்தும் மற்றும் தான் இதுவரை அறியாத நிதம்பங்களை காணும்போது அச்சமுறாது, தவிர வெட்கமின்றி அவற்றை மறைக்கும் ஆடைகளை உயர்த்தும். இதற்கு வெட்க உணர்ச்சியே கிடையாது, எதற்கும் கவலைப்படாது மற்றும் எதற்கும் மரியாதை தராது.

விரைத்திருக்கும் உறுப்புகளுக்கு அவற்றின் தகுதிகளுக்கேற்ப பெயர்களைக் கொடுத்தாயிற்று. இந்தப் பெயர்களின் எண்ணிக்கை போதாது என்று நினைப்பவர்கள் வேறு எங்காவது தேடிக்கொள்ளலாம்;

ஆனால் என் வாசகர்களை திருப்திபடுத்தும் அளவுக்கு நான் தந்துவிட்டேன் என்றே நினைக்கின்றேன்.

அத்தியாயம்—XI

# பெண்களின் காம உறுப்புகளுக்கு வழங்கப்படும் பெயர்கள்

பிளவுடையாள்

யோனியாள்

சிற்றின்பகரத்தாள்

கற்காலத்தவள்

பறவை இனத்தாள்

ஓசை தருபவள்

உச்சியை உடையாள்

சிறு மூக்கு கொண்டவள்

முள்ளம் பன்றியாள்

அமைதியானவள்

நொறுக்குபவள்

தொல்லை தருபவள்

நீர் பாத்திரத்தாள்

பயங்கரமானவள்

ஆழ் விருப்பத்தாள்

அழகானவள்

வீங்குபவள்

துருத்திக் கொண்டிருப்பவள்

பரந்திருப்பவள்

பெரியதானவள்

பசி மிகுந்திருப்பவள்

அடிபீடமில்லாதவள்

இரட்டை இதழுடையாள்

சல்லடையாள்

ஓய்வறியாதவள்

பிணைப்பவள்

இடம் தருபவள்

உதவுபவள்

பாதுகாக்கபட்டவள்

நீளமானவள்

போட்டிக்குத் தயாராக இருப்பவள்

தப்பியோடுபவள்

இராஜினமா செய்பவள்

சாறு நிறைந்தவள்

ஆழமானவள்

கடிப்பவள்

உறிஞ்சுபவள்

குளவியாள்

வெப்பமானவள்

சுவையானவள்.

ஒரு பெண்குதிரை ஆண்குதிரையை புணர்ச்சிக்காக அணுகுகிறாற்போல, வெப்பத்தால் தகிக்கப்பட்டு புணர்ச்சிக்காக ஏங்கும்பொழுது இது அடிக்கடி திறந்துமூடுவதால் நிதம்பமானது பிளவுடையாள் எனப் பெயர் பெற்றது. ஆயினும் இந்த வார்த்தையானது ஆண்-பெண் இருபாலரின் உறுப்புகளுக்கும் கண்மூடித்தனமாக பயன்படுத்தப்படுகிறது, எல்லாம்வல்ல கடவுள் திருக்குரான் அத்தியாயம் xxxiii –ல் இதைச் சொல்லியுள்ளார். பெஃருயுட்ஜ் அதாவது, பிளவு இதன் சரியான பொருள் திறப்பு அல்லது வழி என்பதாகும். மக்கள், நான் மலையூடே ஒரு பெஃருயுட்ஜ்-ஐக் கண்டேன். அதாவது, வழியைக் கண்டேன் என்பார்கள்.

பெண்ணின் நிதம்பத்தை கனவில் காணும் ஆண்மகன், தான் ஏதேனும் சிக்கலில் மாட்டியிருந்தால் கடவுள் அவனை மீட்டெடுப்பார் என்று அறிவானாகுக; அவன் குழப்பத்தில் ஆழ்ந்திருந்தால் விரைவில் அதிலிருந்து மீளுவானகுக. கடைசியாக அவன் வறுமையில் இருந்தால் விரைவில் அதிலிருந்து விடுபடுவான் ஏனெனில் பெஃருயுட்ஜ் என்பது அதன் தொழிலாகு பெயரைக் கடத்துவதால் அதன் பொருள் தீமையிலிருந்து விடுபடுவது என்று பொருளாகிறது. இதேபோல்

அவனுக்கு ஏதேனும் பொருள் வேண்டுமானால் அவன் விரைவில் அதை பெற்றுவிடுவான்; அவனுக்கு கடன் தொல்லை இருந்தால் கூடியவிரைவில் அதை அடைத்துவிடுவான்.

நிதம்பம் திறந்திருப்பதைக் காணும் கனவானது அதிர்ஷ்டகரமானது எனக் கருதப்படுகிறது. ஆனால் காணுகின்ற யோனியானது ஒரு இளம்கன்னியுடையதாக இருந்து அது மூடப்பட்டதாக இருப்பின், அவன் விரும்புகின்ற பொருளை பெறமுடியாது. ஆண்களால் தொட்டுக்கூடப்பார்க்காத கன்னியின் நிதம்பத்தை கனவில் காணும் ஆண் மகன் நிச்சயமாக சிக்கலில் மாட்டிக்கொள்வான் என பல சங்கதிகளில் நிரூபணம் ஆகியுள்ளது. அவனுடைய காரியங்களில் அவன் அதிர்ஷ்டங்கெட்டவனாவான். ஆனால் யோனியானது திறந்திருப்பின் அதனை அவன் நன்கு பார்க்கமுடிந்தால், அது மறைக்கப்பட்டிருந்தாலும், அதனுள்ளே சுலபமாக அவனால் நுழையமுடிந்தால், அவனால் கடினமான காரியங்களை வெற்றிகரமாக முடிக்க இயலும், ஆனால் முதல்தடவை அதில் தோற்றுப்போனாலும், சற்று தாமதத்திற்குப்பிறகு, தான் நினைத்துப்பார்க்கவே இயலாத நபரானவர் அவன் தன் உதவிக்கு வருவார்.

தன் கனவில், ஒரு இளம்பெண்ணை ஒரு ஆண் ஆனவன் சரசமாடுவதைபோல் யாரொருவன் காணுகிறாரோ, சரசமாடும் மனிதன் அந்தப் பெண்ணின் நிதம்பத்தை அச்சமயத்தில் பார்க்கின்றாரோ, அப்போது கனவுகாணும் அந்த நபருக்கு வியாபாரம் வெற்றியைக் கொடுக்கும், ஆனால் முதல்முயற்சியில் தோற்றுவிட்டாலும், கனவில் பார்த்த அந்த மனிதனே உதவிக்கு வருவான். இப்போது கனவுகாணும் மனிதனே அந்த இள்ம்பெண்ணுடன் உறவாடுகிறான், அவனே அவள் நிதம்பத்தைப் பார்க்கிறான் என்றால், அப்போது அவன் எடுத்துக்கொண்ட பணிகளில் எல்லாம், அவற்றின் கடுமையை உணர்ந்து வெற்றிபெறுவான் என்று பொருள். பொதுவாகச் சொன்னால் கனவில் யோனியைப் பார்ப்பது நல்ல சகுனம், புணர்ச்சியை பார்ப்பதும் நல்ல சகுனம்; ஒருவன் தன்கனவில் தானே புணர்ச்சியில் இயங்குவதைப்போலவும், தன் விந்துவை வெளியேற்றுவதைப்போலவும் கண்டால், தன் காரியங்களில் வெற்றிபெறுவான் என்று பொருள். ஆனால் புணர்ச்சியைத் தொடங்கி அதை முடிக்காமல் விடுபவனின் சங்கதியில் மேற்கண்ட கூற்று பொருந்தாது. அதேநேரம் அவன் எடுத்துக்கொண்ட காரியங்களில் தோற்றுப்போவான் என்பது கண்கூடு.

ஒரு பெண்ணுடன் சரசமாடுவதைப் போல கனவுகாணும் மனிதன்,

பிற்பாடு நிஜத்தில் அவளிடமிருந்து தனக்கு வேண்டுமான பொருளை பெற்றுக்கொள்வான் என்பது நிஜம்.

மதத்தால் தடைசெய்யப்பட்ட உறவுமுறைகளை கனவில் புணர்கின்றவன், உதாரணத்திற்கு, அவனுடைய அம்மா சகோதரி முதலானவர்கள், தான் புனிதமான இடங்களுக்கு செல்லப்போவதின் அறிகுறி என்பதை புரிந்துகொள்ளலாம். ஒருவேளை புனிதமான கடவுளின் இருப்பிடத்திற்கு போகலாம் மற்றும் தீர்க்கத்தரிசியின் கல்லறையைக் காணலாம்.

விரைத்திருக்கும் ஆண்குறியைப் பொறுத்தவரை, கனவில் அதற்கு விபத்து நடப்பதாகக் கண்டால், தன் குலம் மொத்தமும் அழியப்போவதின் அறிகுறி என்பது முன்னமே சொல்லப்பட்டுள்ளது.

தனக்கு அமீர் அவர்கள் கால்சராய்கள் தருவதாக ஒருவன் கனவுகண்டால் அவன் காதியாக ஆவான். கால்சராய்களை கனவில் கண்டால் அது அவனது உறுப்புகள் பாதுகாப்பாக இருப்பதைச் சொல்லும், மற்றும் வியாபாரத்தில் அவன் வெற்றிமேல் வெற்றி அடையப்போவதை குறிப்பால் உணர்த்தும்.

பாதாம் பருப்பை கனவில் காணும் பிரச்சனைகளுக்கு உள்ளாகியுள்ள ஆண்மகன் கூடியவிரைவில் அவற்றிலிருந்து விடுபடப்போகிறான் என்று பொருள். நோயுற்ற மனிதன் ஆரோக்கியமாவான். கூடியவிரைவில் துன்பங்களிலிருந்து விடுபடப்போகிறான் என்று பொருள்; ஒரு மனிதன் பாதாம்கொட்டைகளை தின்றுகொண்டிருப்பதாகக் கனவுகண்டு, அதற்கென்ன பொருளென்று ஒரு அறிவாளியைக் கேட்க, அவனுடைய துன்பங்களெல்லாம் மறையப்போகிறது என்று பொருள் என்று அவர் சொன்னார்.

கனவில் வரும் கடைவாய்ப்பல் எதிரி அல்லது பகைமையை குறிக்கும். அவ்வாறெனில், ஒரு மனிதன் தன் கடைவாய்ப்பல் விழுந்ததாக கனவில் கண்டுவிட்டால் அவனது பகைமை அல்லது பகைவன் ஒழிந்துபட்டான் என்று அர்த்தம். இது டெரஸ் என்ற சொல்லிலிருந்து வந்து, பகைவனையும் கடைவாய்ப்பல்லையும் ஒருங்கே குறிக்கின்றது, எனவே ஒருவன், ‘‘அது எனது பல்லாகும் மற்றும் எனது பகைவனாகும்’’ என்று கூறலாம்.

ஜன்னல் மற்றும் செருப்பு முதலியன உம்மையும் பெண்ணையும் குறிப்பன. இது உண்மையில் யோனியை அதாவது அதன் விளிம்புகளை ஆக்ரமிக்கும் தருணத்தைக் குறித்தன, ஒரு மனிதனாவன் உள்ளே நிகழ்வதைக் காண ஜன்னலில் தலையை வைத்துப் பார்க்கும்பொழுது, அல்லது செருப்பை அணிகின்றாற்போல் கனவுகாணும்பொழுது இந்தச்

செய்கை நடைபெறும். இதேபோல்தான் ஒரு ஆண்மகன் ஜன்னலில் இருப்பதுபோல் அல்லது செருப்பை அணிகின்றதுபோல் கனவுகண்டால் அவன் ஒரு இளம்பெண்ணை அல்லது அவளது நிதம்பத்தை பெறப்போகிறான் எனப் பொருள், அந்த ஜன்னலானது புதிதாக கட்டப்பட்டிருந்தால் அல்லது காலணி புதிதாக நல்லநிலையில் இருந்தால் அவன் அடையப்போகும் பெண்ணும் இளமையாக இருப்பாளென அர்த்தம் அல்லது ஜன்னலோ காலணியோ சற்று பழையதாக இருந்தால் அதற்குத்தக அப்பெண்ணும் வயதானவளாக இருப்பாள் எனப் பொருள்.

காலணி தொலைந்துபோனதாகக் கனவு கண்டால் அவன் மனைவி தொலைகின்றாள் எனப் பொருள்.

ஏதேனும் மடித்து வைக்கப்பட்டிருப்பதைக் கண்டு அது மீண்டும் திறக்கப்படுவதைக் கண்டால், ஏதோ இரகசியம் பகிரங்கமாக தெரியப்போகிறது எனப் பொருள். ஆனால் மடித்த பொருளானது மடித்தவாறு இருப்பதை கனவுகண்டால் இரகசியமும் அவ்வாறே பாதுகாக்கப்படும்.

நீங்கள் ஒரு கடிதத்தை படிப்பதாகக் கனவுகண்டால், உங்களுக்கு செய்தி ஏதோவொன்று உள்ளது என்று பொருள், அந்த கடிதத்தில் கண்டவாறே செய்தியானது நல்லதாகவோ அல்லது தீயதாகவோ இருக்கும்.

திருக்குரானில் அல்லது ஹதீஸீலிருந்து செய்திகளை ஒருவன் கனவு கண்டால், அந்தச் செய்திகளுக்கேற்ப தன் முடிவுகளைத் தெரிந்துகொள்ளலாம். உதாரணத்திற்கு, “அவர் உனக்கு உதவிகளைச் செய்து உடனடி வெற்றியை வழங்குவார்” எனில் அவனுக்கு உதவியும் வெற்றியும் கிடைக்கும். நிச்சயமாக அவர் {கடவுள்} தனது கரங்களிலே முடிவை வைத்துக்கொண்டிருக்கிறார். சொர்க்கமானது தனது கதவைத் திறந்து எண்ணற்ற சுகபோகங்களை அளிக்க காத்திருக்கின்றது. இதேபோல் இவற்றுக்கீடான வார்த்தைகளும் உடனடி வெற்றியைத் தருகின்றது.

தண்டனையைச் சொல்லும் வரிகள் தண்டனையைக் குறிப்பிடுகின்றது; இலாபத்தை மட்டும் எண்ணுபவனின் வாழ்வில் அதிர்ஷ்டம் கைகூடுகின்றது. இதேபோல் திருக்குரானில் உள்ள வரிகள், “பாவங்களை மன்னிப்பவன் தன் அனுபவத்தில் பயங்கரங்களைச் சந்திக்கின்றான்.”

கனவில் தோன்றும் கவிதைகள் மற்றும் பாடல்கள் இவற்றின் பொருள் அடக்கத்திற்கு ஏற்றாற்போல் விளைவுகள் விளையும்.

குதிரைகள், கோவேறு கழுதைகள், கழுதைகள் முதலானவற்றை கனவில் காணும் மனிதன் நல்லதையே எதிர்பார்க்கலாம், ஏனெனில் நமது தீர்க்கதரிசியானவர் (கடவுளின் வணக்கங்களும் நல்லதும் அவருக்கு விளையுமாக) சொல்லியுள்ளதாவது, ”மனிதர்களின் அதிர்ஷ்டமானது அவர்களின் குதிரைகளின் நெற்றியில் தவழும் முடிகளோடு இறுதிநாள் வரை பிணைக்கப்பட்டுள்ளது!” மற்றும் திருக்குரானில் சொல்லியிருப்பதாவது:

எல் கேவ்ஸ் நிதம்பம். இந்த வார்த்தை, ஒரு இளம்பெண்ணின் யோனியை குறிப்பிட குறித்தது. இதுபோன்றதொரு நிதம்பம் கொழுகொழுப்பாக எல்லா பக்கங்களிலும் வட்டமாக நீளமான இதழ்களுடன், கம்பீரமான பிளவுடன், பிளவின் விளிம்புகள் நன்றாக வகுக்கப்பட்டு மற்றும் வட்டமாக இருக்கும். அது மென்மையாக மயக்கந்தருவதாக எல்லாவிடங்களிலும் சரிசமமாக இருக்கும். அதுவே மிக்க இன்பம்தருவதாக எல்லாவகைகளிலும் சந்தேகமில்லாமல் தலைசிறந்து விளங்குவதாக உள்ளது. இதுபோன்ற நிதம்பத்தை நான் பெற கடவுள் உதவுவராக! ஆமென். அது வெதுவெதுப்பாக, புகுவதற்கு இறுக்கமாகவும் காய்ந்துபோனதாகவும், அதிலிருந்து நெருப்பு வருமோ என பார்ப்பவர் வியக்குமளவுக்கு இருக்கும். சுற்றிலும் வெண்மையாக இருக்க நடுவில் தெய்வீகமான சிவந்தநிறம் தென்படும். அதில் குற்றம்குறைகளேதும் தென்படாது.

சிற்றின்பகரத்தாள்: இளம் கன்னியின் யோனிக்கு இந்தப் பெயர் வழங்கப்படுகிறது.

கற்காலத்தவள்: எல்லாவகையான நிதம்பங்களுக்கும் இப்பெயர் வழங்கப்படுகிறது.

பறவை இனத்தாள்: சிறு பெண்ணின் குறிப்பாக, மற்றவர்கள் கூறும் கறுப்பு தலைமுடியைக் கொண்டவளின் நிதம்பத்திற்கு இப்பெயர் பொருந்தும்.

ஓசையுடையவள்: எலும்பும்தோலுமான ஒல்லியான பெண்ணின் நிதம்பத்திற்கு இப்பெயர் வைக்கப்பட்டுள்ளது. இது சுவற்றில் சொருக்கப்பட்டிருக்கும் நாணயத்தைப் போன்று சிறுஅளவுகூட சதையென்பதே இருக்காது. கடவுள் இதை என்னிடமிருந்து தள்ளிவைப்பாராக!

உச்சியை உடையாள்: சேவலுக்கு இருக்கும் சிவந்தநிற கொண்டையைப்போல், இன்பம் துய்க்கும்போது எழுந்துநிற்கும் உறுப்பையுடைய நிதம்பத்திற்கு இப்பெயர் வழங்கலாயிற்று.

சிறுமூக்கு கொண்டவள்: மெல்லிய இதழ்களையும் சிறுநாவையும் உடைய யோனிக்கு இப்பெயர் பொருத்தமாயிற்று.

முள்ளம்பன்றியாள்: முதிய, தளர்ந்த, வயதான பெண்ணின் முரட்டுமுடிகள் கொண்ட நிதம்பத்திற்கு இந்தப் பெயர் பொருத்தமாயிற்று.

அமைதியானவள்: சத்தமிடாத யோனிக்கு இப்பெயர் பொருத்தமாயிற்று. ஆணுறுப்பானது ஒரேநாளில் நூறுமுறை இதற்குள் புகுந்துவந்தாலும், இது ஒரு வார்த்தைகூட புகலாது மற்றும் சிறுமுணுமுணுப்புகூட இன்றி, திருப்தியுற்றதைப்போல் காணப்படும்.

நொறுக்குபவள்: ஆணுறுப்பின்மீது நொறுக்குவதைப்போல் செயல்படுவதால் இந்தப் பெயர் பொருந்திப்போயிற்று. பொதுவாக, இது நேராக உள்ளே நுழையும் ஆணுறுப்பை வெளியே தள்ளும், பிறகு இடமும்வலமுமாகத் தள்ளி தனது கருப்பையால் இறுகிப்பிடிக்கும், முடிந்தால் ஆணுறுப்பின் இரண்டு விதைப்பைகளையும் உள்ளிழுத்துக்கொள்ளும்.

தொல்லைதருபவள்: ஆணுறுப்பை உள்ளே ஏந்திக்கொள்வதில் களைப்பே அறியாத நிதம்பம் இது, இதில் ஆணுறுப்பானது நூறு இரவுகள் உள்ளேபோனாலும் சரி அல்லது நூறு தடவைகள் நடந்தாலும் சரி, இப்படிப்பட்ட நிதம்பமானது திருப்தியடையாது. அது இன்னும் கொஞ்சம் என்று கேட்டுக்கொண்டே இருக்கும். முடிந்தால் உள்ளே நுழைந்த ஆணுறுப்பை வெளியே விடவேவிடாது. இப்படிப்பட்ட அரவணையோடுதான் உறுப்புகள் மாற்றிக்கொள்ளப்படுகின்றன. அரசிலை துரத்துவதாகவும் சிசினமானது துரத்தப்படுகிறதாகவும் ஆகிறது. அதிர்ஷ்டவசமாக இவ்வகை உறுப்பானது அரிதானது, வெப்பத்திலும் நெருப்பிலும் தகிக்கும் காட்டுத்தனமான மோகம்கொண்டிருக்கும். குறைந்தளவு பெண்களிடமே இந்த நிதம்பம் உள்ளது.

நீர் பாத்திரத்தாள்: இதுபோன்ற அரசிலையை சில பெண்களே வரமாகப் பெற்றுள்ளனர், இது நீர்நிலையில் இருக்கும்போது, தனது துவாரத்திலிருந்து உரத்த சப்தம் எழுப்பும்.

பயங்கரமானவள்: அறுவறுப்பூட்டும் நாற்றம்மிகுந்த இந்த யோனியானது விரைத்திருக்கும் ஆணுறுப்பையும் தொங்கச் செய்துவிடும். சில பெண்கள் இதைப் பெற்றிருப்பர், கடவுள் அதை நம்மிலிருந்து தூர வைக்கட்டும்!

ஆழ்ந்தவிருப்பமுடையவள்: இந்த அரசிலையானது, சில பெண்களிடம்

மட்டுமே காணப்படும். சிலருக்கு இயற்கையாகவே இருக்கும்; வேறுசிலருக்கோ நீண்டவிரதத்திற்குப் பின்பு வாய்க்கும். இது ஆணுறுப்புக்காக எரிந்துகொண்டேயிருந்து, பின்பு அது கிடைத்ததும் அணைத்துக்கொண்டு தன்னுள் எரியும் நெருப்பானது அணையும்வரை விடாது.

அழகானவள்: இவ்வகையான நிதம்பம், வெண்ணிறமாக, கொழுத்து, குவிமாடமென குவிந்து உறுதியாக எவ்வித குறைவுமின்றி இருக்கும். அதை ஒருமுறை பார்த்துவிட்டால் உங்கள் கண்களை அதிலிருந்து எடுக்கமுடியாது. அதனை பார்த்தலேபோதும், பிற்பாடு பாதிவிரைத்த ஆணுறுப்பும் முழு அளவில் உறுதியாகிவிடும்.

வீங்குபவள்: விரைத்த உறுப்பு இதனருகில் வரும்பொழுது மற்றும் தன் தலையைக்கொண்டு இதில் பன்முறை தேய்த்ததும், அது வீங்கிப்போய் நிமிர்ந்துநிற்பதால் இப்பெயர் பெற்றது. இம்மாதிரியான உறுப்பைப் பெற்றிருப்பவள் அதிகளவு இன்பத்தைத் தேடுபவள், பெண் குதிரையின் நிதம்பமென, உச்சகட்டத்தின்போது இது திறந்து மூடிக்கொள்ளும்.

துருத்தியிருப்பவள்: சில பெண்களுக்கு இவ்வகையான அரசிலை வாய்த்திருக்கும், இது மிகப்பெரியதாக, சதைப்பற்றான உணர்ச்சிக்குவியல் பிரதேசம் வீங்கியிருக்க, முன்னோக்கி துருத்திக்கொண்டிருக்கும்.

பரந்திருப்பவள்: இந்தவகை அரசிலையானது, பெரிதான இடுப்பெலும்புகளால் சூழப்பட்டிருப்பது. இதுபோன்ற அமைப்பை யுடைய பெண்கள் பெரிதான நிதம்பத்தை படைத்திருப்பவர் எனக் கூறப்படுவதுண்டு, எப்படியெனில் ஒரு ஆணுறுப்பு இதை அணுக நேரும்பொழுது, இது கண்ணுக்கு மைதீட்டும் குச்சியாலும் ஊடுருவப்படமுடியாததாக அழுத்தமாக காணப்படும், ஆனால் அதன் வாயிலில் அழுத்தத்தை உணர்ந்ததும் அகலமாகத் திறக்கும்.

பெரியதானவள்: அகலமாகவும் அதேபோல் நீளமாகவும் இருக்கும் இந்த நிதம்பம், மொத்ததில் எல்லாப் பக்கங்களிலும் உருண்டையாக, இடுப்பெலும்பிலிருந்து தொடைவரை வளர்ந்திருக்கும். இது பார்ப்பதற்கு வெகுஅழகாக இருக்கும். புலவர் ஒருவர் இதைப்பற்றி பின்வருமாறு பாடுகிறார்.

கொழுத்தும் குண்டாகவும் உள்ள பெண்களுக்கு இந்தப் பெயர் பொருத்தமானது. இவர்போன்ற பெண், தன் தொடைகளை ஒன்றின்மேல் ஒன்றாகப் போட்டிருக்கும்போது கன்றுக்குட்டியின் தலையாக நிதம்பம் காட்சியளிக்கும். அவள் ஆடையின்றி படுத்திருக்கும்வேளையில் அவள் தொடைகளுக்கிடையே தானியம்

அளக்கும் “சா” என்ற பொருளை வைத்தாற்போல் இருக்கும். அவள் நடக்கும்போது ஒவ்வொரு காலடிக்கும், அவள் ஆடையினுள்ளே அலைஅலையாக மிதந்து காட்சியளிக்கும். நல்லனவும் பெருந்தன்மையும் உடைய கடவுளே! இதுபோன்றதொரு அல்குலை சுகிக்க எம்மை விடுங்கள்! எல்லாவற்றிலும் இதுவே அதிக சுகம் கொடுப்பதும், கொண்டாடப்படுவதும், விரும்பப்படுவதும் ஆகும்.

பசிகொண்டவள்: எதையும்விழுங்கும் திறன்படைத்தது இந்த நிதம்பம். இந்தவகையான அரசிலையானது சிறிதுகாலத்திற்கு புணர்ச்சியில் ஈடுபடாது, பிற்பாடு அதனருகில் ஏதேனும் ஆணுறுப்பு வந்தால், பசிகொண்ட மனிதன் முன்னே அறுசுவை உணவு படைத்தால் எப்படி விழுங்குவானோ, அப்படியே அதன் சுவடு சிறிதும் தெரியாதவண்ணம் விழுங்கிவிடும்.

பீடமற்றவள்: இந்த வகை அரவணையானது எல்லாவகையிலும் பெரிதாக குறிப்பாக, கருப்பையானது மிக நீண்டதூரத்தில் இருக்க, இதற்கு பெரிய அளவிலான ஆணுறுப்பு தேவைப்படும். மற்ற சின்னஞ்சிறு ஆணுறுப்புகள் இதன் மோக உணர்வைத் தூண்ட இயலாது.

இரட்டை இதழ்களை உடையவள்: பெரிதும் குண்டாக இருக்கிற பெண்களிடம் இந்த வகை நிதம்பமானது காணப்படும். இதனுடைய இதழ்களானது பலவீனமாக நீண்டு தொங்கிக்கொண்டிருக்கும்.

கூனல் முதுகுடையாள்: வீனஸ் கிரகத்தின் எழுச்சியைப்போல் நிற்கும் இவ்வகையான அரவணையானது, ஒட்டகத்தின் முதுகிலிருக்கும் கூனல் சதைத்திரளாக, தொடைகளுக்கிடையே கன்றுக்குட்டியின் தலையென காட்சிதரும். இதுபோன்ற நிதம்பத்தை நாம் சுகிக்க கடவுள் அருள்வாராக... ஆமென்!

சல்லடையாள் : இவ்வகையான பெண்குறி, தன்னுள்ளே வரும் ஆண்குறியை தன்னுள் எல்லாவிடங்களிலும் கீழே இடமும் வலமுமாக, முன்னும் பின்னுமாகச் செலுத்தி தனக்கு சந்தோஷம் கிட்டும்வரை இயக்கிக்கொண்டே இருக்கும்.

ஓய்வறியாதவள்: இதுபோன்ற அல்குலானது உறுப்பை தனக்குள் ஏற்றுக்கொண்டபின், இடையூறே இன்றி ஆக்ரோஷமாக இயங்கி, கருப்பையை ஆணுறுப்பானது தொட்டுவிட்டு சுகமளித்து வேலையை முடிக்கும்வரை சும்மா இராது.

ஒன்றுசேர்ப்பவள்: இவ்வகையான அரசிலையானது, உறுப்பை ஏற்றுக்கொண்டபின், அதனுடன் ஒட்டிக்கொண்டு, தன்னுள் இழுக்கும்.

முடிந்தால் இரண்டு விதைப்பைகளையும் தன்னுள் உள்வாங்கிக்கொள்ளும்.

இடம்தருபவள்: நீண்டகாலமாக புணர்ச்சிக்கு ஏங்கும் பெண்ணின் நிதம்பத்திற்கு இந்தப் பெயர் வழங்கப்படுகின்றது. இது ஆணுறுப்பைக் கண்டதும் அளவில்லா ஆனந்தத்தை வெளிப்படுத்தி, அது முன்னும்பின்னுமாக அசையும். அந்த ஆணுறுப்பிற்கு தனது கருவறையின் வாசலை முன்னோக்கி அது தொடும்வரை செலுத்தும், இதுவே அதனிடமிருக்கும் தலைசிறந்த பரிசாகும். நிதம்பத்தினுள்ளே எவ்வகையான இடமாக இருந்தாலும் சரி, அதை ஆணுறுப்பு கண்டுபிடிக்கும்வரை ஒத்துழைக்கும்.

உச்சக்கட்டம் நெருங்கிவரும்வேளையில், ஆணுறுப்பானது விந்துவை கக்கும்வேளையில், அது தனது கருப்பை மற்றும் அதன் வாயிலின் தலையூடே அதை இறுகப் பற்றிக்கொண்டு, கடைசிச்சொட்டையும் விடாது உறிஞ்சிக்கொள்ளும். இதைக் கொண்டிருக்கும் பெண்மகள் தனது கருப்பையினுள்ளே விந்து விழும்வரை திருப்திகொள்வதில்லை.

உதவி செய்பவள்: இந்தப் பெயரை நிதம்பம் பெற்றிருப்பதற்கான காரணம் யாதெனில், ஆணுறுப்பு உள்ளே நுழைந்ததும், அது உள்ளேயும் வெளியேயும், மேலேயும் கீழேயும், சுருங்க உரைப்பின், அதன் எல்லா செயல்பாடுகளிலும் அது உதவி செய்வதால்தானறிக! இந்த அரசிலையானது ஆணுறுப்புக்குத் தேவையான எல்லா வசதிகளையும் நிறைவேற்றும், அதன் தாபங்களுக்கு ஏற்ப பதிலளிக்கும். இவ்வாறு உதவி செய்வதினால் சுகங்கள் மேன்மேலும் உயரும். ஒரு ஆணுறுப்பு விந்துவை வெளியேற்றுவதில் மெத்தனப்போக்கை கடைப்பிடித்தாலும், இதன்போக்கில் படுவேகமாக பீய்ச்சியடிக்கும்.

பாதுகாக்கப்பட்டவள்: இதுவொரு மாபெரும் அளவிலான அல்குல், சுற்றிலும் புடைப்புசூழ காணப்படும் மற்றும் காய்ந்துபோயும் பெட்டகம்போலவும் கடினமான சதையுடன் கூடியிருக்கும். கடவுள் இதிலிருந்து நம்மைக் காப்பாராக!

நீளமானவள்: இந்தப் பெயர் சில அரசிலைகளுக்கு வழங்கப்படும். எல்லாவகை நிதம்பங்களும் பொதுவாக ஒன்றுபோலவே இருக்கும் என்பது எல்லோரும் அறிந்ததொன்று. ஆனால் இவ்வகை அரசிலையானது பிருஷ்டபாகம் தொடங்கி இடுப்புவரை பரவியிருக்கும். பெண்ணாகப்பட்டவள் நிற்கும்போதும் அல்லது படுத்திருக்கும்போதும் நீளமாகவும், அவள் அமர்ந்திருக்கும்போது வட்டமாகவும் ஆடையை துருத்திக்கொண்டு தெரியும். இதுவாகப்பட்டது தொடைகளுக்கிடையில் அமைந்திருக்கும் அற்புதமான வெள்ளரிப்பிஞ்சை நிகர்த்திருக்கும். சில

பெண்களுக்கு மெல்லிய ஆடைகளூடே அல்லது அவர்கள் குனியும்போது இது தெரியும்.

டூயலிஸ்ட்: இதுவும் ஒரு நிதம்பம் என்றே அறிக. இதற்குள் ஆணுறுப்பைச் செலுத்தும்போது வருவதும்போவதும் ஆக இருக்கிற அதன் செயலைக் கட்டுப்படுத்தும், அது இன்பம் கிடைப்பதற்கு முன்பாகவே விந்துவை கக்கிவிடப்போகின்றதோ என்று அச்சம்கொள்ளும். இதற்கு இன்பம் ஏதும் கிடையாது, ஆனால் ஆணுறுப்பானது கருப்பையில் தரும் அதிர்ச்சியில், அது உடனே கருப்பையை முன்பக்கம் துருத்தி ஆணுறுப்பை கவ்விக்கொண்டு விந்துவை உறிஞ்சிக் குடித்துவிடும். சில நிதம்பங்கள் காட்டுத்தனமான விருப்பத்திலும் மோகத்திலும் இருக்கும் சில அரசிலைகள், அவை இயற்கைக்குக்கு ஆதரவாக அல்லது நீண்டகாலமாக புணர்ச்சிக்கு ஏங்கிக்கொண்டு இருக்கிற நிதம்பம், இலிங்கமானது தன்னை தொடவந்தால், அதை தாவியணைத்து வாயை, மார்பகக் காம்பைத் தரும் அன்னையிடம் தாவிப்பாயும் பசிகொண்ட குழந்தையென திறந்துகொள்ளும். இதுபோலவே இந்தவகை அரசிலையானது தன்னுள்வரும் சிசினத்தை எதிர்கொண்டழைத்து கருப்பையை திறந்துகொள்ளும்.

அரசிலையும் இலிங்கமும் இருவேறு திறன்களுடைய உறுப்புகள். அவை ஒன்றுக்கொன்று பொருதும்போது, அரசிலையானது இலிங்கத்தை எதிர்த்து தடுக்கிறது. இலிங்கமானது ஒரு கத்தியை உருவகிக்க அல்குலானது கேடயத்தை உருவகிக்கும். முதலில் எது விந்துவை வெளியிடுகின்றதோ அதுவே வெல்லப்பட்டதாகும். அதேசமயம், நிதானமாக நடப்பதே வெற்றிகொள்ளும். ஆயினும் இதுவொரு அற்புதமான போராகும். இந்தச் சண்டை என் இறப்புவரைக்கும் நீடித்திருக்க வேண்டுமென விரும்புகிறேன்.

எப்படியெனில் இந்தக் கவிஞன் பாடுகிறான் கேளுங்கள்:

போட்டியிடுபவள்: ஒரு பெண்ணின் அகல்விளக்கிற்கு இந்தப் பெயர் பொருத்தமானது, எப்படியெனில் இவளின் நிதம்பமானது விரைத்திருக்கும் உறுப்பையே வெப்பமுடன் தேடும்.

இந்தவகை நிதம்பமானது அதிர்ச்சிக்குள்ளாகாமல், ஆடையை நீக்கியவுடன் மற்ற அல்குலைபோல் வெட்கப்படாது. மாறாக ஆணுறுப்பை மகிழ்ச்சியாக வரவேற்கும், தனது பாதுகாப்புப் பெட்டகத்தை திறக்க அனுமதிக்கும், அதை முழுங்கிவிடுவதைப்போல் கருப்பையைத் திறக்கும். இதைக்கண்டு விதைப்பைகள் அழும், " ஐய்யோ என்ன ஒரு சோதனை! நமது சகோதரன் மறைந்துவிட்டான்!

எமக்கு கவலையாக உள்ளது. காரணம், அவன் ஆழத்தில் தன்னைத்தானே மூழ்கிவிட்டான், அவன் இதுபோன்ற குகையினுள் ஒரு டிராகன் மிருகமாக உள்நுழைந்தது முட்டாள்த்தனம்!" இந்தப் புலம்பல்களைக் கேட்ட அரசிலையானது அவர்களின் கவலையை மறக்கடிக்க பின்வருமாறு உரைக்கும், "இதனைக் கண்டு பயம் கொள்ளலாகாது, அவன் உயிருடன் உள்ளான், அவன் காதுகள் உங்கள் வார்த்தைகளைக் கேட்கின்றன". இதைக்கேட்ட அவை பின்வருமாறு புகலும், "நீ சொன்னது உண்மையெனில், அழகான முகம்படைத்த எங்கள் தலைவனை வெளியே வரவிடு, நாங்கள் அவரைப் பார்க்கவேண்டும்." பிறகு அந்த அல்குலானது சொல்லும், "நான் அவனை உயிருடன் வெளியே விடமாட்டேன், இறப்பானது அவனை அடிக்கும்வரை." இரண்டு விதைப்பைகளும் அதனிடம் மன்றாடும், "அவர் தனது வாழ்வினைத் துறக்கும் அளவுக்கு என்ன பாவம் செய்தார்? சிறைப்படுத்தலும் அடித்தலுமே போதுமான தண்டனை ஆகும்." அதற்கு நிதம்பமானது, "சொர்க்கத்தை படைத்தவனே அவனையும் படைத்திருக்கிறான், அதனால் அவன் சாகும்வரை வெளியேறவே முடியாது!" பின் நிதம்பமானது சிசினத்திடம் கூறும்: "உன் இரு சகோதரர்களின் வார்த்தைகளை கேட்டாயோ? விரைந்து அவர்கள்முன் தோன்று, உந்தன் விடுப்பு அவர்களிடையே மனவேதனையை உண்டுபண்ணியுள்ளது!" விந்துவை கக்கியபின், நிழலைப்போல ஒன்றுமில்லாதவனாக விதைப்பைகளிடம் திரும்பிவரும் ஆணுறுப்பு. ஆனால் அவர்களுக்கு அவனை அடையாளம் தெரியாமல் கேட்கும்: "மெலிந்து சிறுத்தவனே நீ யாரோ?" "நான் உங்கள் சகோதரன், உடல்நிலை சரியில்லாமல் ஆகிவிட்டேன்" ஆணுறுப்பு பதில் கூறும். நான் உள்ளே போகும்போது எந்தநிலையில் இருந்தேன் என்று நீங்கள் பார்க்கவில்லையா? நலம்வேண்டி எல்லாவகையான மருத்துவர்களின் கதவுகளையும் தட்டிவிட்டேன், ஆனால் சிறப்பான மருத்துவரை இவ்விடத்தில்தான் கண்டேன்! அவள் என் குறைகூறுதலை கவனத்தில் கொண்டு சிகிச்சை அளித்தாள் மற்றும் சோதனை ஏதும் செய்து பார்க்காமல் குணப்படுத்தியும்விட்டாள்"! அந்த விதைப்பைகள் கூறும், "எந்தன் சகோதரனே, உம்மைப்போலவேதான் நாங்கள் துயரப்பட்டோம், ஏனெனில் நாங்களும் உங்களில் ஒருவனே. இம்மாதிரியான குணப்படுத்தலை கடவுள் எமக்கு அருளவில்லையே ஏனோ?" உடனே விந்துவானது அவற்றில் நிரம்பி அவை பெரிதாகும். அவை அதேபோன்ற சிகிச்சை குணமாதலுக்கு ஏங்கும், எனவே பின்வருமாறு சொல்லும், "அதே மருத்துவரிடம் எம்மை விரைந்து அழைத்துச் செல்வீராக, எல்லா குற்றங்குறைகளையும் அவள்

அறிந்திருப்பதால் ஒருவேளை, எங்கள் குறையையும் அவள் சரிப்படுத்தக்கூடும்!” இவ்விடத்தில் மறுபடியும் பேச்சானது துண்டிக்கப்படுகிறது காரணம் யாதெனில், ஆணுறுப்பானது திரும்பவும் தொலைந்துபோனது. ஒருவேளை அது அதே குழிக்குள் விழுந்துவிட்டிருக்குமோ என விதைப்பைகள் அச்சமுற்று இருக்கும்.

தப்பியோடுபவள்: இந்தவகை நிதம்பமானது இறுக்கமாகவும் சுருங்கிப்போயும் இருக்கும், விரைத்த பெரிதான ஆணுறுப்பால் ஊடுருவி காயப்பட்டுவிடும். அது இடமும் வலமுமாக தப்பியோட முயற்சிக்கும். இம்மாதிரியான நிதம்பங்கள் கன்னிப்பெண்களுக்கு உரியது என மக்கள் கூறுவார்கள். அவை இன்னும்கூட ஆணுறுப்பைச் சந்திக்காமல் இருக்கும், மற்றும் அதன் அணுகலினால் பயந்துபோய், அதன் வழியில் இருந்து வெளியேற முயற்சிக்கும், ஆனால் தொடைகளுக்கு நடுவில் அது தவழும்போது ஆனந்தமாக அனுமதியளிக்கும்.

ரிசைன்டு: இவ்வகையான அரசிலையானது ஆணுறுப்பை அனுமதித்தபின் அதன் எல்லாவித அசைவுகளுக்கும் தக பொறுமையுடன் அசைந்து கொடுக்கும். இதுபோன்ற அகலானது காட்டுத்தனமான நீடித்த புணர்ச்சியைக்கூட தாங்கும் அளவுக்கு வல்லமை கொண்டதாகும். இதை நூறுமுறை தாக்கினலும் சோர்ந்து போகாது, குறை சொல்லாது. மாறாக அதன் சிறுதுளையை அணுகும்போது அது கடவுளுக்கு நன்றி சொல்லும். சில ஆண்குறிகள் இதை தொடர்ச்சியாக அணுகினாலும் இது அதே பொறுமையை காட்டும்.

இவ்வகையான நிதம்பங்கள் கொதிக்கின்ற தேகம்கொண்ட பெண்களிடையே காணப்படும். காரியத்தை நடத்துவது எப்படியென அவர்கள் கண்டுகொண்டுவிட்டால் ஆண்களை ஏறவிடமாட்டார்கள். தாங்களே செய்வார்கள் மற்றும் அவனுடைய குறியை கணநேரமும் விட்டுவிட மாட்டார்கள்.

கொழகொழப்பானவள்: நான்குவகையான வெறுக்கத்தக்க அசிங்கங்கள் இவ்வகையான நிதம்பத்தைப் பீடித்திருப்பதால் இந்தப் பெயர் பெற்றது. இது இருப்பதிலேயே அருவெறுப்பானது ஆகும். ஏனெனில் அதிகளவில் கொழகொழப்பான திரவம் இவ்வகை அல்குல்லில் சுரந்து புணர்ச்சி இன்பத்திற்கு கேடுவிளைவிக்கும். இக்குறையானது வளர்ந்துகொண்டே வந்து கொழகொழப்பானது ஆணுக்கு ஆரம்பக்கட்டத்திலேயே எரிச்சலூட்டும். கடவுள் இவற்றிலிருந்து நம்மைக் காப்பாற்றுவாரக... ஆமென்!

பீப்பாயைப் போன்றவள்: இதுபோன்ற அல்குலானது பொதுவில் யாருக்கும் இருக்காது. சிலசமயங்களில் இக்குறையானது இயற்கையாவே உண்டாகியிருக்கும். சிலநேரங்களில் அரவணையின் உதடுகளை நீக்கும்போது தவறான அறுவை சிகிச்சையால் உண்டாகும். அறுவை சிகிச்சையாளன் தன் தவறினால் நிதம்பத்து இரு உதடுகளின்மீது அல்லது ஒரு உதட்டின்மீது கத்தியை தவறாகப் பிரயோகம் செய்துவிட்டால், அது ஆறியபின் பெருத்த தழும்பு ஒன்று உண்டாகி அது வழியை அடைத்துக்கொள்ளும், ஆண்குறியானது நிதம்பத்திற்குள் நுழையவேண்டுமாயின், நீண்டகுறுகிய கத்தியால் அவ்விடத்தில் சிகிச்சை மேற்கொண்டால் குறை நீங்கும்.

ஆழமானவள்: இவ்வகையான அரசிலைகளின் வாய்ப்புறம் எப்போதுமே திறந்திருக்கும், அதனுடைய அடியானது கண்ணுக்குப் புலப்படாமல் எங்கேயோ இருக்கும். அதிக நீளம்கொண்ட ஆண்குறியால் மட்டுமே அதன் முடிவை தொட இயலும்.

கடிப்பவள்: ஆண்குறியானது உள்ளே நுழையும்போதில், ஆசைத்தீ எரியும் இவ்வகை நிதம்பமானது சடாரென்று திறந்து பட்டென்று மூடிக்கொள்ளும். இதைவிட முக்கியமானது என்னவெனில், விந்துவை கக்கும்பொழுது, ஆண்மகன் தன் குறியானது கருப்பையின் வாசலருகே கடிபடுவதை உணர்வான். கருப்பை குறியோடு ஒட்டிக்கொண்டு, தனக்குள் விந்துவை விட குறியை உள்ளிழுப்பதிலும் அதேசக்தியுடன் விளங்கும். கடவுள் அந்தப் பெண் கர்ப்பமடைய வேண்டுமென விரும்பினால், விந்து கருப்பையில் ஊடுருவி அங்கே உயிர் அரும்பும். மாறாக, கடவுள் கருவடைய விரும்பவில்லையெனில் விந்துவானது கருப்பையினால் நிராகரிக்கப்பட்டு அல்குலின் வாசலில் வழியும்.

உறிஞ்சுபவள்: இவ்வகை அல்குலானது அதிகளவு முன்விளையாட்டினாலோ அல்லது நெடுநாள் புணர்ச்சியின்றி இருந்ததினாலோ, தன்னுள் வரும் ஆண்குறியின் ஒட்டுமொத்த விந்துவை, ஒரு குழந்தை தாயின் மார்பகம் நோக்கி பாய்ந்து உறிந்து எடுப்பதைபோன்று, உறிந்து எடுத்துவிடும்.

புலவர் இதை பின்வரும் கவிதையில் விளக்குகிறார்.

மற்றொரு கவிஞரும் (சொர்க்கத்தில் கடவுளானவர் அவருக்கு எல்லா சுகங்களையும் தருவதாகுக!) இதே விஷயத்தை வேறொரு கவிதையில் விளக்குகிறார்.

குளவியாள்: கடினமான முரட்டுத்தனம் மிகுந்த மயிர்கள் அடர்ந்திருப்பதால் நிதம்பமானது இந்தப் பெயரை பெற்றது. ஆண்குறி இதை அணுகி உள்ளே நுழைய எத்தனிக்கும்போதில், அதன்

மயிர்களால் குளவியைப்போல் கடிபடும்.

வெப்பமானவள்: இதுவொன்றே எல்லா நிதம்பங்களிலும் புகழத்தக்கது. கொதிக்கும் வெப்பமானது எல்லா அல்குல்களிலும் இருக்கும் உண்மைதான். ஆனால் இவ்வகை அரவணையானது பெறுகின்ற சுகத்திற்குத்தக வெப்பத்தை அதிகரித்துக் கொண்டே போகும். கவிஞர்கள் இதை பல்வித கவிதைகளில் பாடியிருக்கிறார்கள்.

சுவையானவள்: இது ஒப்புமையில்லாத சுகத்தை பெறுவதில் புகழ்பெற்றது, இந்தச் சுகம் மிருகங்களிடத்தும் பறவைகளிடத்தும் காணப்படுவது ஆகும். இந்த சுகத்திற்காகத்தான் அவை சர்வகாலமும் சண்டையிட்டுக் கொள்கின்றன. இந்தமாதிரியான சொக்கவைக்கும் சுகமானது மிருகங்களிடத்தில் இத்தளவு போதையை உண்டுசெய்தால் பின்னர் மனிதர்களிடத்தில் என்ன செய்யும்? எனவேதான் எல்லா போர்களும் இந்த நிதம்பம் தரும் இன்பசுகத்தைத் தேடி, உலகின் உச்சபட்ச அதிர்ஷ்டத்தைத் தேடியே நடக்கின்றன. நமக்கு கடவுளால் அருளப்பட்ட சொர்க்கத்தின் ஒருபகுதியான இந்த சுகம், ஆயிரம் மடங்கு உத்தமமானது.

பெண்ணின் இந்த உறுப்புக்கு இன்னும்கூட அதிகப் பெயர்கள் இருக்கக்கூடும். ஆனால் மேற்குறிப்பிட்ட இந்தப் பெயர்களே போதுமானது என்று நான் நினைக்கின்றேன். இப்பணியின் ஆதாரமான விஷயம் என்னவென்றால், புணர்ச்சி விஷயம் சம்பந்தப்பட்ட எல்லா கவர்ந்திழுக்கும் விவரங்களையும் ஒன்று சேர்த்து தருவது, எனவே புணர்ச்சியில் சிக்கல் ஏற்பட்டால் அதைத் தீர்க்க இதில் விவரத்தைத் தேடலாம் மற்றும் ஒரு ஆண்மகன் தனக்கு விரைப்பு ஏற்படாவிடில் தன் பலவீனத்திற்கு காரணத்தையும் அதை தீர்க்ககூடிய நிறையினையும் இதில் தேடலாம். தம் குறியின் ஆண்மையை இழுந்துவிட்ட ஆண்கள், மலட்டுத்தனத்தால் அவதியுறுவோர், தம் பழைய வல்லமையைப் பெற இது சம்பந்தப்பட்ட நூல்களை சர்வகவனத்துடன் படித்து பயன்பெறவேண்டுமென புத்தியுடைய மருத்துவர்கள் கூறியுள்ளார்கள். சில குறிப்பிட்ட விஷயங்கள் உம்மை தூண்டுமென்றால் விலங்குகள் புணர்ச்சி செய்வதைப் பாருங்கள். ஆனால் எங்கெங்கிலும் மிருகங்கள் புணர்ச்சி செய்வதை பார்க்க வாய்ப்பு இல்லாததால், இந்த விஷயத்தில் நூல்களைத் தவிர்க்க இயலாது. ஒவ்வொரு நாட்டிலும், சிறியாரோ பெரியாரோ, ஏழையோ பணக்காரனோ இதுபோன்ற புத்தகங்களைப் படிக்கக்கூடும். அவ்வாறு படித்தால் கல்லும் பொன்னாகும்.

இது சம்பந்தபட்ட விஷயத்தில் நெடுங்காலத்திற்குமுன் நடைபெற்ற கதை ஒன்று உள்ளது. சிறப்பு வாய்ந்த காலிப் ஹாரூண் எர் ராச்சிட்டின்

ஆட்சிக்குமுன்னர் ஒரு விதூஷகன் வாழ்ந்து வந்தான். அவன் பெண்களையும் பெரியோர்களையும் குழந்தைகளையும் தன் செய்கைகளால் சந்தோஷப்படுத்தி வந்தான். அவனது பெயர் ஜொய்டி என்பதாகும். பெரும்பாலான பெண்கள் அவனுக்கு எல்லா உதவிகளும் செய்துவந்தனர், அவன் எல்லோராலும் விரும்பப்பட்டு, தன்மையுடன் நடத்தப்பட்டு வந்தான். இளவரசர்கள், ஊசூர்கள் மற்றும் காதிகள் ஆகிய எல்லோராலும் மரியாதையுடன் நடத்தப்பட்டான். பொதுவாகச் சொல்லவேண்டுமென்றால், மொத்த உலகமுமே அவனுக்கு செல்லம் காட்டிவந்தது. அக்காலத்தில் அந்த விதூஷகனைவிட வேறெந்த ஆணும் அத்தளவு சலுகை பெறவில்லை, இதற்குண்டான காரணத்தை கவிஞர் தமது புலமையால் பாடியிருப்பார்:

ஜொய்டி பின்வரும் கதையைக் கூறினான்.

ஜொய்டியின் வரலாறும் மற்றும் பதேஹத எல் ஜமாலும்

நான் ஒரு பெண்ணை விரும்பினேன். அவள் நளினமாகவும் பூர்ணத்துவம் கொண்டவளாகவும் அழகான வளைவுகளுடன் கற்பனையில் மட்டுமே காணக்கூடிய வசீகரம் பொருந்தியவளாகவும் இருந்தாள். அவள் கன்னங்கள் ரோஜா மலர்கள், நெற்றி அல்லிமலரின் வெண்மை, இதழ்கள் பவழமான செந்நிறம், அவளுக்கு முத்துப் போன்ற பற்கள், மாதுளம்போல கொங்கைகள். அவள் வாயானது திறக்கும்போது மோதிரமாக வட்டவடிவில் இருக்கும்; மதிக்கமுடியாத கற்களால் அலங்கரிக்கப்பட்டதாக அவள் நாக்கு திகழும்; அவள் கண்கள் கன்னங்கரேலென்று, ஓரங்களில் பிளந்து, தூக்கத்தினால் அவதியுறுவதைப்போல போதையுடன் இருக்கும். அவள் குரலானது சர்க்கரைப்பாகுவென இனிக்கும். இவ்வாறு உருவம் மொத்தமும் குழைந்துவர, அவளுடைய சதைத்திரளானது புதிதான வெண்ணெயாக, தெளிந்த வைரமாக கனிந்திருக்கும்.

அவளின் அரசிலையானது வெளேரென்று, அரைவட்ட வளைவாக வட்டமாக இருக்கும். அதன் நடுவில் சிவப்பாக, நெருப்பை உமிழ்ந்து, அதேநேரம் ஈரப்பதம் அற்றும் இருக்கும். அது முழுவதும் காய்ந்திருப்பதால் தொடுவதற்கு இனிமையாக இருக்கும். அவள் நடந்து செல்லும்போது அது குவிமாடமாக அல்லது கவிழ்த்து வைக்கப்பட்ட கிண்ணமாக காட்சியளிக்கும். அவள் சயனித்திருக்கும் வேளைகளில், குன்றின்மீது படுத்திருக்கும் குழந்தையென காட்சியளிக்கும்.

அந்தப் பெண், என் பக்கத்து வீட்டுக்காரியாவாள். மற்ற எல்லோரும் என்னுடன் உறவாடி சிரித்து மகிழ, கிண்டலடித்து விளையாட, மெத்த மகிழ்வுடன் என் கருத்துகளை ஏற்றுக்கொண்டிருந்தனர். நான்

அவர்களோடு முத்தங்கள் இட்டு, இறுக அணைத்தும், கடித்தும் மற்றும் அவர்களின் கழுத்துகளை, கொங்கைகளை, இதழ்களைச் சுவைத்தும் மகிழ்ந்திருந்தேன். அவர்கள் எல்லோரையும் புணர்ந்தும்விட்டேன். ஆனால் பக்கத்து வீட்டுக்காரியை மட்டும் கிடையாது, மற்ற எல்லோரையும் ஒப்பிடும்போது அவள் மட்டுமே எனக்கு வேண்டும் என்ற ஆவல் என்னுள் மேலோங்கி இருந்தது. ஆனால் அவளோ என்னுடன் இணக்கமாக இருப்பதற்குப் பதிலாக என்னை புறந்தள்ளி வந்தாள். இதனால் அவளை யாருமற்ற இடத்தில் அழைத்துக்கொண்டுபோய் அவளிடத்தில் என் ஆசையெல்லாம் சொன்னபோது அவள் எனக்குப் புரியவேபுரியாத செய்யுள் ஒன்றை பாடிக் காட்டினாள்.

ஒவ்வொருமுறையும் எந்தன் ஆசைகளை அவளிடத்து சொல்லும்போதும் அவள் இந்தச் செய்யுளை பாடிக் காட்டுவாள். ஆனால் அதன் பொருளோ எனக்குப் புரிபடவே இல்லை. அதனால் அவளுக்கு பதில் சொல்லவும் இயலவில்லை. ஆனால் காதலும் காமமும் நாள்தோறும் வளர்ந்துகொண்டே வந்தது. அதனால் பார்க்கும் மனிதர்களிடம், தத்துவஞானிகளிடம், அறிவாளிகளிடம், புத்திசாலிகளிடம் இப்பாடலின் பொருளைப்பற்றி கேட்டேன். ஆனால் யாராலுமே இந்தப் புதிரை அவிழ்க்கமுடியவில்லை, அதேபோல், எந்தன் வெப்பத்தை அணைக்க, விருப்பத்தை நிறைவேற்றவும் முடியவில்லை.

இருப்பினும் என்னுடைய முயற்சியை விட்டுவிடாமல் நான் தொடர்ந்துசெய்ய, அப்போது அபூ நவாஸ் என்ற அறிஞர் ஒருவர் தூரதூர தேசத்தில் வசிப்பதாக தகவல் கிட்டியது. அவரே என் புரியாதபுதிரை அவிழ்க்கத்தகுந்தவர் என்ற விஷயமும் சொல்லப்பட்டது. அதனால் அவரிடத்தில் சென்று, பெண்களிடத்தில் நான் பேசும் விஷயங்களைத் தெரிவித்து, கூடவே அந்த செய்யுளையும் கூறினேன்.

அபூ நவாஸ் என்னிடம் கூறினார்: “இந்தப் பெண் மற்ற ஆண்களைவிட உன்னை அதிகம் விரும்புகிறாள். அவள் கொழுத்தும் பருத்தும் காணப்படுவாள்”. “நீங்கள் சொன்னதுவே சரி, அவள் உங்கள் முன்னிருப்பதுபோலவே வர்ணிக்கின்றீர். ஆனால் அவள் என்மேல் காதல்கொண்ட விஷயம் மாத்திரம் உண்மையல்ல. எப்படியெனில் அதைப்பற்றி அவள் மூச்சுகூட விடவில்லை.” “அவளுக்கு கணவன் இல்லை”. “அப்படித்தான்.” என்று நான் பதிலளித்தேன். உடனே அவர், “எனக்கு உன் குறி சிறியதாக உள்ளதோ என ஐயம் உள்ளது. அதுபோன்று குறி இருந்தால் அவளுடைய தாகத்தை தணிக்கவோ அல்லது மோகத்தீயை அணைக்கவோ முடியாது. ஏனெனில் கழுதையின்

குறியளவுக்கு நிகர்த்த குறியுடைய காதலரையே அவள் வேண்டுகிறாள். ஒருவேளை அப்படிக்கூட இல்லாமல் இருக்கலாம். ஆகவே இதுபற்றிக் கூறுவாய்" உடனே நான் அதைப்பற்றி நீங்கள் கவலைகொள்ளத் தேவையில்லை. உம்முடைய ஐயத்தை துடைக்கும் அளவுக்கு என்னுடைய குறியானது முழுஅளவில் அசுரவேகத்தில் எழும் என்றுகூற, அவரும் அவ்வாறாயின் எல்லா சிக்கல்களும் தீர்ந்துபோயின என்றுகூறி அந்தச் செய்யுளுக்கு பின்வருமாறு விளக்கிக்கூறினார்.

உறுதியாக தரையில் அடிக்கப்பட்ட அந்தக் கூடாரம், மாபெரும் அளவில் உடைய முன்னால் நீட்டிக்கொண்டிருக்கும் நிதம்பத்தைக் குறிக்கிறது, அதன் இருபுறமும் உயர்ந்தெழும்பும் மலைகள் இரண்டு தொடைகளையும் குறித்தன. அக்கூடாரத்தின் மத்தியபாகத்தை தாங்கும் கழியானது அவளுக்கு கணவன் இல்லை என்பதைக் குறித்தது, அதாவது நிதம்பத்தின் உதடுகளை தொட்டுக்கொண்டிருக்கும் ஆண்குறியை, மையத்தைத் தாங்கும் கழியானது குறித்தது, அவள் பிடியில்லாத ஒரு ஜாடி போலிருக்கிறாள்; அதாவது, பிடியில்லாத ஜாடியை தொங்கவிட்டால் அதனால் யாருக்கும் ஒரு நன்மையும் இல்லை. ஜாடியானது அரசிலையை குறித்தது, கைப்பிடியானது குத்திட்டு நிற்கும் ஆண்குறியைக் குறித்தது; கயிறுகள் அவிழ்க்கப்பட்டு கூடாரத்தின் மையப்பாகம் தொங்கிக்கொண்டே போகிறது; அதாவது, கூடாரமானது அதன் மையத்தில் தாங்கிப்பிடிக்க கொம்பின்றி உள்ளது, இதேபோல்தான் ஒரு பெண்ணும் கணவனில்லாமல் காமசுகத்தை அனுபவிக்க முடியாது. இந்த வார்த்தைகளிலிருந்து, பாத்திரத்தின் உள்ளிருக்கும் குழிவைப்போன்று அந்தப் பெண் தன்னுடைய ஒப்புமையினால் எத்தளவு காமம்மிகுந்தவளாக இருக்க கடவுள் படைத்திருப்பார். அவள் தன் நிதம்பத்தை ஒரு பாத்திரமாக உருவகம் செய்கிறாள், அதாவது செரிட்டை தயார்செய்யும் பாத்திரம்; நன்றாகக் கேட்பாய், உண்ணக்கூடிய செரிட்டை பாத்திரத்தில் இட்டு, அதை நீண்டும் திண்மையும் உள்ள மெடிலாக் எனும் கழியினால், கைகளாலும் கால்களாலும் பாத்திரத்தை இறுகப் பற்றிக்கொண்டு, கிண்டவேண்டும். இந்த வழியில் மட்டுமே குறிப்பிட்ட உணவை தயார் செய்யமுடியும். அதை நீளம் குறைவான கழியினால் கிண்ட முடியாது. ஏனெனில் சமையல்காரன் தன் கைகளை நெருப்பினில் சுட்டுக்கொள்ள, உணவும் நன்றாக தயாராகாது. ஓ, ஜொய்டியே இதுவே பெண்ணுடைய உண்மையான பண்பு. பாத்திரத்தை கிண்டும் நீளமான மரக்கழியை ஒத்து உனது ஆண்குறி இல்லாவிடில், அது அவளுக்கு போதுமான திருப்தியை தராது, அதனினும் அவளை உன் மார்புக்கு அருகில் வைத்து, கைகளாலும் கால்களாலும் இறுக அணைக்காவிடில், அவளிடம் எவ்வித

உதவியும் பெறமுடியாது; இறுதியாக அவள் தீயில் அவளே வேகவிட்டாயானால், உணவை சரிவர கிளறாது பாத்திரத்தை அடுப்பில் எரிவதைபோல், அவளின் ஆசைகளை பூர்த்தியடையச் செய்யமுடியாது.

உன் விருப்பத்திற்குதக அவளை தடுப்பது எது என்று இப்போது நீ புரிந்துகொண்டிருப்பாய். அவள் அவளின் தாகத்தை தணிக்கவோ அல்லது மோகத்தீயை விசிறிவிட்டபின் அணைக்கவோ தவறுவாய் என்றே பயந்து போயிருக்கிறாள்''.

" ஓ ஜொய்டி, அவள் பெயர் என்னவோ?"

நான் பதிலளித்தேன், "பாஹேத் எல் தஜ்மல் (சூரிய உதயத்தின் அழகு)"

ஞானி கூறினார், "அவளிடம் செல்க, இந்த செய்யுளையும் கொண்டு செல்க, உன்னுடைய சங்கதிகள் எல்லாம் சந்தோஷமாக ஆகட்டும், தயை செய் கடவுளே, பிற்பாடு நீ என்னிடம் திரும்பி வந்த பின்னால் உங்கள் இருவருக்கும் இடையே நடந்த சங்கதியை என்னிடம் சொல்வாயாக''.

அவரிடம் அதற்குண்டான உறுதிமொழியை அளித்தபின், அபூ நவாஸ் பின்வரும் வரிகளை உச்சரித்தார்.

என் இதயபூர்வமாக அந்த வரிகளை மனனம் செய்தபின், நான் அபூ நவாஸை விட்டு நீங்கி பாஹேத் எல் தஜ்மல்லை அடைந்தேன். வழக்கம்போல அவள் தனிமையில் இருந்தாள். நான் கதவினை மெல்லத்தட்டினேன்; எழுகின்ற சூரியனாக அழகுடன் வந்த அவள் சொன்னாள், "கடவுளின் எதிரியே, இந்த நேரத்தில் என்ன விஷயமாக என்னிடம் வந்துள்ளாய்?"

நான் அவளுக்குப் பதில் அளித்தேன். "பிரிய சகி முக்கியமான விஷயமாகத்தான்''.

"விளக்கமாகச் சொல், உனக்கு உதவ முடியுமா என்று பார்க்கிறேன்''. என்று அவள் உரைத்தாள்.

"கதவைப் பூட்டும்வரை அதைப்பற்றி நான் சொல்லபோவதில்லை'', நான் பதில் அளித்தேன்.

அவள் கூறினாள்."என்ன இன்று உன் தைரியம் மிதமிஞ்சி உள்ளதே?"

"உண்மைதான் என் சாகசக்காரியே! தைரியமென் பண்புகளில் ஒன்றாகும்'', என்று நான் கூறினேன்.

பிறகு அவள் என்னைப் பின்வருமாறு விளித்தாள், " உனக்கு எதிரியே நீதான்! உன் இனத்திலேயே நீதான் துக்ககரமானவன்! நான் கதவைப் பூட்டிவிட்டால், என் விருப்பங்களை நிறைவேற்ற உன்னிடம்

ஒன்றுமில்லாதபோது, யூதமுகம் கொண்டவனே, உன்னுடன் நான் என்ன செய்வது?"

"முதலில் உன் படுக்கையை என்னோடு பகிர்ந்துகொண்டு, எனக்கு வேண்டிய உதவிகள் செய்வாய்?"

அவள் சிரிக்கத் தொடங்கினாள். பின் நாங்கள் அவள் வீட்டிற்குள் நுழைந்ததும், அவள் அடிமையை அழைத்து வீட்டை பூட்டச் சொன்னாள். வழக்கம்போல என் காதலுக்கு அவளை பதிலளிக்கச்சொன்னேன். உடனே அவள் மேற்கண்ட செய்யுளை உச்சரித்தாள். உச்சரித்து முடித்ததும் நான் அபூ நவாஸ் எனக்கு கற்பித்த செய்யுளை ஓதினேன்.

நான் அதை ஓதும்போதே அவள் மெல்லமெல்ல நடந்து தன்னை ஏந்திக்கொள்ளும்படி உடலை முறித்து பெருமூச்சுவிட்டதை கண்டேன். என் விருப்பத்தை பூர்த்திசெய்துகொள்ளும் தருணம் வந்துவிட்டதை உணர்ந்துகொண்டேன். அச்சமயம் ஓதுவதை நான் முடித்ததும், என் குறியானது தூணாகநிமிர்ந்து நின்று இன்னும் கூட வளர்ந்துகொண்டே வந்தது. பாஹேத் எல் தஜ்மல் இதைக்கண்டதும் துரிதமாக நடந்துவந்து, அதை தன் கைகளில் ஏந்தி, அவள் தொடைகளுக்கு நடுவில் கொண்டுபோனாள். பிறகு நான் கூறினேன். "என் விழிகளின் கண்மணியே, இதை இங்கே செய்யக்கூடாது, வா உன் படுக்கையறைக்குச் சொல்லலாம்."

அவள் பதில் அளித்தாள், "என்னை விட்டுவிடு, விபச்சாரியின் மகனே! கடவுளின் முன்பாக உந்தன் குறியானது அங்கியை தூக்கிக்கொண்டு இன்னும்கூட வளர்வதைக் கண்டதும் நான் அறிவிழந்துபோனேன். ஐயோ என்ன ஒரு ஆண்குறி! இதுபோல நான் பார்த்ததே இல்லை! எதைப்பற்றி விவரித்தபின் அதைக்கேட்டு எல்லோரும் பித்துபிடித்து திரிகிறார்களோ, அந்த சுவைமிகுந்த கொழுத்த அரவணைக்குள் உன்னுடையதை ஊடுருவச்செய்வாய்; எதனுடைய காதலுக்கு ஏங்கிறார்களோ அதற்காக நடத்துவாய்; உந்தன் மூத்தவர்களும் மேதைகளும் அடையமுடியாததை நீ அடைந்துவிட்டாய், அதற்காக செய்வாய்".

நான் திரும்பவும் சொன்னேன், "உன்னுடைய படுக்கையறை தவிர்த்து வேறெங்கிலும் செய்யமாட்டேன்".

அவள் பதிலளித்தாள்," மென் உணர்வுகொண்ட நிதம்பத்தில் இப்போதே நீ புகவில்லையெனில் நான் சாகப்போவது திண்ணம்."

ஆனால் அவளின் படுக்கையறைக்கு செல்வதைப் பற்றியே நான்

திரும்பத்திரும்பக் கூற, அவள் கத்தத் தொடங்கினாள். “இல்லை இப்போது நடவாது. என்னால் அவ்வளவு நேரம் தாங்கமுடியாது”.

நான் உண்மையில் அவள் உதடுகள் துடிப்பதையும், கண்களில் நீரையும் கண்டேன். பொதுவில் நடுக்கமானது அவள் உடல் முழுவதும் ஓட, அவள் தன்னுடல் நிறம்மாறி, மல்லாக்கப் படுத்து, தொடைகளை விரித்து, வெண் பளிங்கொத்த நிதம்பத்தின் நடுவில் கருஞ்சிவப்பான பிளவிருப்பதைக் காட்டினாள்.

நான் அவளது அல்குலை சோதித்துப் பார்த்தேன். மிருதுவான வசீகரம் பொருந்திய நடுவில் சிவப்பான வெண்ணிறக் குவிமாடம். அது ஆண்குதிரையை வரவேற்கும் பெண்குதிரை போலிருந்தது.

அக்கணத்தில் அவள் என் குறியை கைகளில் ஏந்தி முத்தமிட்டு சொன்னாள், ”எந்தன் தகப்பன் மதத்தின்மேல் சொல்கிறேன், என்னுடைய நிதம்பத்தை இது ஊடுருவுமாக!” அவள் என்னை அருகே இழுத்து குறியை தன் அரசிலைக்கு அருகே இழுத்தாள்.

நான் மேற்கொண்டு தாமதம் செய்யாமல், அல்குல்லின் வாசலில் என் குறியை வைத்தேன். என் குறியானது நிதம்பத்தின் இதழ்களைத் தொட்டதுதான் தாமதம், உணர்ச்சிபெருக்கில் பாஹேத் எல் தஜ்மலின் உடல் நடுங்கியது. பெருமூச்சுவிட்டு தேம்பியபடி அவள் தன் முலைகளுக்காய் என்னை அழுத்திப் பிடித்தாள்.

மறுபடியும் இந்தக்கணத்தில் அவளின் நிதம்பத்து அழகினை அள்ளிப் பருகினேன். வெண்ணிற தொடைகளின் ஒளியில் சிவந்தநிற மையம் மிளிர்ந்தது. அது வட்டமாக குறைபாடு ஏதுமின்றி இருந்தது. அடிவயிற்றின் கீழே அழகிய செதுக்கப்பட்ட துருத்தியிருக்கும் மாடமாக அது திகழ்ந்தது. ஒரேவார்த்தையில் சொன்னால் படைப்பானது தன்னால் இயன்றவரை அழகின் உச்சக்கட்டத்தை படைத்திருக்கிறது. பிரமாதமான படைப்பாளானான கடவுளின் ஆசிர்வாதங்கள் அதன்மேல் இருந்தன.

இந்த அற்புதங்களைப் பெற்றிருந்த அந்த பெண் மேம்பட்டவளாகயிருந்தாள்.

அவளை இந்தநிலையில் பார்த்தபொழுது, அதாவது தொண்டை அறுக்கப்பட்ட ஒரு பறவையென உடல் நடுங்கிக் கொண்டிருந்தபொழுது, நான் அவளுள் என் தண்டத்தை செலுத்தினேன். ஆனால் மொத்த தண்டத்தையும் அவளால் உள்வாங்கமுடியும் என்று நான் நினைக்கவில்லை, அதனால் எச்சரிக்கையுடன் செலுத்தினேன், ஆனால் அவளோ தன் பிருஷ்டபாகத்தை ஆவேசமாக முன்னால் தள்ளி,

என்னிடம் சொன்னாள்: "என் திருப்திக்கு இத்தளவு போதாது" இதனால் வலுகொண்டு அழுத்தி என் குறியை அவளுக்குள் மொத்தமாக நுழைத்தேன், அப்போது அவள் வலியால் கத்தினாள், ஆனால் அடுத்தநொடியில் முன்பைவிட ஆவேசமாக இயங்கினாள். அவள் பின்வருமாறு கூவினாள்: "மூலைமுடுக்குகளை தவறவிடாதே, மேலுமல்ல கீழுமல்ல, ஆனால் எல்லா விஷயத்திற்கும் மேலாக மையத்தை தவறவிடாதே! மையம்!" அவள் திரும்பவும் சொன்னாள். "உனக்கு வருவது போல் தோன்றினால் என் கருப்பைக்குள் விட்டு நெருப்பை அணைப்பாயாக". பிறகு சுவைமிகுந்த அக்காரியத்தில் ஒருவர் மாற்றி ஒருவரென இயங்கினோம். எங்களின் கால்கள் பின்னிக்கொண்டிருக்க, தசைகள் இறுகிப்போயிருக்க, முத்தங்களாலும் அணைப்புகளாலும் மெய்மறக்க, இறுதியில் இருவரும் ஒரேசமயத்தில் உச்சக்கட்டத்தை தொட்டோம்.இந்த மௌனப் போராட்டத்திற்குபின் நாங்கள் மூச்சை வாங்கிக்கொண்டு ஓய்வெடுத்தோம்.

நான் குறியை வெளியே எடுத்துவிட நிச்சயித்துக்கொண்டேன், ஆனால் அவள் கெஞ்சிகூத்தாடி வேண்டாமென்றாள். அதனால் அவள் விருப்பத்திற்கு அடிபணிந்தேன், ஆனால் சிலவிநாடிகளுக்கு அவளே அதை வெளியில் எடுத்து, நன்றாக் ஈரம்போக துடைத்து மீண்டும் நிதம்பத்தில் வைத்துக்கொண்டாள். நாங்கள் புதிதான் ஆட்டத்தை தொடங்கி, முத்தமிட்டோம், அழுத்தினோம் மற்றும் தாளகதியில் இயங்கினோம். குறைந்த நேரத்தில் நாங்கள் எழுந்துக்கொண்டு, அவள் படுக்கையறைக்குள் நுழைந்தோம், ஆனால் காரியத்தை வெற்றிக்கரமாக முடிக்காமல். இப்போது அவள் வேறொன்றை கொடுத்து என் வாயில் அடக்கிவைத்துக்கொள்ளச் சொன்னாள். அது என் வாயில் உள்ளவரை குறியின் விரைப்பு குறையாது என உறுதியும் அளித்தாள். பிறகு என்னை கீழே மல்லாந்து படுத்துக்கொள்ளும்படி கேட்க அதேபோல் செய்தேன். அவள் என்மீது ஏறி அமர்ந்து, குறியை கைகளில் ஏந்தி, முழுவதையும் தன் யோனிக்குள் புகுத்திவிட்டாள். அவள் நிதம்பத்தின் வீர்யம்கண்டு, அதனுள்ளிருந்து புறப்படும் வெப்பத்தைக்கண்டு நான் பிரமித்துப் போனேன். குறிப்பாக, அவளின் கருப்பையின் திறப்பே எனக்கு ஆச்சரியத்தை அளித்தது. அது எனது குறியை இறுகப் பற்றிக்கொண்டு கிள்ளியது.

பாஹேத் எல் தஜ்மல்லை தவிர்த்து எந்தவொரு பெண்ணும் என் குறியை தன் நிதம்பத்தில் முழு அளவில் உள்வாங்கியதில்லை. ஆனால் அவள் வாங்கினாள், அவள் கொழுத்தும் பருத்தும் இருந்ததால் இதைச் செய்ய முடிந்தது என நான் நம்புகிறேன் மற்றும் அவளின் அரசிலையானது பெரிதாகவும் ஆழமாகவும் இருந்தது.

பாஹேத் எல் தஜ்மல் என்மீது கால்களை அகலவிரித்தமர்ந்தபடி எழுவதும் திரும்ப அமர்வதுமாக இருந்தாள்; அவள் அழுவதும் தேம்புவதுமாக, நிதானமாகி பின் திரும்பவும் தன் இயக்கத்தை வேகப்படுத்தி, அதன்பின் சற்றுநேரம் நிறுத்தினாள். என் குறியின் பகுதியளவு வெளியே தெரிய, அவள் அதைப்பார்த்து, பின் வெளியில் எடுத்து கிட்டத்தில் உற்றுப்பார்த்து ஆராய்ந்து, பின் தனக்குள் மூழ்கடிக்க அது முற்றிலும் மறைந்தே போனது. அதனால் அவள் திரும்பவும் சந்தோஷம் அடையும்வரை இயங்கிக்கொண்டே இருந்தாள். கடைசியில் அவள் என்மீதிருந்து கீழிறங்கி, பக்கமாக மல்லாக்க படுத்து, அவள் மேல் என்னை ஏற சொன்னாள். நானும் அவ்வாறே செய்ய, அவள் குறியை அவள் நிதம்பத்திற்க்கு அறிமுகம் செய்துவைத்து அதனுள் முழுவதுமாக போகவைத்துவிட்டாள்.

நாங்கள் தொடர்ந்து கைகளால் தடவிக்கொள்வதும், நிலைகளை மாற்றிக்கொள்வதுமாக இருக்க இரவுபொழுதும் வந்தது. இப்போது அவளை விட்டுவிலக நேரம்வந்தது எனநான் நினைக்க, ஆனால் அவளோ அதற்கு சம்மதியாமல், நான் அவளுக்கு சத்தியம் செய்து தந்த வார்த்தைகளை காப்பாற்ற வேண்டுமென கூறினாள். எனக்குநானே கூறிக்கொண்டேன், “இந்தப் பெண் என்னை விடமாட்டாள் போலிருக்கிறதே, எனினும் நாள்பொழுது வந்துவிட்டால் கடவுள் என்னை காப்பாற்றுவார்”. நான் அவளுடனே இருந்துக்கொண்டு, இரவு முழுவதும் ஒருவரை ஒருவர் தடவுவதுமாக இருக்க, கொஞ்சநேரமே ஒய்வு எடுத்துக் கொண்டோம்.

நாளிலும் இரவிலுமாக நான் இயங்கிவந்ததை நான் கணக்கெடுத்துக்கொள்ள, மொத்தம் இருபத்தேழு முறை புணர்ந்திருக்கிறேன் என்று கண்டுகொண்டேன், அதனால் இந்த பெண்ணின் வீட்டைவிட்டு தான் வெளியேறவே போவதில்லையோ என்று பயமும் கொண்டேன்.

எனினும் கடைசிதடவையாக அவளிடமிருந்து தப்பித்திக்கொண்டு, நான் அபூ நவாஸிடம் சென்று நடந்ததை எல்லாம் உரைத்தேன். அவர் திகைத்திருந்து பின் ஆச்சரியப்பட்டார், அவரிடமிருந்து உதிர்ந்த முதல் வார்த்தைகள், “ஓ ஜொய்டி, இதுபோன்ற பெண்ணிடத்தில் உந்தன் ஆளுமையோ அதிகாரமோ செல்லுபடியாகாது, நீ மற்ற பெண்களிடம் இதுவரை அனுபவித்ததற்கு ஈடாக அவள் உன்னிடம் வேலை வாங்கிவிடுவாள், ஜாக்கிரதை.”

இருப்பினும் பாஹேத் எல் தஜ்மல் என்னிடம் சமூகத்தில் அவளைப்பற்றி நிலவும் வதந்திகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கும்வகையில்,

சட்டத்திற்குட்பட்ட கணவனாக என்னை ஆகும்படி கேட்டுக்கொண்டாள். எனினும் நானோ அவளை கள்ளக்காதலியாக வைத்துக்கொள்ளவே விரும்பினேன். இதனால் அபூ நவாஸிடம் மறுபடியும் ஆலோசனை கேட்க அவர் என்னிடம் கூறினார், “நீ மட்டும் பாஹேத் எல் தஜ்மலை மணம் செய்துகொண்டால், உன் உடல்நலம் அழிந்துபோகும், கடவுள் உன்னை காப்பாற்றுவதிலிருந்து விலகிக்கொள்வார், அவற்றையெல்லாம் விட அவள் உன்னை வசியப்படுத்தி பொம்மையாக்கி விடுவாள், ஏனெனில் அவள் நிதம்பத்தை பொறுத்தமட்டில் திருப்தியடையாதவள், உன்னை அவமானம் அடையச்செய்து விடுவாள்.” நான் அவருக்குப் பதிலளித்தேன், “எல்லா பெண்களின் குணமும் இதுதான்; அவர்களின் நிதம்பத்தை பொறுத்தமட்டில் திருப்திக்கொள்ளாதவர்கள் ,அவர்களின் காமத்தை திருப்திப்படுத்த, அவர்கள் விதூஷகனோ, நீக்ரோவோ அல்லது சமுதாயத்தால் நிந்திக்கப்படுபவனோ அவன் யாராக இருந்தாலும் அவனை கைக்கொள்வார்கள்”.

இந்த நிலையில் அபூநவாஸ் அவர்கள் பெண்களின் குணங்களைப்பற்றி பின்வரும் செய்யுளைப் பாடினார்.

## அத்தியாயம்—X

# மிருகங்களின் சந்ததி உற்பத்திக்கான உறுப்புகள்

ஓ, ஊசூரே! (கடவுளின் அருள் உமக்கு வாய்க்குமாக) அறிக. பல்வேறு ஆண்மிருகங்களின் காம உறுப்புகள் யாவும் நான் முன்பே சொல்லியிருந்த உறுப்புகளிலிருந்து வேறுபட்டன.

விலங்குகளின் விரைத்திருக்கும் உறுப்புகள் அவை சேர்ந்திருக்கும் இனத்திற்கேற்ப, மொத்தம் நான்கு வகைப்படும்.

குளம்புகளுள்ள குதிரை, கழுதை, கோவேறு கழுதைகளின் விரைத்திருக்கும் குறிகள் மிகவும் பெரிதானவையாகும்.

பெரும் அளவிலானது.

சுருண்டிருக்கும் பாம்பு.

பிரிந்திருப்பது.

பெருந்தடி.

வெல்லமுடியாதது.

வீங்கியது.

ஒற்றைத்தலையுடன் கூடியது.

தொப்பியுடன் கூடியது.

குறிபார்க்கும் குண்டாந்தடி.

பாலம்

மரச்சுத்தியல்

சண்டையிடுவது

ஒருவகையான கால்களையுடைய உதாரணத்திற்கு ஒட்டகச்சிவிங்கி, விரைத்திருக்கும் உறுப்புகள்

வெளிப்படையாகத் தெரிவது

நீளமானது.

நாடா போன்றது

உறுதியானது

ஆடுவது

மறைந்திருப்பது

குடுமி

மெதுவாக இயங்குவது

## 3. பிளவுண்ட கொம்புகள் இருக்கும் காளை, ஆடு முதலியன. இவற்றின் விரைத்த உறுப்புகள்:

நரம்பு.

கம்பி.

சவுக்கு.

சிறு தலை.

நீளமான ஒன்று.

ஆண் ஆடு.

நடுங்குவது.

இறுதியாக வளைந்த நகங்கள் கொண்ட சிங்கம், நரி, நாய் போன்ற விலங்குகளின் விரைத்திருக்கும் உறுப்புகள்.

விரைத்திருப்பது.

மாபெரும் உறுப்பு.

நீண்டுகொண்டே இருப்பது.

பொதுவான நம்பிக்கை யாதெனில், கடவுளின் படைப்பினில் மிருகங்களில், புணர்ச்சியை பொறுத்தளவில் சிங்கமானது அதீத புத்திசாலி விலங்காகும். ஒரு பெண் சிங்கத்தை கண்டுவிட்டால் புணர்ச்சிக்கு முன்பாக அதை ஆராய்ந்து பார்க்கும். பெண்சிங்கம் முன்னமே வேறொரு ஆண்சிங்கத்தோடு புணர்ந்துள்ளதா என்பதை அறிந்துகொள்ளும். அந்த பெண்சிங்கம் அதனருகில் வரும்வேளையில் அதை முகர்ந்து பார்க்கும், ஏதாவது காட்டுப்பன்றி அதை புணர்ந்திருக்கிறதா என்பதை உடனடியாக அறிந்துகொள்ளும், எப்படியெனில் அவ்விலங்கானது அதன்மேல் விட்டுசென்றிருக்கும் வாசனையை வைத்து. பிற்பாடு அதன் சிறுநீரை சோதிக்கும், முடிவு அதற்கு எதிராகப் போய்விட்டால், உடனே கடுங்கோபம் கொள்ளும், தன் வாலை இடமும் வலமுமாக அடித்துக்கொள்ளும். அந்நேரத்தில் அது பக்கமாக எவ்விலங்கு சென்றாலும் அதன்கதி அதோகதிதான்!அது பலப்பல துண்டுகளாக கிழித்தெறியப்படும்; பிறகு அது பெண்சிங்கத்திடம் திரும்பிவர அச்சிங்கம் எல்லாம் இதனற்கு தெரிந்துபோய்விட்டதே என்ற அச்சத்தால் நடுநடுங்கும். அது திரும்பவும் பெண்சிங்கத்தை முகர்ந்து, மலையே நடுங்குகிறாற்போல் பயங்கரமாக கர்ஜிக்கும், பின் அதன் பின்பக்கம் சட்டென்று பாய்ந்து தன் நகங்களால் கிழிக்கும்.அத்துடன் நிற்காமல் கொலைகூடச் செய்யும், பின் தன் சிறுநீரை அதன் உடலெங்கும் அடித்து அசிங்கப்படுத்தும்.

சிங்கம் ஒன்றே எல்லா விலங்குகளைவிட அதிக புத்திசாலித்தானம் வாய்ந்தது, அதேநேரம் அதிகளவு பொறாமை வாய்ந்தது என நம்பப்படுகிறது. தன்னிடம் புகழத்தக்க வார்த்தைகளை கூறும் ஒருவனை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடும் தயாளகுணமும் கொண்டிருப்பதாகவும் கூறப்படுகிறது.

இந்த சிங்கத்தை ஒரு ஆண்மகன் பார்த்துவிட்டால் உடனே தனது துணியை உயர்த்தி குறியை காட்டிவிட்டால் உடனே அது ஓடிவிடும்.

’டானியேல்’, (அவருக்கு புகழ் உண்டாகுக) இந்தப் பெயரை சிங்கத்திடம் கூறினால் உடனே அது பதறியடித்துக்கொண்டு ஓடிவிடும்; ஏனெனில் நமது தீர்க்கதரிசியானவர் (அவருக்கு புகழ் உண்டாகுக) டானியேல் என்ற பெயரைச் சொல்லியே சிங்கத்தைப் புணர்ந்தார். எனவே இந்தப் பெயரை உச்சரித்தால்போதும். சிங்கம் ஏதும் செய்யாமல் போய்விடும். சில சம்பவங்கள் இந்த விஷயத்தை நிரூபணம் செய்திருக்கின்றன.

## அத்தியாயம்—XI

# பெண்களின் வஞ்சகங்களும் தந்திரங்களும்

அறிக, ஓ ஊசூரே! (கடவுள் அவருக்கு நல்லது விளைவிப்பாராக) பெண்ணுடைய தந்திரங்கள் யாவும் தனித்து இருப்பன, எண்ணற்றவை ஆகும். அவர்களுடைய தந்திரங்கள் சாத்தானைகூட ஏமாற்றிவிடும். எல்லோரையும்விட உயர்ந்த கடவுளானவர் சொல்லியுள்ளதாவது: (திருக்குர்ஆன், அத்தியாயம் 12 செய்யுள் 28) பெண்களின் தந்திரங்கள் சிறப்பு வாய்ந்தவையாகும், மேலும் அவர் (திருக்குர்ஆன் செய்யுள் 38) அவற்றை ஒப்பிடும்போது சாத்தானின் தந்திரங்கள் பலவீனமானவையாகும். சாத்தான் மற்றும் பெண்ணுடைய தந்திரத்தை கடவுளின் வார்த்தை கொண்டு ஒப்புமைப்படுத்தி பார்த்தால், அதாவது இவ்விரு செய்யுள்களிலும் உள்ளதை ஒப்புநோக்கினால், பெண்ணாகப்பட்டவள் எவ்வளவு சூழ்ச்சித்திறம் மிக்கவள் என்பது விளங்கும்.

ஏமாற்றப்பட்ட கணவன் இறுதியில் நம்பிக்கையற்றவனாக ஆதல்.

கற்பனை செய்யக்கூடிய எல்லா அழகும் வாய்ந்த மாபெரும் அழகில் தோய்ந்த ஒரு பெண்ணின்மேல் ஒருவன் ஆசை கொண்டான். அவன் அவளை அடைய எல்லாமுயற்சிகளையும் செய்து பார்த்தான், ஆனால் அவையெல்லாமே புறம் தள்ளப்பட்டன; பிறகு அவன் அவளுக்கு விலையுயர்ந்த பரிசுப்பொருட்களை அள்ளி வழங்கினான், ஆனால் அவை ஏறெடுத்தும் பார்க்கப்படவில்லை. அவன் புலம்பினான், புகார் செய்தான், தன் பணத்தையெல்லாம் வீணாக இலக்கில்லாமல் இறைத்தான், பிற்பாடு செங்கோலாக இளைத்துப்போனான்.

இதேபோல் கொஞ்சநாட்கள் தொடர்ந்து நடந்துவர, அச்சமயத்தில் அவன் ஒரு வயதான பெண்ணுடன் பழக்கப்பட்டான். அவள் அவனது நம்பிக்கைக்கு பாத்திரமாகவே தன் கசப்பான அனுபவங்களை அவளிடத்தில் உரைத்தான். அவள் அவனுக்கு தேறுதல் கூறி, கடவுளின் ஆணைக்கிணங்க நான் உனக்கு உதவுகிறேன் என்று உறுதி கூறினாள்.

இதன்பேரில் அவள் அந்த பெண்ணுடைய வீட்டை நோக்கி புறப்பட்டு போனாள், போய் அவளுடன் இதைப்பற்றி ஏதாவது பேசலாம் என எண்ணம் கொண்டாள். ஆனால் அவள் வீட்டை அடைந்ததும் பக்கத்துவீட்டுக்காரி, நீ இவ்வீட்டினுள் போக இயலாது,ஏனெனில் அவள் வீடானது கொடூரமான நாயால் காவல் காக்கபடுகிறது எனவும், யாரையும் உள்ளே போகவோ அல்லது வெளியே செல்லவோ அனுமதிக்காது, அந்த பெண் நாயின் வெறுப்பானது மக்கள் முகங்களை கண்டாலே எரியும் என்றும் கூறினாள்.

இதைக் கேட்டவுடன் அந்த வயதான் பெண்மணி அகம்மகிழ்ந்து, அவளிடம் கூறினாள், “கடவுளின் ஆணைக்கிணங்க நான் வெற்றி பெறுவேன்”. பிறகு அவள்தன் வீட்டிற்கு சென்று கூடையில் கறித்துண்டுகளை நிரப்பிக்கொண்டாள். இவ்வாறு முன்னேற்பாடு செய்துக்கொண்டதும், அந்த பெண்ணின் வீட்டை அடைந்து உள்ளே போனாள்.

அந்த பெண் நாய் அவளை பார்த்ததும் பாய தயாரானது;ஆனால் அவளோ நாயின் முன்னே தான் எடுத்து வந்திருந்த கூடையை காட்ட, அம்மிருகம் கறித்துண்டுகளை கண்டதும் வாலை ஆட்டி குழைந்தது.அந்த வயதான பெண்மணி கூடையை அதன்முன்னே வைத்துவிட்டு பின்வருமாறு பேசினாள், “என் சகோதரியே உண்ணுவாய். நீ இல்லாமலிருந்தது எனக்குள் சோகத்தை தருகிறது; உனக்கு என்ன ஆனது என்றே தெரியாமல் இருந்தேன், இவ்வளவு நாட்களாக உன்னை தேடிக்கொண்டே இருந்தேன். இப்போது உந்தன் பசியை தீர்த்துக் கொள்வாயாக!”

அந்த மிருகம் உண்டுகொண்டிருக்கும்போதே, கிழவியானவள் அதன் முதுகை தடவிக்கொடுத்தாள். அப்போது வீட்டிக்குள்ளிருந்த அந்த பெண் வெளியே வந்து, அந்நியமான ஒரு பெண்ணிடம், யாரையும் கிட்டே சேர்க்காத பெண்நாய் நட்புடன் இருப்பது கண்டு பெருத்த ஆச்சரியம் அடைந்தாள். அவள் சொன்னாள், “ஓ கிழவியே, இந்த நாய் உனக்கு எப்படி பழக்கமானது?” ஆனால் கிழவியொ பதிலேதும் கூறாமல், நாயை தடவிக்கொண்டே புலம்பினாள்.

பிறகு வீட்டு எஜமானி அந்த கிழவியிடம் கூறினாள், “உன்னுடைய நிலை கண்டு என் இதயம் துடிக்கிறது. உன் சோகத்திற்கு காரணம் என்னவோ?”

அந்தக் கிழவி பதில் சொன்னாள், “இந்த பெண்நாய் முன்பு ஒரு பெண்ணாக இருந்தது, அப்போது என் உயிர்த்தோழியும்கூட. ஒருநாள் திருமணம் ஒன்றுக்கு இவள் என்னுடன் அழைக்கப்பட்டிருந்தாள்; இவளும் பிரமாதமான ஆடைகளையும் அற்புத நகைகளையும் அணிந்துக்கொண்டாள். பிறகு நாங்கள் இருவரும் அந்நிகழ்ச்சிக்கு சென்றோம். செல்லும் வழியில் அவளது பிரமிப்பூட்டும் அழகை கண்டு ஆண் ஒருவன் காதல்வயப்பட்டான்;ஆனால் இவளுக்கோ அதில் சம்மதமில்லை. பின் அவன் அற்புதமான பரிசிகளை அள்ளித்தந்தான். அவைகளையும் மறுத்துவிட்டாள்; சிலநாட்களுக்குப் பின்னர், அந்த ஆண்மகன் அவளை சந்தித்து, “என் விருப்பத்திற்கு இணங்கிவிடு, அல்லவெனில் கடவுளிடம் சொல்லி உன்னை பெண் நாயாக

ஆக்கிவிடுவேன்" என்று பயமுறுத்தினான். அவளும் அதற்கு "உன்னால் ஆன மந்திரத்தை காட்டு பார்க்கலாம்", என்று கூறிவிட்டாள். உடனே அந்த ஆணும் சொர்க்கத்தை விளித்து அந்தப் பெண்ணை நாயாக்கிவிட்டான். அதுவே இந்த பெண்நாய்" என்றாள்.

உடனே வீட்டு எஜமானி 'ஓ'வென்று அழுது புலம்ப ஆரம்பித்து சொன்னாள், "ஐயோ தாயே! எனக்கும் இதே விதிதான் வாய்க்கும்போலுள்ளதே". "ஏன், நீ என்ன செய்தாய்?" என்று அந்த கிழவி கேட்டாள். அதற்கு மற்றவள் பதில் கூறினாள், "ஆணொருவன் என்னை விடாமல் காதலித்து வந்தான், நான் அவன் விருப்பத்திற்கு மறுத்துவிட்டேன், அவன் எச்சில் காயும்வரை பேசி, அது காய்ந்துபோனாலும், அவனது பேச்சையும் கேட்கவில்லை, மற்றும் அவன் எனக்காக எக்கச்சக்கமாக செலவுசெய்தும் அவனது ஆசைகளுக்கு நான் சம்மதம் தெரிவிக்கவில்லை, இப்போது என் தாயே, அவன் கடவுளை அழைத்து என்னை சாபமிட்டுவிடுவானோ என்று அஞ்சுகிறேன்".

"இந்த ஆண்மகனை எவ்வாறு அறிவது என்று என்னிடம் சொல்வாயாக" என்று அந்தக் கிழவி கூறினாள். "ஏனெனில் நீயும் இந்த நாய்போல் ஆகிவிடுவோயோ என்று பயப்படுகிறேன்".

"ஆனால் அவனை எவ்விதம் கண்டுபிடிப்பாய்? நான் யாரை அவனிடம் அனுப்புவேன்?"

கிழவி பதிலளித்தாள், "என் மகளே, உனக்காக இந்த வேலையைச் செய்கிறேன், அவனை நான் கண்டுபிடிப்பேன்". "விரைந்து செயல்படுவாய் தாயே, கடவுளிடம் கூறி எனக்கு சாபமிடுவதற்குமுன் அவனை சந்திப்பாயாக". "அவனை இன்றே கண்டுபிடிப்பேன்" என்று பதிலளித்த கிழவி, "நீ அவனை நாளை சந்திப்பாய்" என உறுதி கூறினாள்.

இத்துடன் கிழவி நீங்கிவிட்டு, அதேநாளில் அவளின் நம்பிக்கையை பெற்ற அந்த ஆணை சந்தித்து சந்திப்பானது நாளை ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதென சொன்னாள்.

அடுத்த நாளில் அந்த வீட்டு எஜமானி கிழவியின் இல்லம்நோக்கி சென்றாள், ஏனெனில் அங்குதான் சந்திப்பு நிகழ்வதற்கு ஒப்புக்கொண்டிருந்தனர். அவள் வீட்டிற்கு வந்து சிலநேரம் காத்திருந்தும், காதலன் இன்னும்கூட வருவதாகக் காணோம். வேறு ஏதோ முக்கியமான காரியம் அவனை தடுத்துக்கொண்டிருக்கிறது என்பதில் ஐயமில்லை.

கிழவி இந்தப் பாதக நிகழ்வை தனக்குள் யோசித்துப் பார்த்தாள், “கடவுளைத் தவிர உயர்ந்த சக்தி உலகில் வேறேதுமில்லை”. ஆனால் அவனை தடுப்பது எதுவாக இருக்கும் என்று யோசித்துப் பார்த்தாள். அந்த எஜமானியைப் பார்த்து, அவள் காமவேதனையில் துடித்துக்கொண்டிருக்கிறாள் என்றும் இப்போதே அவளுக்கு புணரவேண்டுமெனவும் தெரிந்து கொண்டாள். எஜமானி மேன்மேலும் துடிக்கத்தொடங்கி கேட்டாள், “அவன் ஏன் இன்னும் வரவில்லை?” கிழவி பதிலளித்தாள், “எந்தன் மகளே, ஏதோ முக்கியமான காரியம் அவனை தடுத்திருக்க வேண்டும், குறிப்பாக பயணம் போன்று ஏதாவது வந்திருக்க வேண்டும். ஆனால் இதுபோன்ற சூழ்நிலையில் உனக்கு நன் உதவுகிறேன்”. பின் வலைத்துணியை போர்த்திக்கொண்டு அந்த இளைஞனை தேடி வெளியே சென்றாள். ஆனால் அதனால் பயனேதும் விளையவில்லை, அவனைப்பற்றி ஒருவார்த்தைக்கூட கிழவியால் அறிந்துகொள்ள முடியவில்லை.

இன்னும் தேடியபடியிருந்து கிழவியானவள் எண்ணிக்கொண்டாள். “இந்தப் பெண்ணானவள் ஒரு ஆணுக்காக ஏங்கி நிற்கிறாள். அதனால் அவள் மோகத்தை அடக்க மற்றொரு ஆண்மகனை நாம் ஏன் தேடக்கூடாது? நாளை காலை பழைய ஆண்மகனையே அவளிடத்தில் கொண்டுவந்து சேர்ப்பேன்”. இவ்வாறு எண்ணமிட்ட கிழவி ஒரு வாலிபனைக் கண்டுபிடித்தாள், அவன் அவளது மோகத்தை தணிப்பானென்று தோன்றியது,அதனால் அவனிடம் பேசினாள். “ஓ, என் மகனே… நான் உனக்கு குறைகளற்ற அழகான வசீகரம் பொருந்திய இளம் பெண்ணொருத்தியிடம் அழைத்துச்சென்றால், நீ அவளைப் புணருவாயா?” “உன் வார்த்தைகள் உண்மையானால் இந்த தினார் பணத்தை உனக்குத் தருகிறேன்!” அந்த வாலிபன் கூறினான். கிழவியும் அகமகிழ்வுடன் அந்த பணத்தை பெற்றுக்கொண்டு வாலிபனை ஏற்பாடு செய்திருந்த வீட்டிற்கு அழைத்துப் போனாள்.

ஆனால் அவனை அழைத்துவந்த கிழவிக்கு அவன்தான் அந்த வீட்டு எஜமானியின் உண்மையான கணவன் என்ற விஷயம் தெரியாது, அதை பின்புதான் தெரிந்துகொண்டாள். முதலில் அக்கிழவி வீட்டிற்குள் சென்று எஜமானியிடம் கூறினாள், “என்னால் உன் காதலனைப்பற்றி அறியவே முடியவில்லை. அதனால் அழைத்துவர முடியவில்லை, ஆனால் இன்று உன் தாகத்தை தணிக்க வேறொரு ஆணை அழைத்துவந்திருக்கிறேன். நாளைக்கு அந்த ஆணை பார்த்துக் கொள்ளலாம். கடவுள் இதுபோல் என்னை செய்யத் தூண்டியிருக்கிறார்”.

எஜமானி ஜன்னலருகே சென்று வந்திருக்கும் ஆண்மகனை பார்க்க விழைந்தாள், அவனைப் பார்த்தவுடன் உடனே தன் கணவன்தான் என்பதை உணர்ந்துகொண்டாள். அடுத்தநொடி சற்றும் தாமதியாமல், தன் வலைத்துணியை மேலே போர்த்திக்கொண்டு, நேராக அவனிடத்தில் சென்று, அவன் முகத்தில் அடித்து, உணர்ச்சிவசப்பட்டு கூவினாள், “கடவுளுக்கும் உனக்கும் எதிரியானவனே, இங்கு என்ன செய்கின்றாய்? நிச்சயமாக நீ கள்ளக்காதல் புரியவே இங்கே வந்துள்ளாய். நான் நெடுநாட்களாகவே உன் நடத்தைமீது ஐயப்பட்டுக்கொண்டிருந்தேன், அதனால் தினந்தோறும் இவ்வீட்டிற்கு வந்து இந்தக் கிழவியை உனக்காக அனுப்பிவைத்துவிட்டு காத்திருப்பேன். இன்றுதான் உன்னைக் கண்டேன், மறுப்பதற்கு ஒன்றுமில்லை. நீ யோக்கியன் என்றே என்னிடம் சொல்லிவந்திருக்கின்றாய்! உன்னுடைய வண்டவாளம் தெரிந்துவிட்டதால் இன்றே உன்னை விவாகரத்து செய்யப்போகிறேன்!”

கணவன், தன் மனைவி கூறுவது உண்மையென்றே நம்பி வெட்கங்கொண்டு அமைதியுடனிருந்தான்.

இதிலிருந்து பெண்களின் வஞ்சகத்தன்மை எத்தகையது என்றும் அவர்கள் துணிவதற்கு எல்லையேதும் கிடையாது என்பதையும் அறிந்துகொள்வாய்.

தன் விருப்பத்திற்கு எதிரான காதலன்.

ஒரு குறிப்பிட்ட பெண், தன் பக்கத்து வீட்டுக்காரனை நேசித்தாள், அவன் ஒழுக்கத்திற்கும் கடவுள் பக்திக்கும் பேர்போனவன். அவள் தன் விருப்பத்தை அவனிடம் சொன்னாள்; ஆனால் அவளின் சாதுர்யமும் தந்திரமும் அவனிடம் எடுபடவில்லை. இதனால் தன் விருப்பத்தை நிறைவேற்றி திருப்தியடையாமல் அவள் ஆசையை நிறைவேற்றத் துணிந்தாள்.

ஒருநாள் மாலைவேளையில் தன் நீக்ரோ வேலைக்காரியை விளித்து, அந்த ஆணுக்கு தான் பொறியொன்று வைத்துள்ளதாகவும், இதனால் அவளின் கட்டளைப்படி நீக்ரோ வேலைக்காரி வெளிப்புறக்கதவை திறந்து வைத்திருக்க வேண்டுமென ஆணையிடப்பட்டாள். பின் நள்ளிரவில் அந்த வேலைக்காரியை அழைத்து பின்வருமாறு கட்டளையிட்டாள். “நீ சென்று நம் வெளிப்புறக்கதவை கல்லைக்கொண்டு பலமாக தட்டு, அதேநேரத்தில் நான் உள்ளிருந்து கத்துவேன், பண்டபாத்திரங்களை உருட்டுவேன், ஆனால் அச்சப்தங்களை நீ கண்டுகொள்ளக்கூடாது. இதேபோல் தொடர்ந்து

செய், அப்போது பக்கத்துவீட்டுக்காரன் தன்வீட்டுக்கதவை திறக்கு ஓசையை கேட்டதும் சட்டென்று உள்ளேவந்து, உட்புறக்கதவையும் பலமாக தட்டு. எச்சரிக்கையாக இரு, அவன் உன்னை பார்த்துவிடக்கூடாது, யாரேனும் வருவதை பார்த்தால் உடனே உள்ளே வந்துவிடு". அந்த நீக்ரோ வேலைக்காரியும் குறித்தநேரத்தில் கட்டளையை நிறைவேற்றினாள்.

அடுத்த வீட்டுக்காரன் எப்போதுமே அடுத்தவருக்கு உதவுபவன், துன்ப துயரத்தில் உள்ள மக்களுக்கு பணிசெய்பவன். பக்கத்துவீட்டில் கல்கொண்டு தாக்கும் ஓசையினையும், பக்கத்துவீட்டுக்காரி கூச்சலிடும் சப்தத்தையும் அவன் கேட்டான், உடனே இந்த சப்தம் என்னவோ என்றுகேட்க, மனைவியும் பதிலளித்தாள், "கூச்சலிடும் ஓசை பக்கத்து வீட்டுக்காரியுனுடையது, அவள் வீட்டை திருடர்கள் தாக்குகிறார்கள் என்னமோ". உடனே அவன் அவளுக்கு உதவி செய்வதற்காக விரைந்தான்; ஆனால் அவ்வீட்டிற்குள் அவன் நுழைந்ததும் நீக்ரோ பெண் கதவை தாளிட்டுவிட்டாள். எஜமானி அவன் கைகளைப் பிடித்துக்கொண்டு பலமாக கூக்குரலிட்டாள். அந்த மனிதன் இதை எதிர்த்தான். அந்த எஜமானியும் தற்காலிமாக கூச்சலிடுவதை நிறுத்திவிட்டு பின்வரும் நிபந்தனையை விதித்தாள். "நீ என்னை உடலுறவில் மகிழ்வடைய செய்யவேண்டும், அல்லவெனில் நீ வீடுபுகுந்து என்னை கெடுப்பதற்கு முயற்சி செய்கிறாய் என்றும் அதனால்தான் கூச்சலிட்டேன் என்றும் ஊராரிடம் கூறுவேன்". "கடவுளின் செயல் நடக்கட்டும்" என்று சொன்ன அந்த மனிதன், "யாருமே அவனுக்கு எதிராக நடக்கமுடியாது, யாருமே அவன் வல்லமையிலிருந்து தப்பவும் முடியாது", என்றும் கூறினான். பின்னர் அவளிடமிருந்து தப்பிப்பதற்காக பல்வித தந்திர உபாயங்கள் செய்து பார்த்தான், ஆனால் எல்லாமே பயனற்றவை ஆகிவிட்டன. எப்படியெனில் அவள் கூச்சலிட்டு இட்டு, பல நல்லமாந்தர்களை தன் வீட்டின்முன் கூட்டிவிட்டாள். அவனோ தான் தொடர்ந்து மறுத்துக்கொண்டிருந்தால் தனது பெயர் கெட்டுவிடுமோ என்றஞ்சி அவளிடம் அடைக்கலம் புகுந்தான், "என்னைக் காப்பாற்று, நான் உன்னை மகிழ்விக்க தயாராக இருக்கிறேன்", என்றும் சொன்னான். "அப்படியானால் படுக்கையறைக்கு சென்று கதவை தாழிட்டுக்கொள்வாய்" என்று அந்த எஜமானி கூறிவிட்டு, மேலும் சொன்னாள் "நீ மரியாதையுடன் வீட்டைவீடு வெளியேற வேண்டுமானால், இங்கிருந்து தப்பிக்க நினைக்காதே மற்றும் மக்கள் யாவரும் இங்கே நிகழ்ந்த கூச்சல் குழப்பங்களுக்கு காரணமே நீதானென தெரிவிக்க முயலாதே". கொண்டகாரியத்தில்

அவளிருக்கிருந்த மனவுறுதியை கண்ட அவனும் அவள் சொல்படியே நடந்துகொண்டான். அவளும் தன் பங்குக்கு தனக்கு உதவவந்த அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்களிடம் ஏதோ சொல்லி அனுப்பிவைத்து விட்டாள். அவளை ஆறுதல்படுத்தி அவர்களும் சென்றுவிட்டனர்.

தனியாக நின்ற அவளும் ஒன்றும் செய்யமுடியாமலிருந்த தன் காதலனிடம் திரும்பி போனாள். அவனை ஒருவார காலம் தன்னுடனே வைத்திருந்து கந்தல்கந்தலாக்கி பின்பே போகவிட்டாள்.

இக்கதையிலிருந்து ஒரு பெண்ணானவள் தன் காரியத்தை நிறைவேற்றிக்கொள்ள என்னவித தந்திரங்களை மேற்கொள்வாள் என்பதை அறிவாயாக!

## தன் கழுதையினால் முட்டாளாக்கப்பட்ட ஒரு ஆணின் கதை.

இந்தக் கதையில் பானைவனையும் ஒரு குயவன் வருகிறான், அவன் தன் தொழிலுக்கு ஒரு கழுதையை வைத்திருந்தான். அவனுடைய மனைவி குண்டாகவும் கொழுத்தும் பருத்தும், ஆழமான மிகப்பெரிதான அரசிலையையும் பெற்றிருந்தாள். அவளுடைய கணவனோ அதற்கு நேர்மாறாக சின்னஞ்சிறிய மென்மையான குறியைக் கொண்டிருந்தான். அவனது பலவீனமான குறியால் அவனால் தாம்பத்யத்தை சரிவர மேற்கொள்ள முடியாதிருந்தபோதிலும் அவனுடன் அவள் குடும்பம் நடத்திக்கொண்டிருந்தாள். உண்மையில், அவனால் அந்த காரியத்தில் சரிவர ஈடுபட முடியவில்லை. ஆனால் அவளை புணர்ச்சிக்காக ஏங்கிக்கொண்டிருப்பவள்; அதை போதுமான அளவில் பெறமுடியாதவள், நாளிலும் இரவிலும் அதில் இருந்தாலும்கூட திருப்தி பெறமுடியாதவள்; எந்தவொரு மனிதனாலும் திருப்தி அடையமுடியாதவள்; ஒட்டுமொத்த ஆண்கள் வந்தாலும் திருப்தி என்பதே அவளிடம் இருக்காது; இரும்பால்செய்த குறிகொண்ட ஆணுடன் படுத்தால்கூட தன் நிதம்பத்தை விட்டு அவன் குறி ஒரு விநாடிகூட அகலக்கூடாது என்றிருப்பவள்.

இந்தப் பெண்ணானவள், ஒவ்வொரு இரவும் அந்த கழுதையிடம் தீவனம் இடச் செல்வாள். பெரும்பாலான இரவுகளில் அவனை காக்க வைத்துவிடுவாள், அவள் திரும்பிவரும்போது அவள் கணவன் கேட்பான், “உன்னை இவ்வளவு நேரமாக காக்கவைத்தது எதுவோ?” அவள் பதிலளிப்பாள், “நான் கழுதையின் பக்கத்தில் அமர்ந்திருந்து அது உண்ணும்வரை காத்திருப்பேன், அது களைப்படைந்ததாகத் தென்பட்டதால் எனக்கு மிகவும் வருத்தம்.”

இது நீண்ட நாட்களாக நடந்து வந்தது, கணவனுக்கு எவ்வித சந்தேகமும்

எழவில்லை. அதைவிட அவன் வீடு திரும்பும்போது மிகுந்த களைப்பு அடைந்து போயிருப்பதால் நேராக படுக்கைக்குச் சென்றுவிடுவான், கழுதையை அவன் மனைவி பார்த்துக் கொள்வாள். அவள் கீழ்வரும் முறையில் அந்த கழுதையை தனக்கு இணங்கும்படி (கடவுளானவர் எவ்வளவு கேவலமாக இந்தப் பெண்ணை படைத்திருக்கிறான்) செய்துவிட்டாள். இரவில் தானியம் இடும் நேரம் வந்ததும், அவள் தீவனப்பையை தனக்கு நேர்பின்னாலே வைத்துவிட்டு, பிறகு அதன் சேணத்தை அவிழ்த்துவிட்டு தன் இடுப்பில் பூட்டிக்கொள்வாள். பின் அதன் சிறுநீர் சாணம் முதலானவற்றை எடுத்து, ஒன்று கலந்து தன் நிதம்பத்து வாசலில் பூசிக்கொள்வாள்; இதை முடித்ததும் அவள் கழுதையின் முன்பாக தன் கைகால்களை விரித்து மல்லாக்க படுத்துக்கொள்வாள். கழுதையும் அவளை அணுகி அல்குலை முகர்ந்து தன் இனத்தைச் சேர்ந்த ஒரு கழுதைதான் வந்திருக்கிறது என்ற நினைப்பில் அவளின்மீது ஏற முயற்சிக்கும். அது தன் குறியை நிதம்பத்தில் வைத்ததும், அவள் குறியை கைகளால் பிடித்து தன் குறிக்குள் செலுத்திக்கொள்வாள். இப்போது நிதம்பமானது பெரிதாகவும் ஆழமாகவும் உருமாற்றம் அடைய, கழுதையின் குறியானது மெள்ளமெள்ள உள்நுழைந்து மொத்தமாக காணாமல் போய்விட பிறகு மொத்த சுகமும் அவளுள் வெடிக்கும்.

இப்படியாக அந்தப் பெண்மணி, நெடுநாட்களுக்கு கழுதையோடு புணர்ந்து வந்தாள். ஆனால் ஒருநாளிரவு, கணவன் தூங்கிக்கொண்டிருந்தபொழுதில், அவனுக்கு திடீரென்று விழிப்புத்தட்டி தன் மனைவியை அணைக்கவேண்டும் என்ற தாளாத ஆசை பிறந்தது. ஆனால் பக்கத்தில் அவள் இல்லை, அதனால் மெள்ள எழுந்து ஓசைப்படாமல் இலாயத்திற்குள் நுழைந்தான். கழுதைக்கு அடியில் மனைவி மேலும்கீழும் இயங்கிக்கொண்டிருப்பதைக் கண்டு பிரமிப்பு அடைந்தான். “என் மனைவியே இதற்கென்ன பொருள்?” என்று கூவிவிட்டான். அவளும் சட்டென்று கழுதையிலிருந்து எழுந்துகொண்டு, சொன்னாள், “ஐயோ நீங்கள் கழுதையை சரிவர கவனிப்பதே இல்லை!” “அதுசரி ஆனால் நீ அடியில் படுத்துக்கொண்டு என்ன செய்கிறாய்?” கணவன் திரும்பவும் கேட்டான். “அதுவா, நான் தீவனத்தை எடுத்து அதன்முன் வைத்தும் அது சாப்பிட மறுத்துவிட்டது. அது அந்தளவுக்கு களைப்படைந்து போயிருந்தது. உடனே அதன் முதுகை தடவிக்கொடுக்க, அது வலியால் முனகி நகர்ந்துகொண்டது. ஆக பொதிசுமக்கும் சேணத்தால்தான் இந்தப் பாதிப்பு என்றெண்ணி நான் அதை என் முதுகில் கட்டிப்பார்த்தேன். அப்போது புரிந்துகொண்டேன், அதன் வலியை. அதனால் கழுதை வேண்டுமெனில்

அதை அதிகம் வேலை வாங்காதீர்". அவள் கணவனும் அவள் சொன்னதை உண்மையென்றே நம்பி ஏமாந்து போனான்.

இக்கதையிலிருந்து பெண்களின் தந்திரங்களைப் புரிந்துகொண்டு அவர்கள் எத்தகைய அளவிலும் போவார்கள் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

திருட்டுக் காதல்.

இக்கதையில் இரு பெண்கள் ஒரேவீட்டில் வசித்து வந்தனர். ஒரு பெண்ணின் கணவருக்கு குறி நீளமாகவும், உறுதியாகவும், விரைப்பாகவும் இருக்கும், மற்றொரு பெண்ணின் கணவருக்கோ, அந்த உறுப்பு சிறியதாகவும் மென்மையாகவும் இருக்கும். முதலில் சொல்லப்பட்ட ஆணின் மனைவியானவள் காலையில் மகிழ்வுடன் எழுவாள், அடுத்தவளோ காலையில் எழும்போதே அழுத முகத்துடன் விரக்தியுடன் வருவாள்.

ஒருநாள் இரண்டு பெண்களும் ஒன்றுகூடி தங்கள் கணவர்களைப்பற்றி பேசிக்கொண்டனர்.

முதலாம் பெண் கூறினாள், "நான் பெத்த மகிழ்வுடன் வாழ்கிறேன், என் படுக்கை ஆசிர்வதத்தால் நிரம்பியுள்ளது, நானும் என் கணவரும் ஒன்றாக படுக்கையில் இருக்கும்போது இன்பத்தின் உச்சத்தை அடைவோம். முத்தங்களும் தழுவல்களும் இன்ப பெருமூச்சை கூட்டும். என் நிதம்பத்தின் உள்ளே அவர் குறி நுழைந்ததும் அது மொத்தத்தில் இயக்கத்தை நிறுத்திவிடும்; அது என் யோனியின் முடிவுவரை வளர்ந்துகொண்டே வரும், மேலும் அது நிதம்பத்தினுள்ளே ஒவ்வொரு பாகத்தையும் தடவும், நுழைவாயிலில், மேல்விதானத்தில், நடுவறையில். உச்சக்கட்டத்தை அடையும்வேளையில் அது யோனியின் மையப்பாகத்தில் நிலைகொண்டு தன் கண்ணீரை சிந்தும். இம்முறையில்தான் நாங்கள் எங்களது விருப்பத்தை தணித்துக்கொள்கிறோம்".

இரண்டாமவள் கூறினாள். "நான் மிகுந்த சோகத்தில் வாழுகிறேன். ஏனெனில் என் படுக்கையானது துன்பத்தால் சூழப்பட்டிருக்கின்றது. எங்களது புணர்ச்சியானது எப்போதுமே வெறுப்பாலும் சாபத்தாலும் சூழப்பட்டிருக்கிறது. என்கணவரின் குறியானது எந்தன் அல்குலில் நுழைந்தபின்னும் அதில் ஏராளமாக இடம் இருக்கிறது. அது மிகக் குறைவான நீளம் படைத்துள்ளதால் எந்தன் முடிவுவரை அதால் நெருங்கவே முடிவதில்லை. அது விரைப்படைந்தபோதில் எல்லாப் பக்கங்களிலும் முறுக்கிக்கொள்கிறது, எனவே அதனால் எவ்வித இன்பமும் தரமுடியாமல் போகிறது. வலுவில் குறைந்தும்

அற்பமானதாகவும் உள்ள அது எப்போதாவது ஒரேஒரு சொட்டு விந்துவை மட்டுமே சிந்தமுடிகிறது. அதுவால் எந்தவொரு பெண்ணுக்குமே இன்பம் தரமுடியாது".

இரு பெண்களும் ஒன்றுசேரும்போதெல்லாம் புணர்ச்சியைப் பற்றியே பேச்சிருக்கும்.

இப்போது புணர்ச்சியைப்பற்றி குற்றங்குறை சொல்லிக்கொண்டிருந்த பெண், மற்றவளின் கணவனோடு கள்ளக்காதல் புரிந்தால் நன்றாக இருக்குமே என்று யோசிக்கத்தொடங்கி விட்டாள்.அவள் தனக்குத்தானே அதை ஒரேஒரு முறையாவது நடத்திப்பார்க்க வேண்டுமென நிச்சயித்துக் கொண்டாள். பிறகு தன் கணவன் இரவில் வராத அந்தவேளையை எதிர்பார்த்து காத்திருந்தாள் ஒருநாள் அதை அடைந்தாள்.

அன்று இரவில் தன்னைத்தானே நன்கு சிங்காரித்துக்கொண்டு, மிகுந்த மணம்வாய்ந்த நறுமணங்களை தன்மீது பூசிக்கொண்டாள்.அன்றைய இரவின் மூன்றாம் ஜாமத்தின்பொழுது, அவள் அடுத்தவளின் படுக்கையறைக்குள் சத்தமெழதாபடி நுழைந்தாள், அங்கே கட்டிலின்மீது முதலாம் பெண்ணும் அவள் கணவனும் உறங்கிக்கொண்டிருந்தனர். அவர்களுக்கிடையே சிறிதளவு இடத்தைக்கண்டு, அங்கே மெள்ள புகுந்தாள். அங்கே குறைந்தளவே இடம் இருந்தது, இருப்பினும் கணவன் மனைவி இருவருமே மற்றவர்தான் தன்னை தள்ளிவிடுகிறார் என்றெண்ணி தூக்கத்தில் தள்ளிப்படுக்க இவள் இருவருக்கும் இடையில் படுத்துக்கொள்கிறாள். பின் அவள் மற்ற பெண் ஆழ்ந்த தூக்கத்தில் ஆழும்வரை காத்திருந்தபின், மெதுவாக அந்த ஆணின் பக்கம்திரும்பி முகம் நோக்கி படுத்துக்கொள்கிறாள். அவன் விழித்துக்கொண்டு அவள் தடவியிருக்கும் நறுமணத்தை முகர்ந்து உடனே எழுச்சி கொள்கிறான்.அவன் அவளை தன் மனையாளென்றே நினைத்துக்கொண்டு அவளை தன்பக்கமாக இழுக்க அவளோ பொய்யாக முரண்டு பிடித்து, என்னை தூங்கவிடுங்கள் என்று கூறுகிறாள். அவனோ அமைதியாக இருந்து என்னை நடத்தவிடு, குழந்தைகளும் நன்றாக உறங்கிக்கொண்டிருக்கிறார்கள் என்றும் கூறுகிறான். உடனே அவள் அவனுடன் இன்னும் நெருக்கமாக படுத்துக்கொண்டு, முதலாம் பெண்ணுடன் இருந்து தள்ளிப்போய் பின் மெள்ள சொல்கிறாள், "சரி உன் விருப்பம் போல் செய், ஆனால் சத்தம் போடாதே, ஏனெனில் கிட்டத்தில் படுத்திருக்கும் குழந்தைகள் விழித்துக்கொள்வார்கள். அவள் அவனுடைய மனைவி விழித்துக்கொள்ளப் போகிறாள் என்ற பயத்திலேயே இந்த

வார்த்தைகளைக் கூறினாள்.

இதையெல்லாம் காதில் வாங்கியும் வாங்காததுமாக இருந்த அந்த ஆண்மகன், அவளின் நறுமணத்தால் கிளர்ந்திருந்து அவளை தனக்காய் இழுத்துக்கொண்டான். அவள் மிகவும் கொழுத்தும் பருத்தும் கனிந்தும் இருக்க, அவளின் நிதம்பமானது வெளியே துருத்திக்கொண்டிருந்தது. “வழக்கம்போல என் குறியை கைகளில் ஏந்திக்கொள்வாயாக”, என்று அந்தக் கணவன் சொன்னான். அவள் அதனை கைகளில் ஏந்தி அதன் நீளத்தையும் பருமனையும் அதிசயித்து, பின் தன் அல்குலில் நுழைத்துக்கொண்டாள்.

அந்த ஆண்மகனோ, தன் குறி முழுவதும் அவள் நிதம்பத்தின் உள்ளே புகுந்து மறைந்துவிட, இதற்க்கு முன்னர் எப்போதும் இதுபோல் நடந்ததில்லை என ஆச்சரியப்பட்டான். அந்த பெண்ணோ இதுபோல் குறியை தன் நிதம்பம் பார்த்ததேயில்லை என அகம் மகிழ்ந்தாள்.

அந்த மனிதனுக்கு ஆச்சரியம்மேல் ஆச்சரியம். அவன் இரண்டாம்முறையாக மூன்றாம்முறையாக புணர்ச்சியை முடித்தபின்னும் அவனது வியப்பு உச்சத்தை தொட்டது. இறுதியில் அவன் அவளிடமிருந்து விலகிக்கொண்டு படுக்கையில் படுத்தபடி உடலை நெரித்து கொட்டாவிவிட்டான்.

அவன் அடுத்தநொடி உறங்குவதைக் கண்டதும் அந்த இரண்டாவது பெண் படுக்கையிலிருந்து நழுவி தன்னுடைய வீட்டிற்கு சென்றுவிட்டாள்.

காலையில் கணவன் எழுந்ததும் தன் மனைவியிடம், “நேற்றிரவு உந்தன் தழுவலும் புணர்ச்சியும் வெகுஅபாரம், அதிலும் நீ விட்ட மூச்சினில் தேகத்தில் பூசியிருந்தமணத்தின் மணம் வெகுஅபாரம்”. “எப்போது கட்டிப்பிடித்தேன், என்னவித நறுமணம்?” அவனது மனைவி கேட்டாள். “நான் நறுமணங்களை பூசுவதேயில்லை, வீட்டிலும் நறுமணத்தைலம் ஏதும் கிடையாது” என்றும் கூறினாள். அவள் அவனொரு சிறந்த கதைசொல்லி என்றும் அதுபோல் கனவுகண்டிருக்கிறானென்றும் கூறினாள். அவனோ நடந்தது நிஜமா அல்லது கனவுதான் கண்டோமோ என்று யோசித்துயோசித்து, கடைசியில் தன் மனைவி கூறியபடியே தான் கனவுதான் கண்டிருப்போம் என்ற முடிவுக்கு வந்துவிட்டான்.

பெண்ணுடைய தந்திரத்தை போற்றிப்பாடுங்கள் அவர்கள் எத்தளவுக்கு துணிவார்கள் என்று இதன்மூலம் அறியுங்கள்.

### இரு கணவர்கள் கொண்ட ஒரு பெண்ணின் கதை.

ஆண் ஒருவன் கொஞ்சகாலம் ஒரு நாட்டில் வாழ்ந்தபிறகு அவனுக்கு

திருமணம்செய்ய ஆசை வந்துவிட்டது. தரகர் வேலையில் அனுபவம் வாய்ந்த ஒரு கிழவியை அணுகி தனக்கு ஒரு பெண் கிடைப்பாளா என்று கேட்டான். அதற்கு அந்த கிழவி, இது ஒன்றும் பிரமாதமான வேலையில்லை, வடிவிலும் அழகிலும் குணத்திலும் சிறந்த பெண் ஒருத்தியை நான் பார்த்து வைத்திருக்கிறேன். ஆனால் அவள் நாளெல்லாம் பணிபுரிபவள் இரவில் மட்டும் வீடு திரும்புவாள், வருகின்ற கணவன் என்ன சொல்வானோ என்றே அவள் இதுவரை திருமணம் செய்துகொள்ளாமல் இருக்கிறாள்.

அதற்கு ஆண் பதில் சொன்னான். "அந்தப் பெண் இதற்கெல்லாம் அஞ்சத் தேவையில்லை. நானும்கூட நாள் பொழுதில் வேலை செய்பவன், எனவே இரவில் மட்டுமே அவள் தேவைப்படுவாள்".

பிறகு அவளை திருமணம் செய்து தரும்படி கேட்டுக்கொண்டான். கிழவியும் அந்த பெண்ணை அழைத்துவர பார்த்தவுடனே இருவருக்கும் ஒருவரையொருவர் பிடித்துப்போயிற்று. அந்த நாளிலிருந்து தாங்கள் விதித்துக்கொண்ட நிபந்தனையை கடைப்பிடித்து இருவரும் மனம்கோணாமல் வாழ்ந்து வந்தனர்.

இந்த மனிதனுக்கு நெருங்கிய நண்பனனொருவன் இருந்தான், அவனை கிழவியிடம் அழைத்துவந்த வந்த ஆண், இவளே எனக்கு பெண்பார்த்து திருமணம் செய்துவைத்தவர் என்று அறிமுகம் செய்துவைத்தான். அந்த நண்பன் தனக்கும் அவனைப்போல் திருமணம் செய்துவைக்கும்படி கிழவியை கேட்டுக்கொண்டான். "இது சாதாரண விஷயந்தான், எனக்குத் தெரிந்து ஒரு பெண் இருக்கிறாள், அவள் சிறப்பான அழகை உடையவள், உந்தன் பிரச்சனைகளையெல்லாம் சரிபடுத்தி விடுவாள், ஆனால் அவளுக்கு இரவு பொழுதில் வேலை இருக்குமாதலால் நாள்பொழுதில் மட்டுமே உன்னுடன் இருப்பாள். என்ன சொல்கிறாய்". "அது ஒன்றும் பிரச்சனையில்லை." என்று அவன் நண்பன் பதில் அளித்தான்.பிறகு அந்த கிழவியானவள் அந்த பெண்ணை நண்பனிடம் அழைத்துவர, அவள் அழகில் மயங்கிய அவனும் அவளை திருமணம் செய்துகொண்டான்.

ஆனால் கொஞ்சகாலம் போனதும் இருநண்பர்களும் அந்த வெடவெடத்த கிழவி, இருவருக்கும் கட்டிவைத்தது ஒரேபெண் என்பதை கண்டுபிடித்தனர்.

பெண்களின் இந்த வஞ்சகத்தை போற்றி அவர்கள் எத்தகைய காரியத்திலும் ஈடுபடுவார்கள் என்பதை அறிந்துகொள்க.

## பாஹியாவின் கதை.

இது பாஹியா (பிரமாதமான பேரழகி) என்ற பெண்ணின் கதை, அவளுக்கு ஒரு காதலன் இருந்தான், ஆனால் கூடியவிரைவில் அவனை விட்டு விலகிவிட்டாள். காரணம் யாதென்று ஒருவரும் அறியவில்லை. அவனை விட்டு அவள் போய்விட்டதால் அவளை பார்க்கமுடியாததால் அவன் நோயுற்று படுக்கையில் வீழ்ந்துவிட்டான்.

ஒருநாள் அவன் தன் நண்பன் ஒருவனைப்பார்த்து அவனிடம் சொன்னான். “என் சகோதரனே, அடக்கமுடியாத விருப்பம் என்னுள் தோன்றிவிட்டது, இனியும் என்னால் பொறுக்கமுடியாது. என் இதயத்தில் வசிக்கும் பாஹியா இருக்கும் இடம் நோக்கி போகப்போகிறேன், நீயும் என்னுடன் வருவாயா?” அவனும் வருவதாக அவன் நண்பன் அறிவித்தான்.

அடுத்த நாள் காலை அவர்கள் குதிரைகளில் ஏறிக்கொண்டனர். பின் இரண்டுநாள் பயணத்திற்குபிறகு, அவர்கள் பாஹியா வசித்துவந்த இடத்தை அடைந்தனர். அங்கே அவர்கள் குதிரைகளை நிறுத்தினர், பின்பு காதலன் தன் நண்பனிடம் கூறினான், “இங்கே வசிக்கும் மக்களிடம் ஒன்றுகூடி பழகு, அவர்களின் உதவியைக்கேள், ஆனால் நம்நோக்கத்தை மட்டும் சொல்லிவிடாதே, குறிப்பாக பாஹியாவின் வேலைக்காரப்பெண்ணை கண்டுபிடி, கண்டுபிடித்து அவளிடம் நான் இங்கிருப்பதாகச் சொல், அவள் எஜமானியிடம் நான் அவளை பார்க்கவிரும்புவதாக சொல்லச்சொல்”. பிறகு அந்த வேலைக்கார பெண்ணின் அங்க அடையாளங்களை விவரித்தான்.

நண்பனும் சென்று அந்த வேலைக்காரப்பெண்ணை சந்தித்து, சொல்லவேண்டிய விவரங்களை சொன்னான். உடனே அவள் பாஹியாவிடம் சென்று அனைத்து விஷயங்களையும் கூறினாள்.

பாஹியா அந்த நண்பனுக்கு கீழ்அகண்ட செய்தியைச் சொல்லி அனுப்பினாள், “உன்னிடம் சேதிசொன்ன அந்த நண்பனிடம் சென்று, இந்த நேரத்தில் இந்த மரத்தடியின் கீழ் சந்திப்பு நிகழும் என்று கூறுவாயாக!”

நண்பனும் சேதியை பெற்றுக்கொண்டு அந்த காதலனிடம் பாஹியாவின் முடிவை தெரிவித்தான்.

குறிப்பிட்ட நேரத்தில் இரு நண்பர்களும் அந்த மரத்தடியின் அருகே காத்திருந்தனர், ஆனால் நீண்டநேரம் காத்திருக்கவில்லை. அவனுடைய காதலி வருவதைக்கண்ட அவன் ஓடிச்சென்று அவளை கட்டியணைத்து முத்தமிட்டு, நெஞ்சோடு நெஞ்சாக தழுவிக்கொள்ள, இருவரும் ஒன்றாக இறுக்கி கட்டியணைத்துக் கொண்டனர்.

காதலன் பின்வருமாறு கூறினான், “ஓ பாஹியா, உன் கணவனுக்கு ஐயம் எழும்பாமல் நாமிருவரும் இன்றிரவை கழிக்க ஏதேனும் வழியுள்ளதா?” “ஆம் கடவுள் நிச்சயமாக வழியுள்ளது” என்று பதில் சொன்னாள். “அப்படியென்றால் விரைந்து சொல்வாயாக” என்று காதலன் கேட்க, அவளும் அவனிடம், “இங்கே உள்ள உனது நண்பன் உனக்கு விசுவாசமானவனா, புத்திசாலியா?” என்று கேட்டாள். ”ஆம்”, என்று அவனும் பதிலளிக்க, உடனே அவள் எழுந்திருந்து தன் ஆடையை அவிழ்த்து அவனிடம் தர அவனும் அவன் ஆடையை அவளிடம் தந்தான். உடனே இருவரும் ஆடைகளை அணிந்துக்கொள்ள, காதலன் பெருவியப்படைந்து, “என்ன செய்கிறாய்”, என்று வினவ அவளும் அமைதியாக இரு என்று சொல்லிவிட்டு, அந்த நண்பனிடம் பின்வருமாறு கூறினாள். “என் வீட்டிற்கு சென்று எந்தன் படுக்கையில் படுத்துக்கொள். இரவின் மூன்றாம் ஜாமம் கடந்ததும், என்னுடைய கணவர் வந்து ஓட்டகத்தின் பாலை கறக்கவேண்டுமாதலால் பானையை எடுத்துக்கொடு என்று கேட்பார். உடனே நீயும் பானையை எடுத்துக்கொடு, ஆனால் அவர் தனது கைகளில் அதை எடுக்கும்வரை நீ உனது கைகளில் வைத்துக்கொண்டிருக்க வேண்டியது அவசியம். இது எங்களின் வழக்கமான செய்கை. பிறகு அவன் பால்கறந்து முடித்ததும் திரும்பி வந்து, “இதோ பால்கறந்த பானை என்று சொல்வான். ஆனால் திரும்பவும் அவன் அந்த வார்த்தைகளை கூறும்வரை நீ செயல்படக்கூடாது. பிறகு அவன் கைகளில் இருந்து பானையை எடுத்துக்கொள்ளலாம், அல்லது அவனே தரையில் வைக்கும்படி விட்டுவிடலாம். பிற்பாடு மறு நாள் காலைவரை அவனைப் பார்க்கமுடியாது. பானையானது தரையில் வைக்கப்பட்டதும் என் கணவர் வெளியில் சென்றதும் மூன்றில் ஒருபகுதி பாலை நீ குடித்துவிட்டு பானையை தரையில் வைத்துவிடவும்”.

அவள் சொன்ன விவரங்களை கவனத்தில் இருத்திய அந்த நண்பனும் அவள் வீட்டிற்குப் போனான். பிறகு அவள் சொல்லியபடி எல்லாம் நடக்க, அவள் கணவனும் பால் நிரம்பிய பானையுடன் திரும்பிவந்து, “இதோ பால்பானை”,என்றான். துரதிர்ஷ்டவசமாக அவன் பானையை நீட்டும்போது, நண்பன் கைகளை இழுத்துக்கொள்ள, இருட்டில் ஒன்றும்தெரியாத கணவனும் மனைவிதான் கைகளை நீட்டியிருக்கிறாளே என்றெண்ணி பானையை விட்டுவிட பானை தரையில் விழுந்து நொறுங்கிப்போனது. தன் மனைவியுடந்தான் பேசுகிறோம் என்ற நினைப்பில் அந்த கணவனும், “என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய் நீ”, என்றபடி உடைந்த பானையால் அவன் முதுகில் தாக்கத் தொடங்கினான். அடுத்ததாக மற்றொரு பானையும் எடுத்து

விடாமல் அடித்தான். ஏறத்தாழ மனைவியாக நடித்துக்கொண்டிருந்த நண்பன் மூர்ச்சையிடும் அளவுக்கு தாக்கப்பட்டான். இந்த சத்தம்கேட்டு பாஹியாவின் அன்னையும் சகோதரியும் ஓடிவந்து அவனை மீட்டனர். அவன் பலவீனமடைந்து போயிருந்தான். அதிர்ஷ்டவசமாக அந்த கணவனிடமிருந்து அவனை மீட்டெடுத்தனர்.

பிற்பாடு பாஹியாவின் அன்னை விரைந்து திரும்பிவந்து, அடிப்பட்ட பாதிப்பில் இருந்த நண்பனிடம் நெடுநேரம் பேசினாள்; அவனால் ஏதும் பேசமுடியாமல் அழமட்டுமே செய்தான்; இறுதியில் அவள் அம்மா கூறினாள், "கடவுளிடம் நம்பிக்கை கொள்வாயாக, உன்னுடைய காதலனும் இங்கே வந்து உனக்கு ஆறுதல் சொல்லமாட்டான், மாறாக உன் சகோதரியை அனுப்பிவைத்து உன்னைப் பார்த்துக்கொள்ளச் சொல்கிறேன்". பிறகு அவளும் போய்விட்டாள்.

அவளும் அவனிடம் பாஹியாவின் சகோதரியை அனுப்பிவைக்க, அவள் அவனை தேற்றி, அவள் கணவனை சபிக்கவும் செய்தாள். நண்பனும் தன்னுடைய இதயமானது அவளிடம் அடிபணிவதை உணர்ந்தான்,ஏனெனில் அவள் கொள்ளை அழகுடன், பூர்ணமான வளைவுகளுடன், இரவில் உதிக்கும் நிலவை ஒத்திருந்தாள். அவன் அவளது வாயில் தன் கையை பேசாதிருக்கும்படி செய்துவிட்டு, அவளிடம் பேச ஆரம்பித்தான். "ஓ பெண்ணே நீ நினைப்பதுபோல் நான் உன்சகோதரி பாஹியா அல்ல, அவள் இப்போது தன் காதலனுடன் உள்ளாள். அவளுக்கு சேவை செய்வதற்காகவே நான் அபாயத்தில் சிக்கி உள்ளேன். நீ என்னை காப்பாற்றுவாயா? நீ மறுத்துவிட்டால் உன் சகோதரி அவமானத்தினால் அவதிபடுவாள். என்னுடைய பங்குக்கு என் காரியத்தை கச்சிதமாக நிறைவேற்றிவிட்டேன், ஆனால் விஷயம் ஒழுங்காக நிறைவேற வேண்டுமானால் அது உன்னால்தான் ஆகும்".

தன் சகோதரியின் சாகச செயலைக் கேட்டு அந்த இளம்பெண் கதிர்கட்டை போல் நடுங்கினாள்.பிறகு சிரிக்கத்தொடங்கினாள், பிறகு தன் சகோதரிக்கு தோழமையுடன் விளங்கிய அவனிடம் தன்னை ஒப்புவித்தாள். மீதமிருந்த இரவு முழுவதும் அவர்கள் இருவரும் முத்தங்களாலும் அணைப்புகளாலும் மெத்த மகிழ்ந்திருந்து பின் ஒன்று சேர்ந்தனர். அவளை எல்லோரிலும் சிறப்பானவளாக அவன் கண்டான். அவளின் கரங்களில் இருந்த அவன் தான் அடிபட்டதை எல்லாம் மறந்துபோனான், மறுநாள் காலைவரை அவர்கள் சந்தோஷமாக இருந்தனர்,

பிறகு அந்த நண்பன் தன் தோழனிடம் திரும்பி போனான். பாஹியா அவன் நடந்துகொண்டவிதம் பற்றி கேட்டதும் நண்பனும் பதில்

கூறினான். "உன் சகோதரியைக் கேள், அவள் எல்லாவற்றையும் அறிவாள். நேற்றிரவு முழுக்க நாங்கள் கட்டிப்பிடித்தும் முத்தங்கள் இட்டும் புணர்ந்தும் இருந்தோம்".

பிறகு நண்பனும் பாஹியாவும் தத்தமது உடைகளை மாற்றிப் போட்டுக் கொண்டனர். நண்பன் எல்லா விவரத்தையும் பாஹியாவிடம் கூறினான்.

இக்கதையிலிருந்து பெண்களின் தந்திரங்களை அவர்கள் ஒருசெயலை செய்ய எத்தளவுபோவார்கள் என்பதையும் தெரிந்து கொள்வாயாக.

தந்திரம் செய்வதில் வல்லமையுள்ள ஒரு ஆண்மகன் ஒரு பெண்ணால் ஏமாற்றப்பட்ட கதை.

ஆண் மகன் ஒருவன் பெண்களால் கைக்கொள்ளப்பட்ட எல்லா சூதுவாதுகளையும் நன்கு படித்து தெரிந்துகொண்டான், அவன் தன்னை எந்த பெண்ணாலும் ஏமாற்றவே முடியாது என்று சொல்லி திரிந்துகொண்டிருந்தான்.

வசீகரமும் எல்லா அழகும் உடைய பெண்ணொருத்தி தன் இதயத்தில் பெரும் அளவில் அகந்தை கொண்டிருந்தாள். அவள் அவனுடைய தற்பெருமையை கேட்டு, தன் வீட்டிலேயே விருந்தாளிகள் அமரும் பாய்க்கு மேல் பிரமாதமான ஓயின் மற்றும் பலகாரங்கள் செய்து வைத்தாள். பிறகு ஒரு ஆளை அனுப்பி அவனை தன் வீட்டிற்கு வரும்படி செய்தாள். அவள் பிரமாதமான அழகியாதலால், அவளை அனுபவிக்கவேண்டுமென்பது அவனுடைய அடங்காத ஆசை, அதனால் அவளுடைய அழைப்பையேற்று அவள் வீட்டிற்கு சென்றான்.

அவள் அதியற்புதமான ஆடைகளை அணிந்துக்கொண்டு, காமபோதையேற்றும் பரிமளங்களை பூசிக்கொண்டிருந்தாள். அவளை அக்கோலத்தில் யார் கண்டாலும் உடனே அவளை அப்போதே அனுபவிக்க வேண்டுமென்ற ஆசை பிறக்கும். இப்படியாக அந்த ஆண்மகனும் அவளது அழகில் மயங்கினான்.

இருப்பினும் அந்தப் பெண் தன் கணவனிம் ஞாபகத்தில் இருந்தாள், வெளியே சென்றிருக்கும் அவன் எந்நேரத்திலும் திரும்பிவந்து விடுவான் என்ற அச்சமும் அவளுக்கிருந்தது. இவ்விடத்தில் ஒன்றைச் சொல்லியாக வேண்டும், அதாவது அவள் கணவனுக்கு அசாத்திய தற்பெருமை, பொறாமை, எல்லாவற்றுக்கும் மேலாக வன்முறைமிக்கவன், தன் வீட்டிற்கு அருகாமையில் யாரையேனும் பார்த்துவிட்டாலே அடித்துவிடுவான், அப்படியென்றால் தன் வீட்டிற்குள்ளேயே ஒரு ஆண்மகனைப் பார்த்துவிட்டால் அவன் என்ன செய்வான்?.

அந்தப் பெண்ணும் அவனும் ஒருவரையொருவர் புகழ்ந்துபேச, அவனோ அவளை அடையவேண்டும் என்ற தன் ஆசையை வெளியிட்டான், இப்படியாக அவர்கள் இருவரும் பாயில் அமர்ந்தபடி பேசிக்கொண்டிருக்கும்போது, திடீரென்று கதவு தட்டப்படும் ஓசையில் அந்த ஆண் கதிகலங்கிப் போனான், குறிப்பாக அந்தப் பெண்ணும், அவள், "திரும்பிவந்திருப்பவர் என் கணவர்தான்" என்று நடுக்கத்துடன் கூறினாள். உடனே அவனை அறையிலிருந்த ஒரு அலமாரியின் உள்ளே வைத்துபூட்டி சாவியை பாயின் அடியில் ஒளித்து வைத்தாள். பிற்பாடு அவள் கதவை திறந்தாள்.

எதிர்பார்த்தபடி வந்தது அவள் கணவனே, அவன் உள்ளேவந்து பாய்மேல் வைக்கப்பட்டிருக்கும் ஒயின்களை பார்த்தான். பெருத்த வியப்புடன் இவற்றுக்கு என்ன பொருள் என்றும் கேட்டான். "நீங்கள்தான் பார்க்கின்றீர்களே", என்று அவள் பதிலளித்தாள். "இதெல்லாம் யாருக்காக?",என்று கணவன் கேட்டான். "இவையெல்லாம் என் காதலனுக்காக?" என்று அவள் பதில் சொன்னாள். "எங்கே அவன்?" என்று கணவனும் கோபத்துடன் கேட்க, "அலமாரியில்" என்று அவள் அந்த மனிதன் கஷ்டத்துடன் ஒளிந்திருந்த அலமாரியை விரலால் சுட்டிக் காட்டினாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட கணவனும் எழுந்திரிந்து அலமாரி அருகே சென்றதில் அது பூட்டப்பட்டிருப்பதைக் கண்டான். "சாவி எங்கே?" அவளும், "இதோ இங்கே", என்று கூறிவிட்டு சாவியை அவனிடம் எறிந்தாள். அவன் பூட்டினில் சாவியை வைத்ததும் அவள் விழுந்துவிழுந்து சிரிக்கத் தொடங்கினாள். கணவன் அவள்பக்கம் திரும்பி, "எதற்காக சிரிக்கின்றாய்?" என்று கேட்டான். அவள் பதில் கூறினாள், "குற்றங்குறையைக் கண்டுபிடிக்கும் உந்தன் மேதமையைக் கண்டு சிரிப்புவந்து விட்டது. உன் மனதில் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? உண்மையில் எனக்கொரு காதலன் இருந்திருந்தால் அவன் இந்த அறையில் இருப்பானென்றோ அல்லது அவன் அலமாரியில் ஒளிந்துக்கொண்டிருப்பானென்றோ நான் கூறுவேன் என்று நினைத்தாயோ? அப்படி அல்ல. நீ திரும்பிவரும்போது உனக்காக இந்த ஒயினை தயாரித்துவைத்தேன், மற்றும் உன்னை சற்றுநேரம் ஏமாற்றலாம் என்று நினைத்தேன், அவ்வளவுதான், எனக்கு மட்டும் காதலன் இப்போது இங்கிருந்தால் உனக்கு பலகாரமெல்லாம் தயாரித்து வைத்திருக்கமாட்டேன்".

இதுகேட்ட அந்தக் கணவன், சாவியை அலமாரியேலே விட்டுவிட்டு அதை திரும்பிக்கூட பார்க்காமல் மேஜைக்கு திரும்பிவந்து சொன்னான்,

“உண்மாதான்! நான் சற்று ஏமாந்துதான் போனேன், ஆனால் உன் வார்த்தைகளில் உண்மை இருப்பதைக் கண்டுகொண்டேன்”. பிறகு அவர்கள் ஒன்றாக குடித்தும் உணவுண்டும் பிற்பாடு காமத்தில் ஆடியும் களித்திருந்தனர்,

அலமாரியில் ஒளிந்திருந்த மனிதன் கணவன் வெளியே செல்லும்வரை கஷ்டத்தில் இருந்தான். பிறகு அந்த பெண் அவனை வெளியே திறந்துவிட்டாள். அவன் கந்தலாகக் கிடந்தான். அவன் நடக்கவிருந்த அபாயத்தில் தப்பி வெளியே வந்ததும் அந்த பெண் அவனிடம் சொன்னாள், “நல்லது அறிவாளி போல் நடிப்பவனே, இதுபோன்ற தந்திரத்தை யார் செய்வார் என்று நினைத்திருந்தாய்? என்போல் வல்லமைகொண்டவர் எவரையேனும் நீ கண்டிருக்கிறாயா?” அவனும் தலைதொங்கிப்போய் பதில் சொன்னான், “இதுபோன்ற தந்திரத்தில் உன் திறமையே திறமை, நான் இதுபோல் எவரிடமும் கண்டதில்லை”.

இதுபோன்ற தந்திரத்தை போற்றுவாய், மற்றும் எத்தகைய நிலைமைக்கு பெண்கள் போவார்கள் என்பதையும் அறிந்து கொள்வாய்!

### திடீரென்று வந்த கணவனால் ஆச்சரியமடைந்த காதலன்.

ஒரு பெண் கொடுமையான மூர்க்கமான ஒருவனை மணம்புரிந்துகொண்டிருந்தாள், அவள் தன் காதலனோடு சரசமாடிக் கொண்டிருந்தபோது வெளியூர் சென்றிருந்த கணவன் திரும்பிவந்துவிட, காதலனை கட்டிலுக்கு அடியில் ஒளித்துவைத்தாள். இந்த அபாயகரமான சூழ்நிலையில் அவள் அவனை கட்டிலுக்கு அடியிலேயே இருக்கும்படி வற்புறுத்தினாள், ஏனெனில் அவள் கணவன் திரும்பவும் எப்போது வெளியே போவான் என்று தெரியாது. அமைதியற்ற நிலையில் இருந்த அவள் இங்கேயும் அங்கேயும் போவதும், மற்றும் தெருகதவருகே விரைவதும் ஆக இருக்க, அவளது பக்கத்து வீட்டுக்காரி அவளைப் பார்த்துவிட்டு, சிக்கல்லில் மாட்டிக்கொண்டாள் என்பதைப் புரிந்துகொண்டு, அவளிடம் இதுபற்றிக் கேட்டாள். மற்றவள் அதற்குண்டான காரணத்தையும் சொன்னாள். உடனே பக்கத்து வீட்டுக்காரி சொன்னாள், “வீட்டிற்கு திரும்பிப் போ, உந்தன் காதலன் உயிருக்கு நான் உத்தரவாதம்,நான் அவனை பாதுகாப்பாக வெளியே கொண்டுவருகிறேன்”. பிற்பாடு அந்தப் பெண்ணும் தன் வீட்டிற்குத் திரும்பினாள்.

கூடியவிரைவில் பக்கத்து வீட்டுக்காரியும் வர, இருவரும் ஒன்றுசேர்ந்து உணவைத் தயாரித்தனர் மற்றும் மூவரும் ஒன்று சேர்ந்து உணவுண்ணவும் குடிக்கவும் அமர்ந்தனர். அந்த பெண் கணவனின் எதிரில் அமர்ந்திருக்க, பக்கத்து வீட்டுக்காரியோ கட்டிலுக்கு எதிரில்

அமர்ந்தாள், அப்போது அவள் பெண்களின் தந்திரங்களையும் சூதுவாதுகளையும் சொல்லத் தொடங்கினாள்; கட்டிலுக்கு அடியில் இருந்த காதலன் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தான்.

அந்தக் கதையை ஆரம்பித்த பக்கத்து வீட்டுக்காரி பின்வருமாறு சொல்லத் தொடங்கினாள். “கல்யாணமான பெண் ஒருத்திக்கு காதலன் ஒருவன் இருந்தான், அவனை அவள் மிகவும் நேசித்தாள். ஒருநாள் அவள் கணவன் வெளியே சென்றிருந்தவேளையில் அந்த காதலனும் வீட்டிற்கு வந்தான். ஆனால் அவர்கள் கூடிகளித்திருந்தபோது வெளியே சென்றிருந்த கணவனும் வீடு திரும்பிவிட்டான். ஒளித்துவைக்க எந்த இடத்தை தேர்ந்தெடுப்பது என்று தெரியாமல் அவனை கட்டிலுக்கு அடியில் இருக்கச்சொல்லிவிட்டு, கணவனோடு அமர்ந்து பலகாரங்கள் உண்டு அவனோடு சிரித்துப் பேசியபடி இருந்தாள். பல்வித விளையாட்டுகள் விளையாடிய அவள் ஒரு விளையாட்டில் தன் கணவனின் கண்களை துணியால் கட்டிவிட, இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்தி அந்த திருட்டு காதலனும் அவனறியாமல் வெளியில் வந்து நழுவிவிட்டான்.

இதைக்கேட்ட அந்த மனைவியும் விஷயத்தை புரிந்துகொண்டுவிட்டாள்; உடனே ஒருதுண்டை எடுத்த அவள் தன் கணவனின் கண்களை கட்டிவிட்டு பின் சொன்னாள், “இப்படித்தான் இந்த தந்திரத்தால்தான் அவளுடைய கள்ளக்காதலன் தப்பிச் சென்றான்”. காதலனும் இந்த் சந்தர்ப்பத்தை பயன்படுத்திக்கொண்டு, அவள் கணவன் அறியமால் வெளியே நழுவி சென்றான். இதை அறியாத அந்த கணவனும் சொல்லப்பட்ட கதையினால் மிக்க களிப்படைந்தான், அதுவும் தன் மனைவி கடைசியாக சொன்னதைக்கேட்டு விழுந்துவிழுந்து சிரித்தான்.

பெண்களின் இதுபோன்ற தந்திரங்களைப் போற்றி அவர்கள் எத்தகைய செயல்களிலும் ஈடுபடுவார்கள் என்பதையும் அறிவாயாக!

### பயனற்ற முன்னெச்சரிக்கையின் கதை

ஒருவன் எல்லா அழகுகளும் பரிபூர்ணமாக கொண்டிருந்த ஒருத்தியை மனையாளாக அடைந்தான் அவளின் கதை இது. அவள் முழுநிலவாக தோற்றமளிப்பாள்; அவன் பெண்களின் எல்லா தந்திரங்களையும் வஞ்சகங்களையும் அறிந்தவனாதலால் மிகுந்த பொறாமை கொண்டிருந்தான். அதனால் அவன் வெளியே போகும்முன் வீட்டின் கதவையும் மேல் உப்பரிகை கதவையும் ஜாக்கிரதையாக பூட்டிவிட்டு செல்வான்.

ஒருநாள் அவன் மனையாள் அவனைப்பார்த்து கேட்டாள், “எதற்காக

இப்படியெல்லாம் செய்கிறாய்?" "ஏனென்றால் பெண்களின் தந்திடங்களையும் ஆசைகளையும் நான் அறிந்தவன்", என்று அவன் சொன்னான். "இந்த வழியில் எல்லாம் என்னை பாதுகாப்பாக வைத்திருக்க முடியாது", அவள் சொல்லி மேலும் தொடர்ந்தாள், "ஒரு பெண்மகள் ஒரு விஷயத்தின்மீது ஆசை வைத்துவிட்டாளென்றால் அதை அடைந்தே தீருவாள், அவளை எந்த சக்தியாலும் தடுக்க முடியாது". "நல்லது. இருப்பினும் கதவை பூட்டிவைப்பது சாலச்சிறந்தது", என்று அவன் கூறினான். பதிலுக்கு அவள் கூறினாள், "கதவை பூட்டி வைப்பதால் எவ்வித இலாபமும் இல்லை,ஏனெனில் ஒரு பெண் ஆனவள் ஒன்றின்மேல் ஆசை கொண்டாள் அதை அடையாமல் விடமாட்டாள்". "உன்னால் முடிந்ததை பார்த்துக்கொள்", என கணவன் கூறிவிட்டான்.

பிற்பாடு கணவன் வெளியே போனதும் அந்த பெண் வீட்டின் மீதேறி, சுவரில் அவள் உண்டாக்கியிருந்த சிறு ஓட்டையின் வழியாக, வெளியே நடக்கும் விஷயங்களை பார்க்கத்தொடங்கினாள். அந்த நேரத்தில் ஒரு வாலிபன் அந்த வழியே போனவன் அவளை பார்த்ததும் ஆசை கொண்டுவிட்டான். உடனே நான் உன்னை அடையவேண்டும்?எப்படி வீட்டிற்குள் வருவது? என்று அவளிடம் கேட்டான். அது எப்படியும் நடக்காது காரணம் கதவுகள் பூட்டியுள்ளன என்று அவள் பதில் கூறினாள். "அப்படியானால் நாம் ஒன்று சேருவது எவ்விதம்? என்று திரும்பவும் கேட்டான். அவள் பதிலளித்தாள், "நான் கதவில் ஓட்டைஒன்றை இடுகிறேன். என் கணவன் வரும்வரை காத்திரு, அவர் இன்றிரவு வந்து வீட்டிற்குள் சென்றுவிட்டதும், நீ உன் குறியை அந்த ஓட்டைவழியாக விடுவாயாக,நானும் கதவின் இப்பக்கத்திலிருந்து என் நிதம்பத்தை காட்டுகிறேன், பிறகு உன் வேலையை ஆரம்பிக்கலாம். இருப்பது இந்த ஒருவழிதான், இதைவிட்டால்வேறுவழி கிடையாது".

கணவன் இரவு பிரார்த்தனை முடிந்து வீடு திரும்பும்வரை அந்த வாலிபன் காத்திருந்தான். பிறகு அவன் வீட்டிற்குள் நுழைந்து கதவை பூட்டிக்கொண்டதும், வாலிபன் சட்டென்று கதவின் ஓட்டையை கண்டுபிடித்து தன் குறியை அதனுள் நுழைத்தான்.மனைவியும் இதை பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் கணவனோ வீட்டிற்குள் நுழையாமல் நடையிலேயே இருந்தான். அவள் கதவருகே சென்று அது பூட்டப்பட்டிருப்பதில் சந்தோஷம் கொண்டு, ஓட்டையின் மேலே தன் அரவணையை வைத்தாள், அவ்வாலிபனும் தன் குறியை நிதம்பத்தில் நுழைத்தான்.

இது நடந்துவிட்டதும் அவள் விளக்கை அணைத்துவிட்டு தன்

கணவனை அழைத்து விளக்கை எடுத்துவர சொன்னாள். அவன் எதற்கு என கேட்க, " நான் என் ஆபரணத்தை இங்கே போட்டுவிட்டேன், அதற்காக", என்று அவள் பதிலளித்தாள். அவன் விளக்குடன் வந்தான். இளம்வாலிபன் குறி இன்னும்கூட அப்பெண்ணின் நிதம்பத்தில் இருந்தது, அச்சமயத்தில் அவனது விந்துவானது வெளியேறியது. "எங்கே தொலைத்தாய் உன் ஆபரணத்தை?"என்று கணவன் கேட்டான். "இங்கே", அவள் கத்திக்கொண்டே கதவிலிருந்து விலகி அந்த வாலிபனின் குறியை கணவனிடம் காட்டினாள்.

இதை பார்த்ததும் கணவன் கோபம்கொண்டு தரையில் வீழ்ந்தான். அவன் திரும்ப எழுந்ததும் மனையாள் கூறியதாவது; "நல்லது உங்களது முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் எங்கே போனது?" "கடவுள் எனக்கு தண்டனை வழங்கட்டும்", என்று அவன் பதில் அளித்தான்.

இக்கதையில் சொல்லப்பட்டுள்ள தந்திரத்துக்காக பெண்ணை போற்றுவீராக, மற்றும் அவர் செயலை நிறைவேற்றிக்கொள்ள எத்தகைய செயலிலும் ஈடுபடுவார்கள் என்பதையும் அறிந்து கொள்வீராகுக.

பெண்களுக்கு நிறைவேற்றிக்கொள்ள எண்ணற்ற தந்திரங்கள் உண்டு, அவற்றை எண்ண முடியாது. அவர்கள் ஒரு யானையை எறும்பின்மீதுகூட ஏறவைத்து விட்டு தம் வேலையை அங்கேயும் நடத்துவார்கள். வெறுக்கத்தக்க இவர்களையும் கடவுள் படைத்துள்ளானே!

## அத்தியாயம்—XII

ஆண்களுக்கும் பெண்களுக்கும் உபயோகப்படும் பல்வித யோசனைகள்.

அறிக ஊசூரே[கடவுள் அவருக்கு நன்மைகள் புரியட்டும்] இந்த அத்தியாயத்தில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்கள் யாவும் அதிகளவு நன்மைகள் வாய்ந்ததாகும், இவைபோன்ற விவரங்கள் இந்த நூலில் மட்டுமே காணப்படும். ஒரு விஷயத்தை தெரிந்துகொள்ளாமலிருப்பதைவிட அதை தெரிந்து கொள்வதே உசிதமாகும். அறிவு என்பது மோசமானதாக இருக்கலாம், ஆனால் அறியாமை என்பது அதனினும் மோசமானதாகும்.

அறிவார்ந்த கேள்விகள் உமக்கு தெரியாததனாகும், அவை பெண்கள் சம்பந்தபட்டவையாகும்,

ஒருகாலத்தில் மோர்பேடா என்ற பெண் இருந்தாள், அக்காலத்தில் அவள் அதீத புத்திசாலியாகவும் யாவற்றையும் அறிந்தவளாகவும் கருதப்பட்டிருந்தாள். அவள் ஒரு தத்துவஞானியாகவும் திகழ்ந்தாள்.

ஒருநாள் அவளிடம் பல்வித கேள்விகள் கேட்கப்பட்டன, அவைகளை அவற்றின் விடைகளோடு தருகிறேன்.

“பெண்ணின் உடலின் எந்த பகுதியில் அவள் மனது அமைந்திருக்கிறது?”—”அவள் தொடைகளுக்கிடையில்”.

“அவள் மகிழ்வுடன் இருப்பது எந்த இடத்தில்?”- “அதே இடத்தில்”.

“ஆண்களை காதலிப்பதும் அதேசமயம் வெறுப்பதும் நிகழ்வது எந்த இடத்தில்?”

_ “நிதம்பத்தில்”, அவள் கூறிவிட்டு மேலும் தொடர்ந்து சொன்னாள், “நாங்கள் காதலிக்கும் ஆண்மகனிடமே அல்குல்லை ஒப்படைக்கிறோம், நாங்கள் வெறுக்கும் ஆண்களிடம் மறுக்கிறோம். நாங்கள் காதலிக்கும் ஆண்களிடம் எங்களது சொத்துக்களை பகிர்ந்து கொள்கிறோம், அவன் சொற்ப அளவில் பொருள்களை கொண்டுவந்தாலும் எங்களுக்கு திருப்தியே, அவன் எப்படி இருந்தாலும் அப்படியே நாங்கள் அவனை அன்பு செய்கிறோம். ஆனால் மற்றொருவகையில் நாங்கள் வெறுக்கும் ஆண்கள் அவர்கள் எவ்வளவு செல்வம் படைத்தவராக இருப்பினும் அவர்களை விட்டு நாங்கள் விலகியே இருக்கிறோம்”.

“பெண்களிடம் எந்த பகுதிகளில் அறிவு, காதல், மற்றும் சுவை ஒளிந்துள்ளது?”—கண்களில், இதயத்தில், நிதம்பத்தில்”

இதுபற்றின விளக்கத்தை அவளிடம் கேட்டபோது அவள் கூறியதாவது; “அறிவு கண்களில் இருக்கிறது, எப்படியெனில் பெண்களின் கண்களானது அழகு தோற்றம் ஆகியவற்றை எடைப்போட்டு மெச்சுகின்றது. இந்த உறுப்பின் வழியே காதலானது இதயத்தில் ஊடுருவி அங்கே தங்கி அதை அடிமைப்படுத்துகின்றது. அப்படி இதயத்தில் அடிமைக்கொள்ளும் பெண்மகள் காதலால் தான் விரும்பும் பொருளை துரத்துகிறாள். அவள் வெற்றிப்பெற்றால் காதலனுக்கும் அவள் அரசிலைக்கும் இடையே போர் நிகழ்கின்றது, நிதம்பமானது அவன்குறியை சுவைத்து அவன் தன் சுவை கசப்பா அல்லது இனிப்பா என்பதை கண்டுபிடிக்கின்றது. இதைவிட வேறொரு சங்கதி உள்ளது, அது நிதம்பமானது ஒன்றை நல்லதா அல்லது கெட்டதா என்பதை கண்டுபிடித்துவிடும்”.

“பெண்களால் எந்த வகை விரைத்திருக்கும் குறியானது விரும்பபடுகிறது? புணர்ச்சிக்காகபெண்கள் எதை விரும்புகிறார்கள்? அவர்கள் வெறுப்புது எதை? எவ்வகையான ஆண்கள் பெண்களால் விரும்பப்படுகிறார்கள்? மற்றும் யார்யார் அவர்களால் வெறுக்கப்படுகிறார்கள்?”

அவள் மேற்கண்டனவற்றுக்கு பதில் உரைத்தாள். “எல்லா பெண்களுக்கும் ஒரேவகையான யோனி இருப்பதில்லை, அவர்கள் புணர்ச்சிக்கு ஆளுக்கு தகுந்தாற்போல் பல்வித நிலைகளை மேற்க்கொள்கிறாள், அவர்களின் காதலும் அவர்களின் வெறுப்பும் இதில் அடங்கும். இதேபோல் ஆண்களிடமும் அவர்களின் குறிக்கும் சுவைக்கும் சுவைக்கும் வேறுபாடு உள்ளது. கொழுத்த உடலும் நீளமற்ற யோனியும் படைத்திருக்கும் ஒரு பெண்ணானவள் நீளத்திலும் கனத்திலும் குறைந்தளவே இருக்கும்குறியை தான் தேடுவாள் அதுதானே அவள் அரசிலையை நிறைக்கும்; நீளமான பருமனான குறியானது அவளது நிதம்பத்திற்கு பொருந்தாது. ஆழமான யோனியும் தூரத்திலிருக்கும் கருப்பையும் கொண்டிருக்கும் பெண், இயல்பாகவே நீளமும் பருமனும் வாய்ந்த குறியை தேடுவாள், அதுவே அவளது அரவணையை நிறைத்து அவளுக்கு அளவில்லாத இன்பத்தை வழங்கமுடியும்; மெல்லிய நீளமற்ற குறியைக்கொண்ட ஆணை அவள் விரும்புவதே இல்லை, ஏனெனில் அவனால் புணர்ச்சியில் அவளுக்கு போதுமான இன்பம் வழங்கமுடியாது”.

“கீழ்வரும் காமவேதனையில் உள்ள பெண்களின் வகைகளை நான் கூறுகிறேன். கோபமுடையவள், துக்கமுடையவள், நம்பிக்கையுடையவள், சோம்பேறியானவள், மற்றும் இக்குணங்களை கலவையாக கொண்டவள்;கோபமுடையவளும் துக்கமுடையவளும் புணர்ச்சிக்கு அவ்வளவாக ஏங்குவதில்லை, இதேபோலதான் இவ்வகையான ஆண்களுக்கும். நம்பிக்கையுடையவளும் சோம்பேறியானவளும் புணர்ச்சியை அதிகளவு விரும்புவார்கள், அவர்கள் குறியானது தம் நிதம்பத்தில் நுழைந்துவிட்டால் பிற்பாடு அதை வெளியில் எடுக்க விரும்புவதில்லை. இதே குணங்களை படைத்திருக்கும் ஆண்மகனும் இவ்வாறே தான் செய்யவிரும்புவான். ஆனால் இவ்வகையான பெண்கள் முன்னிரண்டு குணங்களை படைத்த ஆண்களை மணம் செய்துகொண்டால் வாழ்நாளெல்லாம் அவதியுற வேண்டியதுதான்; கலவையான குணம் படைத்தவர்கள் புணர்ச்சியை விரும்புவதாக காட்டிக்கொள்வதுமில்லை, அதை வெறுப்பதுமில்லை.

“எல்லா சூழ்நிலைகளிலும் சிறியதான நிதம்பம்படைத்த பெண்கள், பெரியதான நிதம்பம் படைத்தவர்களைவிட அதிகளவில் விரைத்த குறிகளின்பால் தம் விருப்பத்தை காட்டுகின்றனர். நீளமாகவும் துடிப்பாகவும் உள்ள குறிகளே அவர்களுக்கு பொருத்தமானதாகும், அதனுடனே படுக்கையில் அதிகளவில் இன்பம் காணுகின்றனர்.

பிற்பாடு நிதம்பத்தின் ஆரம்பத்திலேயே குறியை வைத்துக்கொள்வதில்

சுகம்காணும் பெண்களும் இருக்கின்றனர். ஆண்கள் மல்லாக்க படுத்திருந்து யோனியில் தம் குறிகளைவிட்டு இயங்கதொடங்கும்முன், அவர்கள் தம் கரங்களால் அதை வெளியில் எடுத்துவிட்டு, நிதம்பத்தின் உதடுகளில் தேய்த்துக் கொள்கின்றனர்.

இந்தவகையான செயல்பாடு இதுவரை ஆண்களிடம் பழகாத பெண்களிடமும் இளம்பெண்களிடமும் தான் உள்ளது என நான் நம்புவதற்கு காரணம் உள்ளது. நான் இதுபோன்ற பெண்களிடம், அல்லது ஆண்களிடம் தம்மை ஒப்புவிக்காத பெண்களிடம் இருந்து நம்மை காப்பாற்றுமாறு கடவுளை வேண்டிக்கேட்டுக்கொள்கிறேன்.

அடிஉதை மற்றும் அவமானப்படுத்தலின் வழியாகவே ஆண்களிடம் தம்மை ஒப்படைத்து அவர்களுக்கு இன்பம் தரும் பெண்களும் இருக்கிறார்கள்; சிலர் இக்குணங்களை புணர்ச்சிக்கு எதிராகவோ அல்லது கணவருக்கு எதிராகவோ கொண்டு உள்ளனர். ஆயினும் ஒட்டுமொத்தமாக இப்படி சொல்லிவிட இயலாது; இவை அவ்வபோது அவர்களுக்கு ஏற்படும் குணங்களே;

ஆடம்பரங்கள், மரியாதை, குறிக்கோள்கள்,மற்றும் வியாபாரங்கள் ஆகியவற்றில் கவனம் கொண்டிருக்கும் பெண்களும் கலவியில் அவ்வளவாக கவனம் செலுத்துவதில்லை. அதேபோல் பவித்ரமான இதயம் கொண்டிருப்போரும்,அல்லது பொறாமையில் வெந்து கொண்டிருப்போரும், மறு உலகம் பற்றிய சிந்தனையில் இருப்பவரும், கடந்தகால பாவங்களை நினைத்து வருந்துவோரும்கூட கலவியில் பொதுவாக நாட்டம் கொள்வதில்லை. பொதுவாக கலவியில் ஆழ்ந்த விருப்பம் உடையவர்கள் அவர்கள் நீளமான உறுப்புகளை கொண்டிருப்பவர் என்பது மட்டுமல்ல, அவரின் குணாதசியங்களை பொறுத்த விஷயம். அவற்றில் ஒரு நிதம்பமானது சதுரமானது, மற்றொன்று துருத்திக்கொண்டிருப்பது, இவையிரண்டும் சிறப்பானவையாகும். பெண்மகள் நிற்கும்போதும் அல்லது தொடைகளை இறுக்கியிருக்கும்போதும் வட்டமாக துருத்திக்கொண்டிருக்கும் அரசிலையானது நூதனமானது. அது கலவிக்காக ஏங்கும், பிளவானது குறுகியிருக்கும், அது அமுக்கப்பட்ட ஒன்று என்றும் அழைக்கப்படும். இதுபோன்ற யோனியை உடைய பெண் நீளமும் பருமனும் வாய்ந்த குறியையே தேடுவாள், கலவியில் உச்சக்கட்டத்தை நெடுநேரம் அவளுக்காக தள்ளிவைக்க கூடாது. இருப்பினும் இது பெண்களின் பொதுவான குணமாகும்.

பெண்களின் விருப்பங்களை போலவே ஆண்களின் விருப்பமும் அவர்களின் ஐந்துவகை குணநலன்களை பொறுத்திருக்கிறது.

பெண்களின் குறைகள் யாது? “பெண்களின் குறைகளை கூறினால் அவர்களின் இயற்கை பண்புகளான பொறாமையால் கணவரின் குரலை தன் குரலால் அடக்கிவிடுதல்; மோசடிகள் செய்தல்; எப்போதும் கோபத்துடன் இருத்தல்; தன் அழகை ஆண்கள் பார்க்கவேண்டும் என்ற மோகத்தால் அதை திறந்துபோட்டுக்காட்டுதல், வீட்டில் இல்லாமல் வெளியில் இருக்க தலைபடுதல்; மற்றும் உரக்க சிரிப்பவள் எப்போதும் தெருகதவை பார்த்துக்கொண்டிருப்பவள் முதலானோர் விபச்சாரிகள் ஆவார்.

அடுத்தவர் விவகாரங்களில் அனாவசியமாக தலையிடுபவரும் மோசமான பெண்களே; எப்போதும் குற்றம்குறை சொல்லிக்கொண்டிருப்பவர்; தன் கணவருக்கு சொந்தமான பொருட்களை திருடுபவர்; எதையும் ஒப்புக்கொள்ளாமல் அதிகார மனப்பான்மையை உடையவர்; தான் பெற்ற நல்லவனக்காக நன்றியை உடையாதவர்; தன் படுக்கையை கணவனோடு பகிர்ந்து கொள்ளாதவர்;அல்லது அதில் கணவரை வசதிக்குறைவாக வைப்பவர்; ஏமாற்றுபவர்,வஞ்சகம் செய்பவர்;

துரதிர்ஷ்டமான பெண்களும் இருக்கிறார்கள். தமக்கு தோதான விருப்பம் எழும் சமயங்களில் மட்டுமே கணவனை கலவிக்கு அழைப்பவர்; படுக்கையில் அதிக சத்தம் எழுப்புபவர்; மற்றும் வெட்கமில்லாதவர், அறிவற்றவர், மற்றும் உம்மென்று இருப்பவர்.

இவையே பெண்களிடம் நான் காணும் கெட்ட குணங்களாகும்.

## அத்தியாயம்—XIII

# சந்ததி உற்பத்தியில் இன்பம்

அறிக ஊசூரே{கடவுள் அவருக்கு நன்மைகள் செய்யட்டும்} கலவிக்கான விருப்பத்தை காதலரிடம் வளர்க்கும் ஆசையின் காரணங்களானது மொத்தம் ஆறு வகைப்படும்; தீவிரமான காதலரிடம் உண்டாகும் வெப்பம், விந்துவின் அளப்பரிய உற்பத்தி, தான் விரும்பும் காதலரின் அண்மைவசம், முகத்தின் அழகு, எச்சிலூறவைக்கும் பலகாரங்கள், மற்றும் தொடர்பு முதலியன.

கலவியில் இன்பம் துய்த்தலும், சுகபோகத்தை பெறுவதற்குண்டான நிபந்தனைகளும் ஏராளமாக இருக்கின்றன, ஆனால் அடிப்படையானவைகளும் சிறப்பவானைகளும் பின்வருமாறு; நிதம்பத்தின் வெப்பம், துளை இறுகியிருத்தல், காய்ந்து போயிருத்தல், மற்றும் சுகமான வாசனை உடையாதாக இருத்தல். இந்த நிபந்தனைகளில் ஏதேனும் ஒன்று இல்லாமலிருந்தால்,

சிற்றின்பசுகத்தில் அந்த ஒன்று தேவைப்படும். ஆனால் நிதம்பமானது தேவைப்படும் தகுதிகளை கொண்டிருந்தால் சுகமானது நிறைவுப்படும். ஈரக்கசிவு அதிகமாயிருக்கும் யோனியானது நாடிநரம்புகளை தளர்வுப்படுத்திவிடும், குளிர்ந்திருக்கும் அல்குல்லானது ஆண்கூறியின் சுறுசுறுப்பை பறித்துவிடும், மற்றும் கெட்டவாசம் சுகங்களை இல்லாமல் ஆக்கிவிடும், இந்த வகை அல்குல் அகலமாக இருக்கும்.

சந்தோஷத்தின் உச்சநிலையானது, பீறிட்டெழும் விந்துவின் பாய்ச்சலால் நிகழும், அது ஒரேஒரு சாதகமான சூழ்நிலையால் தான் நிகழும், அதுவென்னவென்றால் யோனியானது உறிஞ்சுக்குழலை[கருவாயின் திறப்பு] கொண்டு ஆண்குறியை பற்றியிழுத்து, விந்துவை ஒரேமூச்சில் உறிந்து குடித்தல். ஆண்குறியானது இந்த கருப்பையால் ஒருமுறை பிடிக்கப்பட்டால், பிற்பாடு காதலன் அதை மீட்டெடுக்க சக்தியிழந்தவனாகிவிடுகிறான், ஏனெனில் விந்துவின் ஒவ்வொரு சொட்டையும் உறிஞ்சி எடுக்கும்வரை கருவாயானது குறியை விடப்போவதில்லை, ஆனால் கருவாய் குறியை பற்றும்முன் விந்துவானது வெளியேறிவிட்டால் சுகமானது முழுமையாக கிட்டுவதில்லை.

விந்து வெளியேற்றத்தில் எட்டு விஷயங்கள் பலம் தருகின்றன. அவைகள்; உடல்நலம்,எல்லா கவலைகளையும் மறந்திருத்தல், வெட்கப்படாத மனது, இயற்கையான சந்தோஷம்,பலம் தரும் உணவுகள், செல்வம், பெண்களின் பல்வேறு முகங்கள், அவர்களின் தேக வண்ணங்கள்.

நீங்கள் கலவிக்கு தேவையான பலத்தை பெறவேண்டுமெனில், ஈச்சமரத்தின் பழத்தை எடுத்து, எண்ணெய் மற்றும் தேனுடன் நன்கு அரைத்து கொள்ளுங்கள்; காலை முதல்வேளையாக அதை குடித்துவிட்டால் கலவி செய்ய தயாரவதுடன் போதுமான அளவுக்கு விந்துவும் உற்பத்தியாகிவிடும்.

இதேபோல் விரைத்திருக்கும் ஆண்குறியை பெண்ணின் நிதம்பத்தை நரியின் பித்தப்பை கொண்டுதேய்த்தால் அதே விளைவு உண்டாகிவிடும். இந்த தேய்ப்பு அவற்றுக்கு ஊக்கம்தந்து, சுறுசுறுப்பை அதிகப்படுத்திவிடும்.

ஜெலினாயஸ் என்கிற துறவி சொல்கிறார்; கலவி செய்ய தான் பலவீனமாக இருப்பதாக எண்ணும் ஆண்மகன், இரவு படுக்கபோகும்முன் ஒரு குவளை அடர்த்தியான தேனை குடிக்கவேண்டும், இத்துடன் இருபது பாதாம் கொட்டைகளையும் நூறு தேவதாரு விதைகளையும் உண்ண வேண்டும். இதை மூன்று நாட்கள்

தொடர்ந்து செய்யவேண்டும். விரதம் இருக்கும் இந்நாட்களில் அவன் இத்துடன் வெங்காயவிதைகளை தேனுடன் சேர்த்தரைத்தும் உண்ண வேண்டும்.

புணர்ச்சியை நல்லபடியாக நடத்தவேண்டும் என்று விரும்பும் ஆண்மகன் ஒட்டகத்தின் திமிலில் இருக்கும் கொழுப்பை தீயில் உருக்கி, கலவியில் இறங்கும்முன் தன் குறியில் தேய்த்துக்கொள்ள வேண்டும்; பின்னர் கலவியில் இறங்கினால் அது அதிசயங்கள் செய்யும், பெண்மகளும் உன்னை வாழ்த்துவாள்.

இன்னும் அதீதமாக கலவியை செய்யவிரும்பினால் மிளகுடன் ஏலக்காய் சேர்த்து மென்று, அத்துடன் அக்கலவையை உந்தன் குறியின் தலைபக்கம் வைத்துவிட்டு கலவி செய்வாய். இதை செய்தால் பிற்பாடு நீயும் உன் துணையும் கலவியில் சோராமல் சுகபோர்புரிவீர்கள். மெக்காவில் இருக்கும் தைலமும் இதே விளைவை தரும்.

புணர்ச்சியில் வலிமையுடன் இயங்க நீங்கள் விரும்பினால், இஞ்சியுடன் சேர்த்து பைரெத்தரையும் அல்லிமலர் தைலத்தையும் ஒன்று சேர்த்து அரைத்து அக்கலவையை உங்களது வயிறு விதைப்பைகள், மற்றும் விரைத்த குறி ஆகியவற்றின்மீது பூசிக்கொள்ளுங்கள். இது உங்களை கலவியில் படு சூரணாக்கும்.

நீங்கள் கலவிக்கு முன்கூட்டியே தயாராக இருந்தால், விந்துவை அதிகளவு உற்பத்தி செய்யவேண்டுமாயிருந்தால், கலவியில் சுறுசுறுப்புடன் இருக்க நினைந்தால், இரும்பாக விரைத்த குறி பெறவேண்டுமானால், பிறகு chrysocolla அதாவது தங்கபஸ்பத்தை கடுகளவு உண்ணுங்கள். இதன் பயன் விளைவானது நம்ப இயலாது அளவுக்கு இருக்கும்.

ஒரு பெண் உம்முடன் கலவி செய்ய பேராவர்த்துடன் இருக்கவிரும்பினால் நீங்கள் கலவிசெய்யும்முன் இலவங்கத்தையும் இஞ்சியையும் ஒன்றுசேர்த்து மென்றால் பிறகு வெற்றிமேல் வெற்றி; அப்போது உமது எச்சிலை குறியில் தடவிக்கொள்ள வேண்டும். பிற்பாடு அவள் உம்மைவிட்டு நொடிநேரம் கூட பிரியவே மாட்டாள்.

கழுதையின் பாலை குறியில் தடவிக்கொண்டு புணர்ச்சியில் ஈடுபட்டால் அது வலிமையுடன் சுறுசுறுப்புடன் இருக்கும்.

பச்சைப்பட்டாணி வெங்காயத்துடன் வேகவைத்து, மற்றும் ஏலக்காய் இஞ்சி இலவங்கப்பட்டையுன் பொடியாக்கி உண்டால் மோகங்கொண்ட பெண்ணுடன் கலவியில் ஈடுபட அதிக பலத்தை கொடுக்கும்.

அத்தியாயம் XVI

# பெண்ணின் மலட்டு கருப்பையின் விளக்கமும் அதனை குணமாக்கும் வழிமுறைகளும்

அறிக ஊசூரே[கடவுள் உமக்கு நன்மைகள் செய்யட்டும்!]ஞானம் மிகுந்த மருத்துவர்கள் இந்த சிக்கலான கடலில், சொற்ப அளவு, அறிவை தேட குதித்து உள்ளனர். ஒவ்வொருவரும் தனது பார்வையிலேயே இந்த விஷயத்தை அணுகி உள்ளனர். முடிவில் கேள்விகளானது ஆழ்ந்த இருட்டில் ஒளிந்துவிட்டது.

கருப்பையில் உண்டாகும் குறைகளில் முக்கியமானவை; இரத்தம் உறைதலும், நீர் சேர்ந்து கொள்ளலும், ஆணின் இல்லாத அல்லது குறைவுப்பட்ட விந்துவும், பெண்களின் சத்து குறைந்த உணவும், ஒழுங்கற்ற மாதவிடாய் போக்கும், மற்றும் கருவறையில் அவ்வபோது நிகழும் காற்றும் தான் காரணங்கள்; மற்ற ஞானிகள் மந்திரதந்திரங்கள் தான் இதற்கு காரணம் என்று கூறுகிறார்கள். மிகவும் பருத்திருக்கும் பெண்களுக்கு மலட்டுத்தன்மை சகஜம், காரணம் யாதெனில் அவர்கள் வயிறானது மடிந்துவிடுவதால், விந்துவை ஏற்றுக்கொள்ள முடியாததால், குறிப்பாக கணவனின் குறி மிகவும் சிறிதாகவும் விதைப்பைகள் பெரிதாகவும் அமைந்திருப்பதனால்; இந்த காரணங்களால் புணர்ச்சியானது அசௌகரியமாக முடிந்துவிடும்.

இந்த மலட்டுகர்ப்பப்பையின் குறைகளை சரியாக்க, ஒட்டகத்தின் திமிலிருந்து மஜ்ஜையை எடுத்து, அதை ஒரு சணல்துணியில் தடவிக்கொண்டு தனது நிதம்பத்தில், அவளது மாதவிடாய் நாட்கள் முடிந்தவுடன் தடவி தேய்த்துவிட வேண்டும். இந்த முறையை முழுமையாக்க, நரிதிராட்ச்சையில் சிறிதளவு எடுத்துக்கொண்டு, ஜாடியொன்றில் அதன் சாற்றை எடுத்துக்கொண்டு, அதில் வினிகரை சேர்க்கவேண்டும்; இந்த மருந்தை அவள் ஏழுநாட்கள் விரதமிருந்து குடித்துவர, அவள் கணவன் அவளோடு உறவுகொள்வான்.

இதற்கிடையில் பெண்ணாகப்பட்டவள் சிறிது எள்விதையை அரைத்து அதனுடன் பீன்ஸ் எடையளவு sandarch தூளை சேர்க்கவேண்டும்; மாதவிடாய்க்குபின் மூன்றுநாட்கள் குடித்துவர வேண்டும்; பிற்பாடு அவள் கணவனோடு சேரலாம்.

முதலில் சொல்லப்பட்ட பானத்தை தனியாக ஒரேமூச்சில் குடிக்கவேண்டும்; இதற்குபின் கடவுளின் விருப்பம் இருப்பின் உடல்நலம் மேம்பட குடிக்கலாம்.

இன்னொரு சிகிச்சையும் உள்ளது. நைட்ரேட்டுடன் ஆடு அல்லது பசுவின் பித்தப்பையோடு கஸ்தூரியினையும் சேர்த்து அதனுடன் அத்தாவரத்தின் விதைகளையும் சேர்க்கவேண்டும். பெண்ணானவள் தனது மாதவிடாய்க்கு பின் பருத்தித்துணியில் இக்கலவையை கொண்டு யோனியில் தேய்க்கவேண்டும்; பிறகு கணவனை சேர்ந்தால், அப்போது சிறப்புமிக்க கடவுளின் அருளும் இருந்தால் அவள் கர்ப்பமடைவாள்.

## அத்தியாயம்- XV

# குறைப்பிரசவத்தை தூண்டும் மருந்துகள்

அறிக ஊசூரே[கடவுள் உமக்கு நல்லது செய்யட்டும்!] குறைபிரசவத்தை உண்டுசெய்யும், மற்றும் கருவை குறையாகவே வெளியே வரவழைக்கும் மருந்துகள் ஏராளமாக இருக்கின்றன. இருப்பினும் நிரூபிக்கப்பட்ட மருந்துகளை பற்றியே நான் பேசுகிறேன், அதனால் அவை நன்மை செய்யும், அதனால் ஒவ்வொருவரும் அவற்றை அறிந்துகொண்டு என்னென்ன தீமைகள் அவை புரிகின்றன என்பதை அறியட்டும்.

முதற்கண் ஒருவகையான பூண்டுவகையை பற்றி பேசப்போகிறேன். சின்னஞ்சிறு அளவில் இதை புதிதாக எடுத்து, அல்லது காயவைத்தும் கூட இருக்கலாம், அதேசமயம் காயவைத்து இருந்தால் பயன்படுத்தும்போது சிராய்த்துவிடும், விரைத்த ஆணுறுப்பின் விந்துவை பாழ்செய்துவிடும், குறைபிரசவத்தை உண்டுபண்ணும், பெண்களின் அரசிலையில் நுழைத்தவேளையில் மாதவிடாயை கொண்டுவரும். விரதத்தை கைக்கொள்ளும் பெண்மகள் இதை காபிதண்ணீரில் கலந்து உட்கொண்டாலும் இதேமுடிவை தரும், வெளிப்புறத்தில் பயன்படுத்தினால் நிதம்பத்தை வழவழப்பாக்கும்.

ஒரு பெண்மகளானவள் ஒரு குழாயிலோ அல்லது நாணல்தண்டிலோ வைத்து, கோஸ்கறிகாயின் விதைகளை கொளுத்தி அதன் புகையை தன் யோனியின் உள்ளே செலுத்தினாலும் குறைபிரசவம் உண்டாகும்.

இப்போது படிகாரத்திற்கு வருகிறேன். இந்த வஸ்து பொடியாக்கப்பட்டு கலவிக்கு முன்னர் நிதம்பத்தில் வைக்கப்பட்டால், அல்லது தூவினால், கர்ப்பத்தில் விந்து நுழைக்கப்படுவது தடுக்கப்பட்டுவிடும்; ஏனெனில் யோனியுடனான விந்து தொடர்பை இது தடைசெய்கிறது. ஆனால் இந்த உபயோகத்தை தொடர்ந்து செய்தால் பெண்மகளை மலடாக்கி நிரந்தரமாக குழந்தை பாக்கியமே அவளுக்கு உண்டாகாது.

மரக்காய்கறியில் உண்டாகும் தார்போன்ற பொருளை ஆண்மகன் தன் குறியில் தடவிக்கொண்டு கலவியில் இயங்குகால் அவனால் கர்ப்பத்தை உண்டாக்கமுடியாது. இது எல்லாவற்றையும்விட அதிகசக்தி வாய்ந்தது.

தன்கர்ப்பகாலத்தின்போது பெண்மகள் ஆண் நிதம்பத்தில் இப்பொருளை அடிக்கடி வைக்குங்கால் குழந்தை இறந்தேபிறக்கும்.

அத்தியாயம்—XVI

## ஆண்களை ஆண்மையற்றவர்கள் ஆக்கும் காரணிகள்

அறிக ஊசூரே, (கடவுள் உமக்கு நல்லது செய்யட்டும்) மனிதர்களின் இயற்கையிலேயே அவர்களுக்கு குளிர்ச்சிதன்மை ஏற்படுவதாலும், உறுப்பில் ஏற்படும் நோய்களினாலும் அவர்களது விந்து சீர்கெடுகிறது. மற்றும் சிறுநீர்குழாய் மாறுபாடு அடைந்திருப்பதால் கீழ்நோக்கி அவர்களது ஆணுறுப்பு வளைந்துவிடும். இந்த குறையினால் விந்துவானது நேரடியாக பீச்சப்படாமல் கீழ்நோக்கி அடிக்கப்படும்.

வேறுசில மனிதர்களுக்கு ஆண்குறி சிறியதாகவும் நீளம்குறைந்தும் காணப்பட்டு கர்ப்பபையின் வாசலை தொடமுடியாமற்போகும், அல்லது விந்தணு விதைப்பைகளில் புண் ஏற்பட்டிருக்கலாம் அல்லது வேறுகுறைகள் ஏற்பட்டிருக்கலாம், இதனால் கலவிசெய்யமுடியாத நிலை உருவாகும்.

இறுதியாக, பெண் உச்சக்கட்டத்தை அடைவதற்கு முன்னர் ஆண் தன் விந்துவை வெளியேற்றி உச்சக்கட்டத்தை அடைந்துவிடுதல், ஆகவே இருவரின் உச்சக்கட்டமும் ஒரேநேரத்தில் நடப்பதில்லை; இதனால் கர்ப்பம் தரிக்காது.

இந்த எல்லாசூழ்நிலைகளும் பெண்ணுடைய கர்ப்பத்தை தடை செய்கிறது; ஆனால் அடிப்படையான காரணம் ஆணின் உறுப்பானது நீளம் குறைவாக இருப்பதுதான்..

மற்றொரு காரணம் தீடிரென்று நிகழும் குளிர்ச்சி, அல்லது வெப்பத்தால் உண்டாகும் ஆண்மையற்றநிலை, இதேபோல் பல்வித காரணிகளும் இருக்கின்றன.

மிகுகுளிரின் காரணமாக விந்துவில் ஏற்படும் குறை, அல்லது ஆணுறுப்பில் ஏற்படும் குறைகள், அல்லது வெளியேற்றுவதில் குறைபாடுகள், ஜுரம் மற்றும் இதர நோய்கள், விந்துவை முன்கூட்டியே வெளியேற்றிவிடுதல் ஆகியனவற்றை சரிசெய்துவிடலாம். குறைபாடுள்ள அவர்கள் தேன், இஞ்சி, வினிகர், ஒருவகையான நச்சுதாவரம், பூண்டு, ஏலக்காய், ஜாதிக்காய், இலங்கம், குருவியின் நாக்கு, சீனத்து இலவங்கம், நீள மிளகு மற்றும் பலவேறு பொருட்கள் அடங்கிய கலவயை உண்டுவரவேண்டும். இவற்றை உண்டுவந்தால்

அவனுக்கு குணம் வாய்க்கும்.

மற்றபடி நாங்கள் குறிப்பிட்ட இதர குறைகள்—ஆணுறுப்பு குழாயனது வளைந்து இருப்பது, விரைத்திருப்பினும் குறியானது சிறிதாக இருப்பது, விதைப்பைகளில் புண் இருப்பது, மற்றும் மற்ற நீக்கப்படாத குறைகள் இவை கலவியினை பாதிக்கும் –கடவுள் மட்டுமே அவற்றை தீர்க்க இயலும்.

அத்தியாயம்—XVII

# ஊசியை நிமிர்த்துதல் அதாவது காலத்தில் ஏற்படும் ஆண்களின் மலட்டுத்தனம்

அறிக ஊசூரே [கடவுள் உமக்கு நல்லது செய்யட்டும்] ஆண்மையற்ற குறை மூன்று காரணிகளால் ஏற்படுகிறது;

முதலில் ஊசியானது கட்டுப்படுத்துவதால் ஏற்படுகின்றது.

இரண்டாவதாக வலுக்குறைந்த தளர்வுற்ற நிலையில் ஏற்படுகின்றது.

மூன்றாவதாக குறைந்த நேரத்தில் வெளிப்படும் விந்து.

இந்த முதல் குறையை ஈடுக்கட்ட மெக்காவிலிருந்து இலவங்கம், இந்திய கிராம்பு, ஜாதிக்காய், சிட்டுக்குருவியின் நாக்கு, கொடிபெர்ரி இவைகளை ஒன்று சேர்த்து அரைத்து காலை மாலைகளில் புறாவின் சாறோடு அது கெட்டநாற்றமாக இருந்தாலும் பரவாயில்லை, குடிக்கவேண்டும். குடிக்கும்முன்னும் பின்னும் தண்ணீர் குடிக்கவேண்டும்.

விந்து வெளியிடுவது முன்கூட்டியே நடந்தால், அவன் ஜாதிக்காயோடு தேனை கலந்து சாப்பிடவேண்டும்.

பலவீனத்தால் ஆண்குறைபாடு எழுந்தால் பின்வரும் பொருட்களை தேனுடன் கலந்து சாப்பிடவேண்டும்; அதாவது எரிச்சலூட்டும் முட்ச்செடியின் விதை, இஞ்சி, மெக்காவிலிருக்கும் இலவங்கப்பட்டை,, மற்றும் ஏலக்காய். இக்கலவையானது பலவீனக்குறைப்பாட்டை சரிசெய்து, கடவுளின் அனுமதியால் குணமாக்கிவிடும்.

இக்கலவைகள் யாவும், என் சோதனைக்கு பிறகு அவைகளின் குணப்படுத்தும் தன்மையை அறிந்து சொல்லப்பட்டது.

ஆணுறுப்பில் உறுதித்தன்மை ஏற்படாவிடின் கலவியை நடத்தமுடியாது, இதற்கு வேறுபல காரணிகளும் இருக்கின்றன. அதாவது புணர்ச்சிக்கு தயாரான ஒரு ஆண் பெண்ணின் தொடைகளுக்கிடையில் தன் உறுப்பை நுழைக்கும்தருவாயினில் அது

விரைப்பை இழந்து தொங்கிபோய்விடும். அதனால் தான் ஆண்மையற்றவனாகிவிட்டோம் என அவன் நினைக்கக்கூடும், ஆனால் இதற்கு எளிமையான காரணங்கள் இருக்கின்றன. அதாவது அவன் உறவுகொண்டிருக்கும் பெண்ணின் மீது அதீத மரியாதை கொண்டிருக்கலாம், வெட்கப்பட்டு கொண்டிருக்கலாம், அல்லது கருத்துவேறுபாடு கொண்டிருக்கலாம், அல்லது அடிக்கின்ற கெட்டவாடையாக இருக்கலாம்; இறுதியாக கலவிச்செய்யபோகும் அந்த பெண் கன்னியாக அல்லாமல் இதற்குமுன்னர் வேறு ஆண்களோடு தொடர்புகொண்டிருக்கக்கூடும் என்ற பொறாமையால் கூட இருக்கலாம்.

# அத்தியாயம்—XVIII

அறிக ஊசூரே, (கடவுள் உமக்கு நல்லது செய்யட்டும்) இந்த அத்தியாயம் விரைத்த குறிகளைப் பற்றி பேசுகிறது, ஆண் பெண் இருவருக்கும். முதலில் ஆணுக்கு, அவன் தன் பெரியதான சுறுசுறுப்புமிக்க உறுப்பானது பெண்களின் காதலை துள்ளிக்குதிக்க செய்யும்; பெண்களை பொறுத்தவரை இதுபோன்ற உறுப்பானது அவர்களின் மோகத்தை தணித்தும், மகாஇன்பத்தை தரவல்லதும் ஆகும். பெரும்பாலான ஆண்களுக்கு, கலவியை பொறுத்தமட்டில், சிறப்பில்லாத குறிகள் இருக்கும், காரணம் இயல்பிலேயே அவர்களுக்கு பெண்களுக்கு வெறுப்பு ஏற்படுவதால்; அதேபோல் பெண்களும் சிறப்பில்லாத நெகிழ்வான, உறுதித்தன்மையற்ற குறிகளை கண்டாலே வெறுப்பு கொள்வார்கள். அவர்களின் ஒட்டுமொத்த சுகமே வலுவான உறுதியான ஆண் குறியிலேயே அமைந்துள்ளது.

அதனால்தான் சின்னஞ்சிறு குறிகொண்ட மனிதன் ஆனவன், கலவியில் கரைகாண விரும்பினால், புணர்ச்சிக்கு முன்பு, அதை வெதுவெதுப்பான நீரில், இரத்தசிவப்பாக ஆகும்வரை கழுவவேண்டும், இதனால் வெப்பம் உண்டாகி அதில் இரத்தம் பாய்ந்தோடும்.பின்னர் தேனும் இஞ்சியும் சேர்ந்த கலவையால் விடாமுயற்சியுடன் தேய்க்கவேண்டும்; பிறகு பெண்ணை சேரவேண்டும், இப்படி நடந்தால் அவன் பெறுமின்பம் கோடி பெறும், பெண்ணும் மறுமுறையும் அவனோடு சேர ஆசைப்படுவாள்.

இக்குறைகளைய மற்றொரு மருத்துவ முறையும் உள்ளது. அதாவது மிளகும், இலாவண்டர் செடிவகையும்,கஸ்தூரியும் எடுத்து மாவாக அரைத்து சலித்தெடுத்து, அக்கலவையை இஞ்சி மற்றும் தேன் கலந்த சேர்க்கையில் சேர்க்கவேண்டும். ஆண்குறியானது வெதுவெதுப்பான நீரில் கழுவப்பட்ட பின்னர், பிறகு இக்கலவை கொண்டு ஆக்ரோஷமாக

தேய்க்கப்பட வேண்டும்; பிறகு குறியானது உறுதித்தன்மையுடன் வளர்ந்து நிற்கும், இக்குறிக்கொண்டு பெண்ணை சேர்ந்தால் அவள் அதீத சுகம் பெறுவாள்.

மூன்றாவதாக பலன் சொல்லும் மருத்துவம். குறியை வெதுவெதுப்பான நீர் கொண்டு கழுவு, அது இரத்தம் பாய்ந்து விரைப்பை அடையும். பின் மென்மையான தோலை எடுத்து, அதில் சூடான பிச்சுக்கட்டியை தடவியபின், குறியைசுற்றி கட்டிவிட வேண்டும். சற்றுநேரத்திலேயே குறியானது மோகவிருப்பங்கொண்டு நன்கு விரைத்து நடுங்கும். தோலானது பிச்சிக்கட்டி ஆறும்வரை குறியிலேயே விடப்படவேண்டும், இப்போது குறியானதுபழைய நிலைமையை அடையத்தொடங்கும். இந்த சிகிச்சை முறையானது சிலதடவைகள் தொடர்ந்து நடத்தப்பட்டால், குறியானது உறுதி தன்மையை பலத்தை அடையும்.

நான்காவது பலன் வருமாறு, இந்த முறை நீரில் வாழுகின்ற அட்டைகள் இதற்கு உதவும். கண்ணாடி பாட்டிலில் போதுமான அட்டைகளை எடுத்துக்கொள்ளவேண்டும், பின்னர் அதில் எண்ணெய்யை ஊற்றவேண்டும். பிறகு சூரியவொளியில் பாட்டிலை வைத்து, எண்ணெய்யும் அட்டைகளும் ஒரே கலவையாக ஆகும் வரை காயவைக்க வேண்டும். பிறகு இக்கலவை கொண்டு தொடர்ந்து சிலநாட்களுக்கு ஆண்குறியின் மீது தேய்த்துவந்தால், அது முழுபரிமாணத்தை அடையும்.

## அத்தியாயம்—XIX

அறிக ஊசூரே, (கடவுள் உமக்கு நல்லது செய்யட்டும்) அகலமான யோனியைபோல் கெட்டநாற்றம் உடைய நிதம்பமும் அக்குள்களும் தீயசக்திகள் உடையன.

ஒருபெண்மகள் இந்த கெட்டநாற்றத்தை போக்க விரும்பினால், ஒருவகையான புதர்ச்செடிகளின் பிசினை அரைத்து சலித்து, பசுமையான இலைகொண்ட நீரில் போட்டு, இந்த நீரால் தன் மறைமுக பிரதேசங்களை கழுவவேண்டும். இதனால் சுவாசிக்கதகாத வாசங்களும் அரசிலையிலிருந்து மறைந்துவிடும்.

மற்றொரு வைத்தியமும் உள்ளது, அது இலாவண்டர் இலையை அரைத்து கஸ்தூரி ரோஜா நீரில் கலக்கவேண்டும். இந்த நீரில் பருத்திதுணியை ஊறவைத்து பின் மறைமுக பிரதேசத்தை அது சிவந்துபோகும்வரை தேய்க்கவேண்டும். இதனால் கெட்டவாசனை போகுமென்று அறிக!

# அத்தியாயம்—XXI

## இந்த நூலின் முடிவுரை

அறிக ஊசூரே, (கடவுள் உமக்கு நல்லது செய்யட்டும்) இந்த அத்தியாயமானது பயனுள்ள தகவல்களை தன்னுள்ளே வைத்திருக்கின்றது. நீடித்த கலவியை எப்படி நடத்துவது? மற்றும் வயதான காலத்தில் உள்ள மனிதனும், நடுத்தரப் பருவத்திலிருக்கும் மனிதனும், இளைஞனும் இதை படித்து பயன் பெறட்டும்.

ஷேக் ஆனவர், மகாசிறப்பு வாய்ந்த கடவுளின் படைப்பான மனிதகுல ஜீவன்களுக்கு நல்ல ஆலோசனை வழங்குகிறார். பெரும் ஞானியும், அவர் காலத்திய மனிதர்களில் மூத்தவருமான அவர் பின்வருமாறு பேசுகிறார். அவரின் வார்த்தைகளைக் கேட்போமாக.

எவனொருவன் முட்டையின் மஞ்சள் கருவை மட்டும் உண்ணுகிறானோ அவன் நோய்களிலிருந்து விடுபடுவதோடு மட்டுமின்றி, கலவியில் கிளர்ச்சி படைத்தவனாக விளங்குகிறான். இதேபோல் முட்டைகளின் மஞ்சள்கருவோடு சேர்த்து வெங்காயத்தை உண்ணுபவன் புணர்ச்சியில் சிறந்து விளங்குகிறான்.

தண்ணீர்விட்டான் கொடியை வேகவைத்து, கொழுப்பில் வறுத்தெடுத்து, அதை முட்டையின் மஞ்சள்கருவோடு சேர்த்து வாசனைபொருட்கள் சேர்த்து, இதை தினமும் உண்ணுபவன் புணர்ச்சியில்தலைசிறந்து விளங்குவதோடு மட்டுமின்றி, தனது அடங்கா ஆசைகளையும் தணித்துக்கொள்வான்.

வெங்காயத்தை உரித்தெடுத்து, ஒரு உலோககலத்தில் போட்டு, உடன் வாசனை பொருட்களையும் அதில் சேர்த்து, அக்கலவையுடன் எண்ணெய் மற்றும் முட்டையின் மஞ்சள் கரு முதலானவற்றை வறுத்தெடுத்து எவன் சிலநாட்களுக்கு உண்ணுகிறானோ அவன் கலவியில் தலைசிறந்து விளங்குவது திண்ணம்.

ஒட்டகத்தின் பாலோடு தேனை சேர்த்து குடித்து வந்தால், அதன் பயன் இடைவிடாத புணர்ச்சிக்கு வழிவகுக்கும், அவன் தன் விரைத்திருக்கும் குறியானது நாளும் பகலுமாக சோர்வுறாது செயல்படும்.

இலவங்கம் மற்றும் மிளகு இவற்றோடு முட்டையை சேர்த்து சமைத்து உண்ணுபவன் புணர்ச்சிக்கு தகுந்த மரியாதை செயவதோடு அவனுடைய ஆற்றல் அதிலே அதிகமாகும். தன் குறியானது பழைய நிலைமைக்கு மீண்டு தொங்கிப்போகாதோ என்ற நிலைக்கு அவன் வந்துவிடுவான்.

இரவுமுழுவதும் தொடர்ந்து கலவி நடத்தவேண்டுமென விரும்பும் ஆண் ஆனவன், சட்டென்று அவன் விருப்பம் ஒரு முடிவுக்கு வந்துவிடும்போது, சடாரென்று மேற்ச்சொன்ன வகையறாவை செய்யமுடியாமல் போகுமானால், கீழ்வருவதை செய்து உண்ணலாம்.முதலில் அவன் நிறைய முட்டைகளை எடுத்துக்கொள்ள வேண்டும், பிறகு அவற்றை புதிதான கொழுப்பிலும் வெண்ணெய்யிலும் வறுத்தெடுத்துக்கொண்டு, பின் அதை தேனில் மூழ்கடிக்கவேண்டும். இக்கலவையை கொஞ்சம் ரொட்டியோடு வேண்டுமளவுக்கு உண்ணவேண்டும், இதனால் முழுஇரவும் அவனுடைய குறியானது அவனுக்கு ஓய்வே கொடுக்காமல் இடைவிடாது இயங்கும்.

இந்த விஷயத்தில் பின்வரும் செய்யுளானது கூறப்படுகிறது.

“ஹபூ எல் ஹெய்லூக் அவர்களின் குறியானது விரைத்தப்படியே இருந்தது,

தொடர்ந்து முப்பது நாட்களுக்கு அப்படியே இருந்தது, காரணம் அவர் வெங்காயத்தை உண்டதுதான்.

ஹபூ எல் ஹெய்ஜா அவர்கள் ஒரே இரவில் எண்பது கன்னிகளை கன்னி கழித்தார்,

காரணம் அவர் தெவிட்டதெவிட்ட கொத்துக்கடலையை உண்டு, பின் தேன்கலந்த ஒட்டகத்தின் பாலை அருந்தியதுதான்.

மைமூன், அவர் நீக்ரோ இனத்தவர், கடைசிவரை தன்விந்துவை வெளியே விடவில்லை,

மொத்தமாக ஐம்பது நாட்கள் தொடர்ந்து கலவியில் இயங்கியபோதும்.

இக்காரியத்தை முடித்தபோது எவ்வளவு பெருமையாக இருந்திருக்க வேண்டும்!

மேற்க்கொண்டு பத்து நாட்களுக்கு தொடர்ந்து இயங்கினார், களைப்பே இன்றி.

ஆனால் அவ்வேளைகளில் முட்டையின் மஞ்சள் கருவையும் கொஞ்சம் ரொட்டியையுமே தின்றார்.

ஹபூ எல் ஹெய்லூக், ஹபூ எல் ஹெய்ட்ஜா, மற்றும் மெய்மூன் ஆகியோருடைய விடாத வேலைகளை இப்போது சொன்னேன், அவை புகழத்தக்கன, அவர்களின் வரலாறும் போற்றத்தக்கன. அதனால் நீவிர் அதை படித்து உய்துணர்க, கடவுளே தயை செய்யுங்கள், இந்த நூலை எழுதி முடிக்க கடைசியாக இவர்களின் வரலாறை சொல்லிமுடிக்க அவற்றை மனிதகுலம் படித்து பயன் பெறட்டும்.

## சோஹ்ராவின் வரலாறு

மதத்தின் காப்பாளரான ஷேக் அவர்கள்[மகா பெருமை பொருந்திய கடவுள் அவருக்கு நல்லது செய்யட்டும்] ஒரு நிகழ்வை பதிவு செய்கிறார். ஒருகாலத்தில் மகாவல்லமை வாய்ந்த அரசன் ஒருவன் இருந்தான், அவனிடம் படைபலமும் செல்வவளமும் ஏராளமாக இருந்தன.

அரசனுக்கு அழகும் வாளிப்பும் நிறைந்த ஏழு புதல்விகள் இருந்தனர். இந்த எழுவரும் ஒருவருக்குபின் ஒருவராக பிறந்தனர். இடையில் ஆண் குழந்தைகள் யாரும் கிடையாது.

அக்காலத்திய அரசர்களுக்கு அவர்களை மணம்புரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆசை இருந்தது, ஆனால் ஏழு புதல்வியிரும் அதை மறுத்து வந்தனர். அவர்கள் ஆண்கள் அணியும் ஆடையை அணிந்துகொண்டு, தங்கத்திலான போர்வைகள் போர்த்திய வலிமைமிக்க குதிரைகளில் சவாரிசெய்துகொண்டு, வாளையும் ஈட்டியையும் எப்படி கையாள்வது என்று கற்றுக்கொண்டும் இருந்தனர். ஆண்களுடன் போர்செய்து அவர்களை ஒரேதடவையில் வீழ்த்தியும் வந்தனர். அந்த ஒவ்வொருவரும் தனித்தனியான அரண்மனையை கொண்டிருந்தனர், அவற்றில் வேலைக்காரர்களையும் அடிமைகளையும் கொண்டு, தமக்கு தேவையான உணவு குடிநீர் மற்றும் இன்னபிற சேவைகளையும் பெற்றுவந்தனர்.

அவர்களின் தந்தையான அவ்வரசனிடம் எழுவரில் ஒருவரை திருமணம் செய்ய யாரேனும் அணுகும்போது அரசனும் சம்பந்தப்பட்ட பெண்ணிடம் சம்மதம் கேட்க தவறுவதில்லை, ஆனால் அவர்களின் ஒரே பதில், “அது மட்டும் நடக்காது”, என்பதுதான்.

அவர்களின் மறுப்பை தெரிவிக்க பல்வித காரணங்களை கூறி வந்தனர், ஒருசில நல்லன, சில காரணங்கள் கெட்டது.

நீண்டகாலமாக அவர்கள் பிடிகொடாத காரணங்களை கூறிவந்து, தம் விருப்பம் போலவே நடந்து வந்தனர், கடைசியில் அரசனும் வயதுவந்து இறந்து போனான். பிறகு மூத்தவள் அரசு உரிமையைக்கைகொண்டு ஆளத்தொடங்கினாள், அக்கம்பக்கத்து நாடுகளெல்லாம் அவர்களுக்கு அஞ்சி பணிந்து நடந்துகொள்ளத் தொடங்கின.

அவர்களில் மூத்தசகோதரியின் பெயர் பௌஸல் தெஜ்மல் (மலரின் அழகு) இரண்டாவது சகோதரியின் பெயர் சுல்தானா எல் அக்மர் (நிலவழகு) மூன்றாவது சகோதரியின் பெயர் பெதியாத் எல் தெஜ்மல் (நிகரற்ற அழகியாள்) நான்காவதான சகோதரி குவார்தா (ரோஜா) ஐந்தாவதானவள் மஹ்மௌதா (போற்றத்தக்கவள்) ஆறாவதானவள்

கமீலா (தீர்க்கமானவள்) இறுதியாக ஜோஹ்ரா (அழகி).

எல்லாரையும் விட இளையவளானள் அந்த நேரத்தில் விவேகமும் புத்திகூர்மையும் உடையவளாயிருந்தாள்.

அவளுக்கு துரத்தி வேட்டையாடுவதில் விருப்பம் அதிகம், அவள் ஒருநாள் நிலத்தின்மீது தன் குதிரையில் சென்றுகொண்டிருக்கும்போது, ஒரு குதிரைவீரனை சந்தித்தாள், அவன் அவளுக்கு வணக்கம் சொல்ல அவளும் பதில் வணக்கம் வைத்தாள். அப்போது அவளுக்கு சேவைபுரிய இருபது வீரர்கள் உடனிருந்தனர். குதிரைவீரன் தான் கேட்டது ஒரு பெண்ணின் குரலாயிற்றே என்று குழம்பினான், ஆனால் ஜோஹ்ராவின் முகமானது மூடுதிரையால் மறைக்கப்பட்டிருந்ததால் அவனால் நிச்சயமாக சொல்ல இயலவில்லை, அவன் தனக்குள் சொல்லிக்கொண்டான், “குதிரை மீதிருப்பவர் ஆணா அல்லது பெண்ணா என நான் தெரிந்து கொள்ளவிரும்புகிறேன்”. அதனால் அவன் இளவரசியின் வீர்ர்களில் ஒருவனிடம் தன் சந்தேகத்தைக்கூற அவனும் அதை நிவர்த்தி செய்தான். ஜோஹ்ராவை அணுகிய அவன் இன்முகத்துடன் பேசி இறுதியில் காலை உண்வை உண்ண அவர்கள் அமர்ந்தனர். அவன் அவளுக்கருகே அமர்ந்து கொண்டு பேச்சை தொடர்ந்தான்.

ஆனால் குதிரைவீரனுக்கு ஏமாற்றமே காரணம் அவள் தன் முகத்திரையை விலக்கவில்லை, தான் விரதத்தில் இருப்பதாகவும் அதனால் உண்ணமாட்டேன் எனவும் கூறிவிட்டாள். இரகசியமாக அவளின் கைகளின் அழகை இரசித்த அவன், அவள் இடையின் வளைவையும், காமம் கொள்ளவைக்கும் பெரிய கண்களையும் கண்டு வியக்காமலிருக்க முடியவில்லை. அவனுடைய இதயம் கண்மூடித்தனமான காதலில் வீழ்ந்தது.

பின்வரும் உரையாடல் அவர்களுக்கிடையே நடந்தது;

குதிரைவீரன்: “உம்முடைய இதயம் நட்பை வரவேற்கின்றதா?”

ஜோஹ்ரா: “ஒரு பெண்ணுடன் ஆண்மகன் நட்பு பாராட்டுவது சரியல்ல.ஏனெனில் அவர்களின் இதயங்களானது ஒன்றுபட்டுவிட்டால், கூடியவிரைவில் உடலாசை மேலோங்க, சாத்தான் அவர்களை தவறு செய்யும்படி தூண்டிவிட, வெகுவிரைவில் அவர்கள் வீழ்ந்துபட்டதை எல்லோரும் அறிந்து கொள்வார்கள்”.

குதிரைவீரன்: “அவ்வாறல்ல. அவர்களின் அன்பானது நேர்மையாக இருந்தால், புணர்ச்சியானது வஞ்சகமும் ஏமாற்றுத்தனமும் இல்லாமல் இருந்தால்”

ஜோஹ்ரா: "ஒரு ஆணின் விருப்பத்திற்கு அடிபணிந்து ஒரு பெண்ணாகப்பட்டவள் நடந்துகொண்டால், உலகத்தின் பொல்லாப்பு அவளுக்கு வந்து சேரும், பொதுவாக சொல்லப்போனால் சிக்கலும் சோகமும் அன்றி வேறு எதுவும் கிட்டாது".

குதிரைவீரன்: "ஆனால் நமது காதல் இரகசியமாக இருக்கும், ஆளரவமற்ற இந்த இடம்,நாம் சந்திக்கும் இடமாக திகழும், எனவே இவ்விடத்திலேயே நாம் புணர்ந்து மகிழலாம்".

ஜோஹ்ரா: "அவ்வாறு நடக்க வாய்ப்பில்லை, மீறி அவ்வாறு நடப்பின் மொத்த உலகமே நம்மை சந்தேககண்கொண்டு பார்க்க ஆரம்பிக்கும், பிறகு நமக்கு எதிராக திரும்பிவிடும்".

குதிரைவீரன்: "ஆனால் காதல், காதல் வாழ்வின் ஊற்று. சுகம் அதாவது நம் சந்திப்பு, அணைத்தல்,காதலர்களின் அரவணைப்பு முதலான. உன் காதலுக்காக எப்படியாப்பட்ட செல்வத்தையும், அதுகூட ஏன், என் வாழ்வையும் இழக்க சித்தமாயிருக்கிறேன்".

ஜோஹ்ரா: "இந்த வார்த்தைகள் காதலின் ஊற்றுக்கண்ணாக இருக்கின்றன, மற்றும் உந்தன் சிரிப்பு மயக்கமூட்டுவதாக உள்ளது, ஆனால் இனிமேல் இதைப்போல் நீ பேசக்கூடாது என அறிவுறுத்துகிறேன்".

குதிரைவீரன்: "உந்தன் வார்த்தைகள் யாவும் மணியைபோல் விளங்குகின்றன, நீ கூறும் புத்திமதியும் தலைசிறந்தவன ஆகும். ஆனால் காதலானது என் இதயத்தில் ஆழப்பதிந்துவிட்டது, அதை ஒருவராலும் பெயர்த்தெடுக்க முடியாது. அதிலிருந்து நீ என்னை விரட்டினால் நான் சாவது திண்ணம்".

ஜோஹ்ரா: "நீங்கள் உங்கள் இடத்திற்கு செல்லுங்கள், நான் என் இடத்திற்கு போகிறேன், இப்போதைக்கு இதைதான் சொல்ல இயலும், கடவுளின் விருப்பம் இருந்தால் நாம் மறுபடியும் சந்திப்போம்".

பிறகு ஒருவருக்கு ஒருவர் விடையளித்துக்கொண்டு, தத்தமது இடங்களுக்கு அவர்களிருவரும் திரும்பினர்.

அந்த குதிரைவீரனின் பெயர் அபூ எல் ஹெய்ட்ஜா என்பதாகும்,அவனுடைய தந்தை கெய்ரூம் ஒரு மாபெரும் வியாபாரி, அவர் மிகப்பெரும் செல்வந்தராக திகழ்ந்தார், அவர்களின் வீடானது இளவரசியின் கோட்டையிலிருந்து ஒருநாள் பிரயாண தூரத்தில் இருந்தது. அபூ எல் ஹெய்ட்ஜா தன் வீட்டிற்கு திரும்பியதும் அவனால் பொறுக்க இயலவில்லை, இரவு பொழுதானதும், போர்வையை சுற்றிக்கொண்டு, தலைப்பாகையை தரித்துக்கொண்டு, போர்வைக்குள்

தன் பட்டாக்கத்தியை மறைத்துக்கொண்டு, குதிரை மீதேறினான்.பின் தன் உற்ற சேவகனான நீக்ரோ மைமூன் என்பவன் உடன்வர இரகசியமாக இருளின் மறைவில் புறப்பட்டு போயினர்.

அவர்கள் இரவு முழுவதும் எங்கேயும் நிற்காது பிரயாணம் செய்தனர், காலை பொழுது விடிந்ததும் அவர்கள் ஜோஹ்ராவின் கோட்டையை கண்டனர். பிறகு அவர்கள் மலையடிவாரத்திலே ஒரு குகையை கண்டு அதில் தம் குதிரைகளை நிறுத்தினர்.

அபூ எல் ஹெய்ட்ஜா நீக்ரோவை குதிரைகளை பார்த்துக்கொள்ள சொல்லிவிட்டு, கோட்டை இருந்த பக்கம் அதை ஆராயப் போனான்.அது உயர்ந்த சுவர்களால் சூழ்ப்பட்டிருப்பதைக் கண்டான். அதனால் அதனுள்ளே நுழையமுடியாது போகவே சற்றுதூரத்தில் வந்து நின்றுகொண்டு, கோட்டைக்குள்ளிருந்து யாரேனும் வருகிறார்களா என்று பார்த்திருந்தான், ஆனால் நாளெல்லாம் காத்திருந்தும் ஒருவரும் வரவில்லை.

சூரிய அஸ்தமனத்திற்குப்பின் குகையின் வாயில் அருகே சென்று நள்ளிரவுவரை விழித்திருந்து பார்த்திருந்தான்; பிறகு தூக்கம் கண்களை சுழற்ற அவன் தூங்கிவிட்டான்.

அவன் மைமூனின் தொடைகளில் படுத்து தூங்கிக்கொண்டிருந்தபோது மைமூன் திடீரென அவனை அசக்கி எழுப்பினான். “என்ன இது? ஏன் என்னை எழுப்பினாய்?” அவன் கேட்டான். “ஓ என் தலைவனே, குகையினுள்ளே ஏதோ ஓசையினை நான் கேட்டேன், தவிர மங்கிய விளக்கொளியையும் நான் கண்டேன்”, என்று மைமூம் கூறினான். உடனே எழுந்த அவன் குகைக்குள் எட்டிபார்க்க அங்கே மங்கிய விளக்கொளியானது தென்பட்டது. உடனே மைமூனை குகைக்குள்ளே தனக்காக காத்திருக்கும்படி சொல்லிவிட்டு பட்டாக்கத்தியை உருவிக்கொண்டு குகைக்குள் மேலும் நடந்தான். அங்கே ஒரு வழி கீழ்நோக்கி இறங்க அதில் நடந்தான்.

அந்த வழி கடினமாக இருக்க, வழியெல்லாம் கற்கள் அடைத்துக்கொண்டிருந்தாலும் அவன் ஒளியை பின்பற்றி கவனமாக நடந்தான். கடைசியில் அவன் இளவரசி ஜோஹ்ரா நூறு கன்னிகள் புடைசூழ இருப்பதைக் கண்டான். அதாவது அந்த அரண்மனை மலையின் கீழே குடைந்தெடுக்கப்பட்டு

உருவாக்கப்பட்டிருக்கிறது. அதில் எங்கெங்கு பார்த்தாலும் தங்கத்தில் வேலைப்பாடு செய்யப்பட்டிருந்தது. வேலைக்காரிகள் உண்டும் குடித்துக்கொண்டும் மகிழ்ந்திருந்தனர்.

அபூ எல் ஹெய்ட்ஜா தனக்குள்ளே சொல்லிக்கொண்டான், “ஆஹா இந்த கடினமான சூழ்நிலையில் நமக்கு உற்றதோழன் இல்லாமல் போனானே”. கண்டிருந்த காட்சியானது அவனுள் உத்வேகத்தை கூட்ட, அவன் தன் வேலைக்காரனிடம் திரும்பிப்போய் சொன்னான், “உடனே என் சகோதரன், அபூ எல் ஹெய்லுக் விடம் சென்று அவனை கூடியவிரைவில் இவ்விடம் வரச்சொல்வாய்”. வேலைக்காரனும் தன் குதிரையேறி, அன்றிரவு முழுக்க அதை ஓட்டி போனான்.எல்லா நண்பர்களையும்விட இந்த அபூ எல் ஹெய்லுக் கை அதிகமாக அபூ எல் ஹெய்ட்ஜா நேசித்தான். அவன் ஒரு ஊசூரின் மகனானவன். அக்காலத்தில் இந்த அபூ எல் ஹெய்ட்ஜா, அவன் தோழன் மற்றும் மைமூன் ஆகியோர் பலம்வாய்ந்த ஆண்களாக இருந்தனர், அவர்களிடம் வேறுயாரும் போர்புரிந்து ஜெயிக்க முடியவில்லை.

நீக்ரோ மைமூன் தன் தலைவனின் தோழனை சந்தித்து நடந்த விஷயங்களைகூற அவனும் பதில் கூறினான். “நிச்சயமாக கடவுளின் ஆணைப்படி நாம் அவனிடம் போவோம்”. பிறகு அவனும் தன் பட்டாக்கத்தியை எடுத்துக்கொண்டு குதிரை மீதேறி மைமூனுடன் அந்த குகைக்கி விரைந்து போனான்.

அபூ எல் ஹெய்ட்ஜா வெளியே வந்து முகமன் கூறிவிட்டு, ஜோஹ்ராவின் மேல் தனக்கு உண்டான காதல் விவகாரங்களை விளக்கமாக எடுத்துக்கூறினான், மற்றும் தான் அந்த அரண்மனைக்குள்ளே நுழைய இருந்ததாகவும் முடியாமல் குகைக்குள்ளே வந்தபின் அந்த அற்புதமான காட்சியை கண்டதாகவும் கூறினான். அபூ எல் ஹெய்லுக் ஆச்சரியத்தால் சமைந்து போனான்.

அன்றிரவு அவர்கள் ஆடல் பாடல் சிரிப்பு மற்றும் இன்பகரமான பேச்சொலியையும் கேட்டனர். அபூ எல் ஹெய்ட்ஜா தன் நண்பனிடம் கூறினான், “குகையின் அந்த முனைக்கு சென்று வழியில் எட்டிப்பார். பிறகு நான் எதற்க்காக் அப்படி ஆசைப்பட்டேன் என்பதை நீயே புரிந்துக் கொள்வாய்” அபூ எல் ஹெய்லுக்கும் மெதுவாக நடந்துசென்று அரண்மனையின் உட்புறத்தை பார்த்து, அதிலிருந்த கன்னிகளின் அழகையெல்லாம் கண்டு வியந்துபோனான். “இவர்களில் ஜோஹ்ரா என்பவள் யாரோ?” என்று கேட்டான்.

அபூ எல் ஹெய்ட்ஜா பதில் கூறினான், “ பிரமாதமான நெளிவு சுளிவுகளுடன், அழகான சிரிப்புடன், கன்னங்களில் ரோஜா வண்ணத்துடன், நெற்றியானது பால்வெண்மை, தலையில் முத்துக்களாலான கீரிடம், அவளின் ஆடைகள் தங்கத்தில் இருக்கும். அவள் வெள்ளியில் பொதிக்கப்பட்ட நவமணிகளாலான அரியணையில்

தன் கைமீது சாய்ந்து கொண்டிருப்பாள்".

"நான் அவளை கண்டுகொண்டேன், அவள் தீப்பந்தம் போல் ஜொலித்துக்கொண்டிருக்கிறாள்.ஆனால் சகோதரனே ஒரு விஷயத்தை உன்னிடம் நான் கூறவேண்டும், அந்த விஷயம் உன்னை பாதிக்கும் என்ற போதிலும்", என்று அபூ எல் ஹெய்லுக் கூறினான். "என்னது அது?" என்று அபூ எல் ஹெய்ட்ஜாவும் கேட்டான். அதற்கு அவன் நண்பன் கூறினான், "ஓ என் சகோதரனே, இந்த இடத்தின் தனிதன்மையை குறித்து நான் விசனப்படுகிறேன். உள்ளிருக்கும் இம்மக்களை நன்றாக கவனித்துப்பார், அவர்கள் இரவுபொழுதுகளில் மட்டுமே இங்கு வருகிறார்கள், மற்றும் இந்த இடம் தனிமையில் உள்ளது. இவ்விடமானது குடிப்பதற்கும் உண்ணுவதற்கும் கெட்டகலவிக்கும் ஆனது என நம்புவதற்கு இடமுள்ளது. இப்போது நீ உன் காதலால் இங்கே வந்திருக்கிறாய், ஆனால் உனக்கு ஏமாற்றமே கிட்டும், மற்ற மனிதர்களின் மூலம் அவளை தொடர்புகொண்டாலும் அவள் அதை ஏற்க மறுத்துவிடுவாள்". "ஏன் அப்படி?",என்று அபூ எல் ஹெய்ட்ஜா கேட்டான். அவன் தோழன் கூறினான், "ஏனெனிலோ நான் பார்த்தவரை ஜோஹ்ரா இளம்பெண்களின் அருகாமையில் இருக்கவே பிரியப்படுகிறாள், அதனால்தான் அவளுக்கு ஆண்களிடம் காதல் வரவேயில்லை, மற்றும் அவர்களை ஒருபொருட்டாக மதிப்பதில்லை".

"ஓ அபூ எல் ஹெய்லுக்", என்று விளித்த அபூ எல் ஹெய்ட்ஜா, "நான் உனது முடிவை எப்போதும் வரவேற்பேன், அதனால்தான் உன்னை இங்கே வரும்படி அழைத்திருக்கிறேன். நான் உந்தன் அறிவுரையை கேட்கவோ அல்லது ஆலோசனையை தவறவிடுவதோ இல்லைஎன்பதை நீ அறிவாய்!" அந்த ஊசூரின் மகனானவன் கூறினான், "கடவுளானவர் உனக்கு இந்த வழியை காட்டியிராவிட்டால், நீ ஜோஹ்ராவை அணுகியிருக்கவே முடியாது. இப்போது இங்கிருந்து நம் வழியை ஆராய்வோம்".

அடுத்தநாள் காலை சூரிய உதயத்தின்போது, அவர்கள் தம் வேலைக்காரர்களிடம் அந்த இடத்திற்கு போவதற்கு வழியை உண்டுபண்ணுமாறும் வழியில் தடங்கல் இருந்தால் அவைகளை அகற்றும்படியும் உத்தரவிட்டனர். கட்டளை நிறைவேற்றப்பட்டதும் அவர்கள் தம் குதிரைகளை திருடர்களிடமிருந்து மிருகங்களிடமிருந்து காப்பாற்ற மற்றொரு குகையில் ஒளித்து வைத்தனர்.பிற்பாடு நால்வரும், அதாவது இரண்டு எஜமானர்களும் இரண்டு வேலைக்காரர்களும், அந்த குகைக்குள் நுழைந்து அரண்மனைக்குள் எல்லாரும் வாள் தாங்கிய கோலத்தில் உள்ளே நுழைந்தனர். பிறகு தோண்டப்பட்ட வழியை

அவர்கள் சுவடு தெரியாமல் மூடிமறைத்து விட்டனர்.

இப்போது அவர்கள் இருட்டிலிருந்தனர், ஆனால் அபூ எல் ஹெய்லுக் தீக்குச்சி ஒன்றை உரசி மெழுகுவர்த்தியை பற்றவைத்தான், இப்போது உண்டான வெளிச்சத்தில் அவர்கள் அந்த இடத்தை ஆராய்ந்தனர். வியப்பிலும் வியப்பூட்டுவதாக அந்த இடம் இருந்தது. மரச்சாமான்கள் யாவும் அற்புதமாக இருந்தன. எங்கெங்கு நோக்கினும் தூங்கும் மெத்தைகளும் உட்காரும் நாற்காலிகளும் இருந்தன, பிரமாதமான சரவிளக்குகள், சமமான தரைவிரிப்புகள் மற்றும் மேஜைகளின் மேலே பழங்களும் குடிப்பதற்கான பானங்களும் இருந்தன.

அவர்கள் இந்த புதையல் செல்வங்களை வியந்தபின், ஆங்கிருந்த அறைகளை எண்ணத்தொடங்கினர். அவை ஏராளமாக இருந்தன, அவற்றில் இறுதியாக இருந்த அறையில் ஒரு சின்னஞ்சிறு வழியொன்று இருந்தது அவர்களின் கவனத்தை கவர்ந்தது. அபூ எல் ஹெய்லுக் சொன்னான், “இந்த வழிதான் அரண்மனைக்குச் செல்லும்வழி என நான் சந்தேகப் படுகின்றேன். ஓ என் சகோதரனே, வா அவர்கள் வரும்வரை காத்திருப்போம்.” உடனே அவர்கள் உயர இருந்த பரண்களில் கஷ்டப்பட்டு ஏறி மறைந்துகொண்டனர்.

இப்படியே அவர்கள் இரவுவரை காத்திருந்தனர். இறுதியில் அந்த இரகசியவழியைத் திறந்து, நீக்ரோ வேலைக்காரி தீப்பந்தத்துடன் உள்ளேவந்து, சரவிளக்குகளை ஏற்றி, மெத்தைகளை சீர்செய்து, தட்டுகளை, கிண்ணங்களை, பாட்டில்களை, ஒழுங்காக மேஜைகளில் வைத்து மற்றும் அறைக்குள்ளே நறுமணங்களைத் தவழவிட்டாள்.

சற்றுநேரத்தில் பணிப்பெண்கள் உள்ளே நுழைந்தனர். அவர்களின் நடைப்பாங்குகளானது பலங்குன்றியவர்போல மெல்ல இருந்தது. அவர்கள் திவான்களில் அமர்ந்துக்கொள்ள நீக்ரோ இனப்பெண் அவர்களுக்கு இறைச்சி மற்றும் பான்ங்களை வழங்கினாள். அவர்கள் அவற்றை உண்டு குடித்து மெதுவாக பாடிக்கொண்டிருந்தனர்.

அவர்கள் மது மயக்கத்தில் மெல்ல மயங்குவதை பார்த்த அந்த நால்வரும் கைகளில் பட்டாக்கத்திகளை ஏந்தியப்படி தம் ஒளிவிடத்தை விட்டு வெளியே வந்தனர். அவர்கள் பணிப்பெண்களின் முகங்களில் இருந்த திரைகளை விலக்கினர்.

“யார் இவர்கள்?” என்று ஜோஹ்ரா வீறிட்டாள், “இந்த இரவில் நம் இடத்தை ஆக்ரமிப்பவர் யாரோ? நீங்கள் பூமியை பிளந்துகொண்டு வந்தீரா? அல்லது வானத்தில் இருந்து குதித்தீரா? உமக்கு என்ன தேவை?”

“புணர்ச்சி”, அவர்கள் பதிலளித்தனர்.

“யாரோடு?” ஜோஹ்ரா கேட்டாள்.

“என் கண்ணின் கருவிழியே உன்னுடன் தான்!” என்று முன்னால் வந்தபடியே அபூ எல் ஹெய்ட்ஜா கூறினான்.

ஜோஹ்ரா: “யார் நீ?”

“நான் அபூ எல் ஹெய்ட்ஜா”.

ஜோஹ்ரா: “என்னை எப்படி அறிவாய்?”

“உன்னை இதற்குமுன் நீ வேட்டைக்கு சென்றிருந்தபோது இந்த இடத்தில் சந்தித்து இருக்கிறேன்”.

ஜோஹ்ரா: “இப்போது எதற்கு வந்தீர்கள்?”

“மகாபெருமை வாய்ந்த கடவுளின் அருளால்”.

இந்த பதிலைக்கேட்டு சோஹ்ரா அமைதியாகி, எப்படி அழையாமல் வந்த இவர்களை விரட்டுவது என்று யோசித்தாள்.

ஆங்கிருந்த கன்னிகளில் சிலரின் நிதம்பங்கள் இரும்புத்திரை கொண்டு மூடப்பட்டிருக்கிறது, யாராலும் அவர்களை கன்னிக்கழிக்கவே முடியாது. அவ்விடத்தில் மௌனா என்ற பெண்ணும் இருந்தாள், அவளை காமத்தில் யாராலும் திருப்திப்படுத்தவே முடியாது.சோஹ்ரா தனக்குத்தானே சிந்தித்துக் கொண்டாள், “தந்திரத்தால் தான் இந்த ஆண்களை விரட்டவேண்டும். இந்த பெண்களை வைத்து நான் சொல்லும் பந்தயத்தில் வெல்லமுடியாமல் இவர்கள் ஓடப்போவது உறுதி”. பிறகு அபூ எல் ஹெய்ட்ஜின் பக்கம் திரும்பிய அவள் பின்வருமாறு கூறினாள், “ நான் சொல்லப்போகும் நிபந்தனையை பூர்த்திசெய்யாது நீ என்னை அடையமுடியாது”. நான்கு குதிரைவீரர்களும் அவள் என்னசொல்லப்போகிறாள் என்பதை அறியாமலே அதற்கு ஒப்புக்கொண்டனர், அவள் தொடர்ந்து சொன்னாள், “ஆனால் அதை நடத்தமுடியாது போனால், என்னுடைய சிறைக்கைதிகளாக இருக்கவும், நான் சொல்லும் கட்டளைகளை சிரமேற்க்கொண்டு நடத்தவும் நீங்கள் சித்தமாயிருக்க சம்மதிக்கின்றீரா என்பதை சொல்லவும்?” ”நாங்கள் உன் வார்த்தைகளை ஒப்புக்கொள்கிறோம்” என்று அவர்கள் பதிலளித்தனர்.

அவள் அவர்களை கட்டுப்படுத்தும் பிரமாணத்தை செய்யச்சொல்ல அவர்களும் தம் வார்த்தைகளில் உறுதியுடன் இருப்பதாககூறி சத்தியம் செய்தனர். பின் அவள் அபூ எல் ஹெய்ட்ஜாவின் பக்கம் திரும்பி,”நீவிர் இங்கிருக்கும் எண்பது கன்னியரை கன்னி கழிக்கவேண்டும், அதுவும்

விந்துவானது வெளியேறாமல். இதுதான் என்னுடைய முதல் நிபந்தனை!" "அவன் தாமதியாமல் கூறினான், "இதற்கு ஒப்புக்கொள்கிறேன்"

பின் அவள் அவனை ஒரு அறைக்குள் அனுப்பிவைத்தாள், அங்கே பலவித மெத்தைகள் இருந்தன, பிறகு அவனிடம் எண்பது கன்னியரை வெற்றிக்கொள்ள அனுப்பிவைத்தாள்.அபூ எல் ஹெய்ட்ஜா ஒரே இரவில், சொட்டு விந்துவையும் வீணடிக்காது, எல்லோரையும் கன்னி கழித்துவிட்டான். இந்த அற்புதமான செயலானது ஜோஹ்ராவையும் மற்றவர்களையும் ஆச்சரியப்படுத்தின.

இளவரசி நீக்ரோ மைமூனின் பக்கம் திரும்பி கேட்டாள், "உன் பெயர் என்னவோ?" "மைமூன்", அவள் மௌனாவை சுட்டிக்காட்டி, "உனக்கிடப்பட்டிருக்கும் பந்தயம், இந்த பெண்ணை ஐம்பது நாட்களுக்கு விடாது கலவி செய்யவேண்டும், நீ விரும்பினால் விந்துவை வெளியே விடாமல் இருக்கலாம்; ஆனால் களைப்பானது உன்னை கவர்ந்திழுத்தால் உனது பந்தயத்தில் தோற்றுப்போய்விட்டாய் என்று பொருள்". எல்லோரும் இது அநியாமான பந்தயம் என்று வீறிட்டார்கள். ஆனால் மைமூன் அவற்றை மறுத்துவிட்டு, சொன்னான், "நான் உமது நிபந்தனையை ஏற்றுக்கொள்கிறேன், அதை நிறைவேற்றிவிட்டு வெற்றிக்கரமாக திரும்புவேன்". உண்மையில் அந்த நீக்ரோவுக்கு புணர்ச்சியில் கட்டுக்கடங்காத ஆசையும் புணர்வதற்கு உண்டான பலமும் இருந்தன. ஜோஹ்ரா மௌனாவுடன் அவள் அறைக்கு செல்லுமாறு கட்டளையிட, அதேசமயம் அவன் களைப்பு அடைகிறானா என்பதை கண்டறிந்து உடனே தன்னிடம் கூறுமாறு மௌனாவிடம் அறிவுறுத்தினாள்.

"நீ தான் உன் பெயர் என்னவோ?" அபூ எல் ஹெய்ட்ஜாவின் தோழனை பார்த்து இளவரசி கேட்டாள். "அபூ எல் ஹெய்லுக்", அவன் பதில் அளித்தான். "நல்லது அபூ எல் ஹெய்லுக், நீ இங்கே இவ்விடத்திலேயே அடுத்த முப்பது நாட்களுக்கும் இந்த கன்னியர் மற்றும் பெண்கள் முன்னாடி இருக்கவேண்டும், அப்போது உன் குறி விரைத்த நிலையிலே இருக்கவேண்டும், அதாவது முப்பதுநாட்களில் நொடிநேரமும் அது தொங்கிவிடக்கூடாது".

பின் அவள் நான்காவதாக நின்ற ஆளைப் பார்த்துக் கேட்டாள். "உன் பெயர் என்ன?"

"ஃபெலா (நல்லசகுனம்)" என்பதுவே அவனது பதில். "நல்லது ஃபெலா, நீ இங்கேயே இருந்து நாங்கள் சொல்லும் வேலைகளை செய்ய வேண்டும், இதுவே உனக்கிடப்பட்டிருக்கும் வேலை", என்று கூறினாள்.

ஆனாலும் ஜோஹ்ரா தன்னை ஒரு கெட்டவளாக சித்தரித்துக்கொள்ள விரும்பவில்லை, ஆதலினால் பந்தயநாட்களில் அவர்களுக்கு என்னென்ன தேவை எனக் கேட்டாள். அபூ எல் ஹெய்ட்ஜா அருந்துவதற்கு பானம்—தண்ணீரன்றி- தேனோடு கலந்த ஒட்டகத்தின் பாலைக் கேட்டான், மற்றும் உண்ணுவதற்கு இறைச்சியுடன் வெங்காயம் சேர்த்து சமைக்கப்பட்ட கொத்துக்கடலையும் கேட்டான்; இந்த உதவிக்கரமான பதார்த்தங்களால் கடவுளின் உதவியோடு தான் எடுத்துக்கொண்ட காரியத்தில் அவன் வென்றுவிட்டான். அபூ எல் ஹெய்லுக் இறைச்சியுடன் வெங்காயம் சேர்த்து சமைக்கப்பட்டதையும் குடிப்பதற்கு வெங்காயச்சாறு சேர்ந்த தேனையும் கேட்டான். மைமூன் தனது பங்குக்கு முட்டையின் கருக்களையும் ரொட்டியும் கேட்டான்.

இருந்தாலும் அபூ எல் ஹெய்ட்ஜா தனக்கிடப்பட்ட நிபந்தனையை பூர்த்தி செய்துவிட்டதால் இளவரசி தன் ஆசையை நிறைவேற்ற வேண்டும் எனக்கேட்டுக் கொண்டான். அவள் அவன் வார்த்தைகளுக்கு பதில் கூறினாள், “அது நடக்காது. நீ உமக்கு இடப்பட்டிருக்கும் நிபந்தனையை பூர்த்திசெய்து விட்டாலும், உமது தோழர்கள் இன்னும் முடிக்கவில்லையே? நீங்களும் உமது தோழர்களும் ஒட்டுமொத்தமாக நான் சொன்ன நிபந்தனையை செய்து முடித்தால்தான், எனது சத்தியத்தை நிறைவேற்றுவேன். ஆனால் உங்களில் யாராவது ஒருவர் தோற்றுப்போனாலும்கூட, கடவுளின் அருளால் நீங்கள் என் கைதியாக ஆக வேண்டும்”.

அபூ எல் ஹெய்ட்ஜா அவளின் முடிவை ஏற்றுக்கொண்டு, கன்னியரோடும் பெண்களோடும் அமர்ந்து குடித்துக்கொண்டும், உணவுண்டு கொண்டும் தன் நண்பர்கள் தமது வேலைகளை முடித்து வெற்றிக்கரமாக வரவேண்டுமே என்ற பதைப்பில் காத்துக் கொண்டிருந்தான்.

முதலில் அன்பான சிரிப்புடன் அவர்கள் எல்லாம் தோற்றுப்போயவிடுவார்கள் என்ற மமதையில் ஜோஹ்ரா அமைதியாக இருந்தாள். ஆனால் இருபதாவது நாள் வந்ததும் அவளிடம் கவலை தோன்ற ஆரம்பித்தது. முப்பதாவது நாளில் கண்களில் தோன்றிய கண்ணீரை அவளால் அடக்க முடியவில்லை. ஏனெனில் அந்த முப்பதாவது நாளில் அபூ எல் ஹெய்லுக் அவள் சொன்ன நிபந்தனையை வெற்றிக்கரமாக பூர்த்திசெய்துவிட்டு கம்பீரமாக வெளியே வந்தான்.அவன் தன் தோழனின் இருக்கைக்கு பக்கமாக அமர்ந்துக்கொண்டு அமைதியுடன் உணவுண்டு பானங்களை அருந்தவும் ஆரம்பித்தான்.

இந்த நேரத்தில் நீக்ரோ மைமூனின் தோல்வியை தவிர்த்து வேறுகதி இல்லாததால் அவன் தோற்றுபோகவேண்டுமே என்று இளவரசி நினைக்க ஆரம்பித்தாள். அவள் தினந்தோறும் மௌனாவிடம் ஆளை அனுப்பி விஷயத்தை கேட்டுவரச்சொன்னாள், ஆனால் மைமூனின் பலம் நாளுக்குநாள் வளர்ந்துக்கொண்டே வருவதாக அவன் வந்து சொல்வான். முன்னமே அபூ எல் ஹெய்ட்ஜாவும் அபூ எல் ஹெய்லுக்கும் வெற்றிப்பெற்று ஆசனங்களில் பெருமிதத்துடன் அமர்ந்திருப்பதைக் கண்டிருந்த அவள் மேற்க்கொண்டு வந்துகொண்டிருந்த இந்த செய்தியால் நம்பிக்கை இழந்து போனாள். ஒருநாள் அவள் இருதோழர்களிடமும் கூறினாள், “நான் நீக்ரோவை பற்றி விசாரித்தேன், மௌனா அவன் களைப்பு அடைந்துவிட்டதாக தெரிவித்தாள்”, இதைக்கேட்டு அபூ எல் ஹெய்ட்ஜா கூவினான், “கடவுளின் பெயரால்! அவன் மட்டும் அந்த வேலையை வெற்றிக்கரமாக முடிக்காவிடில், இன்னும் பத்து நாட்களுக்கு வெற்றிக்கரமாக இயங்காவிட்டால் அவன் அவமானகரமான மரணத்தை தழுவ போவது உறுதி”.

ஆனால் சுறுசுறுப்பு வாய்ந்த அந்த வேலைக்காரன் ஐம்பது நாட்களிலும் தனக்கிடப்பட்டிருக்கும் வேலையை வெற்றிக்கரமாக பூர்த்திசெய்து முடித்துவிட்டான். மௌனா அவளின் பங்கிற்கு அவள் மொத்தத்தில் திருப்தியானவுடன் அவன் காலடியிலே அமர்ந்துவிட்டாள். வெற்றிப்பெற்ற மைமூன் தனது நண்பர்களுடன் அமர்ந்து கொண்டான்.

பிற்பாடு அபூ எல் ஹெய்ட்ஜா ஜோஹ்ராவிடம் சொன்னான், “ நீ எங்கள் மீது சுமத்திய அத்தனை நிபந்தனைகளையும் பூர்த்தி செய்து விட்டோம். இப்போது ஒப்பந்தம் செய்தபடி நடந்து கொள்ளவேண்டியது உன்னுடைய கடமை” “உண்மைதான்”, என்று சொன்ன இளவரசி அவனிடம் தன்னை ஒப்புவித்தாள். அவன் எல்லோரையும் விட அவள் வெகு சிறப்பானவள் என்பதை அந்த கலவியிலேயே கண்டுகொண்டான்.

நீக்ரோ மைமூன் மௌனாவை மணம் செய்து கொண்டான். எல்லா கன்னியரிலும் தனக்கு பிடித்தமானவளை அபூ எல் ஹெய்லுக் தேர்ந்தெடுத்துக்கொண்டு மணம் புரிந்துக்கொண்டான்.

அவர்கள் எல்லோரும் அரண்மனையிலேயே தங்கியிருந்துகொண்டு, அவர்களின் இறுதிக்காலம்வரை மனமொத்து இன்புற்று வாழ்ந்திருந்தனர், கடவுள் அவர்களுக்கு எல்லா முஸ்லீம்களைப்போல கருணையாளராக திகழ்ந்திருந்தார், ஆமென்!

முன்சொன்ன செய்யுள் குறிப்புக்களானது சந்தேகத்தைத் தோற்றுவிக்கும். நான் அதுபற்றிய விளக்கத்தை இங்கே தருகிறேன்.

கற்றவர்களும் ஞானிகளும் இந்தப் பதார்த்தங்களை சோதித்துப் பார்த்துவிட்டு நான் சொன்னது உண்மைதான் எனக் கூறியுள்ளனர்.

இந்த பானங்களை தவிர்த்து வேறுபல பானங்களும் உள்ளன, அவை பின்வருமாறு. வெங்காயத்திலிருந்து எடுக்கப்பட்ட சாறு ஒருபங்கு, அதை இருபங்கு தேனோடு கலந்துகொள்ள வேண்டும். இக்கலவையை நெருப்பில் வைத்து சூடுபடுத்தி வெங்காயச்சாறு தேனோடு கலந்துபோகும்வரை காயவைக்க வேண்டும். பிறகு அது குளிரும்வரை காத்திருந்தபின் வேண்டுமான அளவுக்கு உட்கொள்ளலாம். இந்தக் கலவையை எடுத்துக்கொண்டு அதில் நீரைச்சேர்த்து அரைத்த கொத்துக்கடலையை அதில் சேர்த்து பின், ஒரு நாளுக்கு அப்படியே வைத்திருக்க வேண்டும்.

இந்த திரவத்தை படுக்கைக்குப் போவதற்குமுன் குடிக்கவேண்டும். அதுவும் குளிர்காலத்தில் மட்டும். அதைச் சிறிதளவு மட்டுமே அதுவும் ஒருநாளுக்கு மட்டுமே குடிக்கவேண்டும். அதைக் குடித்தவனின் குறியானது அன்றிரவு முழுக்க அவனை தூங்கவிடாது. ஒரு ஆண்மகன் தொடர்ந்து இத்திரவத்தைக் குடித்துவந்தால் அவன் தன் குறியானது தொங்காமல் எழுந்து நிற்கும். முன்னமே ஊக்கத்துடன் உள்ள மனிதன் இதை குடிக்கலாகாது, ஏனெனில் காய்ச்சல் வந்துவிடும். அதிக கோபம் கொண்டோராலும் வயதானவராலும் இதை எடுத்துக்கொள்ளக்கூடாது மற்றும் மூன்று நாட்களுக்குமேல் இதை தொடர்ந்து சாப்பிடக்கூடாது. குறிப்பாக, வெயிற்காலத்தில் இதை குடிக்கக்கூடாது.

***

(முற்றும்)

செக்ஸ் இன்பத்தை அள்ளித்தரும் மூலிகைகள்

செக்ஸ். எல்லோர் வாழ்க்கையிலும் முக்கியமான ஓர் அங்கமான ஒன்று. அது நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நம்மில் கிளர்ந்தெழும். மனித உடலில் இயற்கையாக எழக்கூடிய செக்ஸ் உணர்ச்சியானது இன்பம் தரக்கூடியது, தனி உலகுக்கு நம்மை அழைத்துச் செல்லக்கூடியது.

உலக இன்பங்களை எல்லாம் துறந்து, இறைவனை நினைத்து தவமிருந்த மகாயோகி விஸ்வாமித்திரரின்முன் அழகுப்பதுமையான மேனகை வந்து நின்றதும் அவர் தவத்தைக் கலைத்துவிட்டு அவளுடன் காதல் வசப்பட்டார். காமம் கண்ணை மறைக்க, அதை எதிர்கொள்ளமுடியாத நிலைக்கு அவர் தள்ளப்பட்டது சரித்திரம்.

அதனால்தானோ என்னவோ, ‘சொல்லித் தெரிவதில்லை மன்மதக் கலை’ என்றார்கள். காமசக்தியை எந்த ஓர் உயிராலும் கட்டுப்படுத்த முடியாது. இயற்கையாக எழும் காமத்தை தவறாகச் சித்தரித்து, அதை அடக்க வேண்டும் என்றும், காமம் ஒரு பாவம் என்பது போன்றும் விஷமத்தனமான பரப்புரைகள் மனிதர்களிடையே திட்டமிட்டு விதைக்கப்பட்டு வருகின்றன. உண்மையில், காமம் என்பது மகிழ்ச்சி தரும் ஓர் உன்னத அனுபவம் என்பதை நாம் எண்ணிப்பார்க்க வேண்டும். மாறாக, பயந்து பயந்து அதை அனுபவிக்கக்கூடாது. ஆனால் இன்றைக்கு பலரிடம் காமசக்தி குறைந்து காணப்படுகிறது. அதிலும் குறிப்பாக ஆண்மைத்தன்மை குறைந்து அவதிப்படுகிறார்கள். இதை தங்களுக்கு சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ளும் மருத்துவர்கள் பலர் அதை பணம் கொழிக்கும் வியாபாரமாக்கி கோடிகோடியாக குவித்து வருகிறார்கள்.

ஆண்மையைத் தூண்டும் எண்ணற்ற மூலிகைகள் இருக்கும்போது, தேவையில்லாமல் காசு பணத்தை ஏன் நாம் விரயமாக்க வேண்டும். பாலுணர்வைத் தூண்டும், நீர்த்துப்போன விந்து கெட்டிப்படச் செய்யும், நீண்டநேரம் செக்ஸ் உறவில் ஈடுபட வைக்கும் அந்த அற்புத மூலிகைகளைப் பார்ப்போமா?

மிகச் சாதாரணமாக உணவில் பயன்படுத்தப்படும் பூண்டு. வெள்ளைப்பூண்டு என்று அறியப்படும் அது பக்கவிளைவில்லாத ஒரு பாலுணர்வுத் தூண்டி என்பது நம்மில் எத்தனைபேருக்குத் தெரியும்? ஆண்மைக் குறைபாட்டால் பாதிக்கப்பட்ட, விரைப்புத்தன்மையைப் பராமரிக்க முடியாதவர்களுக்கு ஒரு டானிக்காகச் செயல்படுகிறது.

தினம் இரண்டு அல்லது மூன்று பூண்டுப்பற்களை வேகவைத்துச் சாப்பிடலாம். பச்சையாகவும்கூட சாப்பிடலாம்.

அடுத்ததாக, வெங்காயம் ஆண்மையை அதிகரிக்கச் செய்வதுடன், இனப்பெருக்க உறுப்புகளை வலுப்படுத்தும். ஆண் உறுப்பில் விரைப்புத்தன்மை ஏற்படாமல் துன்பப்படுபவர்களுக்கு வெங்காயம் ஓர் அருமருந்து. வெங்காயத்தில் எல்லாவகை வெங்காயமும் நல்லதுதான் என்றாலும் வெள்ளை வெங்காயத்தை பச்சையாகச் சாப்பிட்டு வந்தால் நிச்சயம் அதன் பலன் தெரியும். சாலட் ஆகவோ, சைட் டிஷ் ஆகவோ செய்து சாப்பிட்டுப் பாருங்கள்.

கேரட். சோர்வு அல்லது முன்கூட்டியே விந்து வருபவர்களுக்கு சரியான தீர்வைத் தரும். முட்டைகளுடன் கேரட் சேர்த்துச் சாப்பிடுவதால் ஒரு புதுமையான பாலியல் அனுபவத்தை நமக்குக் கொடுக்கும். 150 கிராம் கேரட்டை நன்றாகத் துருவி நன்றாக வேகவைத்த முட்டையில் அரைப் பங்கு எடுத்துச் சேர்க்க வேண்டும். அதனுடன் சிறிது தேன் சேர்த்து தினம் ஒன்று என ஒன்று அல்லது இரண்டு மாதங்கள் சாப்பிட்டால்போதும்.

வெண்டைக்காயில் வெண்டைச்செடியின் வேர்கள்தான் பாலியல் கோளாறுகளுக்கு உதவுகிறது. ஆயுர்வேத இலக்கியத்தின் கூற்றுப்படி, வெண்டையின் வேர்கள் பாலியல் வீரியம் இழந்தவர்களுக்கு மிகச்சிறந்த மருந்தாகும். ஒரு டம்ளர் பாலில் 5 அல்லது 10 கிராம் வெண்டைவேரின் தூளை சேர்த்துச் சாப்பிடவும். இதை தினமும் குடித்து வரவும்.

தண்ணீர்விட்டான் கிழங்கு. சதாவேரி என்ற பெயரிலும் அழைக்கப்படும் இதன் உலர்ந்த வேர், முன்கூட்டி விந்துவருதல் மற்றும் பல்வேறு பாலியல் கோளாறுகளுக்கு பயன்படுத்தப்படும் ஒரு பொதுவான மருந்து. ஒரு டம்ளர் பாலில் 15 கிராம் வேர்ப்பொடியைச் சேர்த்து கொதிக்கவைத்து காலை, மாலை என காபி குடிப்பதுபோல் குடித்தால் பலன் கிடைக்கும்.

முருங்கைக்காய். இது மிகவும் சக்திவாய்ந்த பாலுணர்வுத் தூண்டியாகும். ஆண்கள் மற்றும் பெண்களுக்கு ஏற்படும் மலட்டுத்தன்மையை போக்கக்கூடியதாகும். முருங்கை மரத்தின் உலர்ந்த பட்டை ஆண்மைக்குறைவு, முன்கூட்டி விந்து தள்ளல் மற்றும் விந்துக்குறைபாடு போன்ற பிரச்னைகளிலிருந்து விடுவிக்கும்.

150 கிராம் உலர்ந்த முருங்கை மரத்தின் பட்டைத்தூளை அரை லிட்டர்

நீர்விட்டுக் கொதிக்கவைக்க வேண்டும். சுமார் அரை மணி நேரம் கொதித்ததும் தேவையான அளவு எடுத்து ஒரு டீஸ்பூன் தேன் சேர்த்துக் குடிக்கலாம். ஒரு நாளைக்கு மூன்று முறை என மூன்று மாதங்கள் குடிக்க வேண்டும். முருங்கைப்பூ 15 கிராம், பால் 250 மில்லி பால் சேர்த்துக் கொதிக்க வைத்துக் குடித்தாலும் பலன் கிடைக்கும்.

இஞ்சிச் சாறு ஆண்மைக்குறைவு, முன்கூட்டியே விந்துத்தள்ளல் போன்ற பிரச்னைகளிலிருந்து விடுபட உதவும். இரவு தூங்கச் செல்வதற்குமுன், இஞ்சிச் சாறு அரை டீஸ்பூன் அளவு எடுத்து, வேகவைத்த முட்டை அரைப்பங்கு சேர்த்து சிறிது தேன் சேர்த்துச் சாப்பிட வேண்டும்.

உலர்ந்த பேரீச்சம்பழம் பாலியல் வீரியத்துக்குத் தேவையான கூடுதல் ஊக்கத்தைக் கொடுக்கிறது. சில உலர்ந்த பேரீச்சைகளை பாதாம் மற்றும் பிஸ்தா கொட்டைகளுடன் கலந்து அரைத்து தினமும் 100 கிராம் அளவு சாப்பிட வேண்டும்.

ஓரிதழ் தாமரை மூலிகையும்கூட அருமையான மருந்தாகும். இதைப் பொடியாக்கி 48 நாள் சாப்பிட்டு வந்தால் இழந்த ஆண்மைசக்தியைப் பெறலாம்.

ஓரிதழ் தாமரையின் தண்டு, வேர், இலை என எல்லாவற்றையும் எடுத்து நன்றாகப் பொடியாக்கி காலை, மாலை ஒரு டீஸ்பூன் எடுத்து பாலுடன் கலந்து சாப்பிடவேண்டும். திருமணமாவதற்கு ஒரு மாதத்துக்கு முன்பிருந்தே இதைச் சாப்பிட வேண்டும். இப்படிச் சாப்பிட்டால், தண்ணீர்போல் உள்ள விந்து கெட்டிப்படும், விந்தணுக்கள் அதிகமாகும், உடல் வசீகரமாகும். குறிப்பாக, ஆண்குறி அளவில் பெரிதாகி ஆண்மை அதிகரிக்கும். இதை மூலிகை வயாகரா என்று சொன்னால் மிகையாகாது.

பொதுவாக, டீன் ஏஜ் ஆண்கள் ஆபாசப்படங்கள் பார்த்து கைப்பழக்கத்தில் ஈடுபட்டு, தங்கள் சக்தியை வீணாக்கி உடல் மெலிந்து கன்னங்கள் ஒட்டி காணப்படுவார்கள். அவர்கள் இந்த மூலிகையைச் சாப்பிட்டால் இழந்த சக்தியைவிட பலமடங்கு பெறலாம்.

***